


# மறையின் மறைபொருள்

Sri Angiras



WEBOLIM

INDIA



# சமர்ப்பணம்

ஸ்ருதி, மேதை, ப்ரக்ஞ்யை, த்ருஷ்டி, க்ரது, ப்ராணன், யக்ஞம், ஸத்தியம், ஜோதி, ஆனந்தம், ஞானம் முதலிய மானுட தெய்வீக தத்துவங்களுக்கும்,

அக்னி, வாயு, வருணன், மித்திரன், இந்திரன், விஷ்ணு, இளை, ஸரஸ்வதீ, மஹீ, பாரதீ, உஷா, ஸோமன், ஸூர்யன், ருத்திரன், மருத்துக்கள், வஸுக்கள், ப்ரஜாபதி, ஹிரண்யகர்பன், விச்வகர்மா முதலிய தேவதைகளுக்கும்,

குதிரைகள், பசுக்கள், மற்ற ம்ருகங்கள், பறவைகள், மற்ற ஜந்துக்கள், மனிதர்கள், தேவர்கள், அருவிகள், நதிகள், வனங்கள், மலைகள், நக்ஷத்திரங்கள், ஸமுத்திரம், செடிகொடிகள், மரங்கள், செல்வங்கள், வானம், புவி, மேகங்கள் யாவற்றிற்கும்,

சுருக்கமாய் சொல்லப்போனால் மானுட தெய்வீக ஸாதனை செய்ய ஒருயர்ந்த ஸ்தலமாயுள்ள இப்பிரபஞ்சத்திற்கும், அதன் வாழ்விற்கும், இதுவெல்லாவற்றிலும் வ்யாபித்துள்ள பரம்பொருளுக்கும்,

நன்மக்களுக்கு நலம்புரிதலாகிய தருமம் என்னும் வாழ்விற்கும் இந்நூல் சமர்ப்பணம்.

அங்கிரஸர்களுக்கும், ப்ருகுக்களுக்கும், அதர்வர்களுக்கும், வசிஷ்டர், பரத்வாஜர், விச்வாமித்திரர், கௌதமர், அத்ரி, வாமதேவர்,அகஸ்தியர், லோபாமுத்திரை, அபாலா, வாகாம்ப்ருணீ முதலிய ஸூக்ஷ்மதரிசிகளாகிய ஸூக்ஷ்மதரிசினிகளாகிய முனிவர்களுக்கும்,

உபநிடதங்களால் வேதத்தை விளக்கிய தத்துவ தரிசிகளுக்கும், யாஸ்கர் முதலிய நிருக்தகாரர்களுக்கும், ஆபஸ்தம்பர், போதாயனர், ஆச்வலாயனர் முதலிய ஸூத்திரகாரர்களுக்கும், சடங்குகள்பரமாக வேதத்திற்கு பொருள் காட்டிய சபரர், குமரிலபட்டர், மண்டனமிச்ரர், ப்ரபாகரர், முதலியோருக்கும், இவர்களின் வழிகாட்டியான ஜைமினிக்கும், வேதபாஷ்யம் எழுதிய ஸாயணர் முதலியோருக்கும்,

வேதத்திற்கு உரை எழுதிய வெளிநாட்டவர்களான வில்ஸன், மேக்ஸ்முல்லர், கீத், க்ரிபித் முதலியோருக்கும்,

வேதஸம்ஹிதையை வெறும் க்ரியாகாண்டம் எனக்கருதாமல் அது உபாஸனைக்கும் ஞானத்திற்கும் தெளிவான விளக்கமாய் உள்ளது என்பதை அழகாய் தனது ரிக்வேதநிருக்தியில் விளக்கிய மத்வாசார்யருக்கும், அவரின் வழிகாட்டியான வ்யாஸருக்கும்,

தமிழில் வேதப்பணியாற்றிய, வேதவிஜ்ஞானம் இயற்றிய என் திருத்தந்தையான ஸ்ரீஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் என்கிற R.K.சாஸ்திரீகள், சிவத்யானானந்தர், ஜம்புநாத ஐயர், முதலிய பெரியோர்களுக்கும்,

யோகபரமாக வேதத்திற்கு தெளிவான பொருள் கூறிய பூர்ணயோகாசார்யரான ஸ்ரீமதரவிந்தயோகிக்கும், அவரை அனுஸரித்தே வேத உரையளித்த கபாலிசாஸ்திரீகள், வாமதேவசாஸ்திரீகள், M.P. பண்டிதர் முதலியோருக்கும்,

வேதத்திற்கு தனது வாழ்வையே ஒரு விளக்கமாய் அருளி வேதவாழ்வை வாழ்ந்து வேதத்தை எளிதாக்கிய ராமனுக்கும், இந்நூல் சமர்ப்பணம்.

இதுவரை இருந்த இனி இருக்கப்போகும் சாமானியர் களுக்கும் ஸாதகர்களுக்கும் ஞானிகளுக்கும் இந்நூல் சமர்ப்பணம்.

இந்நூலைப் படித்து பயன்பெறப்போகிறவர்களுக்கும் இந்நூல் ஸமர்ப்பணம். இந்நூலால் சிறிதேனும் பயன்பெறப் போகிறவர்கள் இந்நூலைப் பெற்றுக்கொள்ளலாம். மற்றோர்கள் பெறவேண்டாம்.



सं गच्छध्वं सं वदध्वं सं वो मनांसि जानताम् ।
देवा भागं यथा पूर्वे संजानाना उपासते ।।

-ऋग्वेदः

यथेमां वाचं कल्याणीमावदानि जनेभ्यः ।
ब्रह्मराजन्याभ्यां शूद्राय चार्याय च स्वाय चारणाय ।।

- यजुर्वेदः





# மறையின் மறைபொருள்

## முதலுரை

நிறைமொழி மாந்தர் ஆணையிர் கிளந்த
மறைமொழிதானே மந்திரமென்ப

– தொல்காப்பியம்

வடஅமெரிக்கப் பல்கலைக்கழகங்களில் மிக முக்கியமாய் கருதப்படும் பாடநூல்களில் ஒன்றான survey of Hinduism எனும் நூல் ஆரிய திராவிட இனப்பாகுபாட்டுத்தியரியை வன்மையாய் கண்டிக்கிறது. இந்தியர்கள் யாவரும் ஒரே இனத்தைச் சார்ந்தவர்களே. அவர்கள் அங்கேயே வசித்து வந்தவர்கள். எங்கிருந்தும் வந்து குடியேறினவர்கள் அல்ல எனக் கூறுகிறது. ஆரியதிராவிடப் பாகுபாடு எனும் கட்டுக்கதை நம்மை என்றென்றைக்கும் பிரித்து வைக்க பரங்கியரால் அவர்களின் ஆட்சிகாலத்தில் ஏற்படுத்தப்பட்ட சூழ்ச்சி. ஆனால் முட்டாள்களான நாம் துர்பாக்கியத்தால் இதை விதைத்தவர்களை ரிஷிமுனிவர்களாயும் வசிஷ்டர்களாயும் அருந்ததிகளாயும் மோக்ஷமூலர்களாயும் கருதிவருகிறோம். இவர்கள் கண்ட அடிப்படையிலேயே வேதத்தைக் காண்கிறோம். இவ்விதப் பரங்கியக் கோட்பாட்டையே அடித்தளமாய் கொண்டு சில இந்தியர்களும் செயல்பட்டனர். இவர்கள் உண்மையில் இந்தியாவை ஒருநாடாகவே கருதாமல் வாழ்வுமுழுவதும் அதன் தேசத்துவத்தைச் சேதப்படுத்தப் பாடுபட்ட தேசத்ரோஹிகள். இவர்கள் நமது செந்தமிழையும் காட்டுமிராண்டி மொழி என்றும் நியூஸன்ஸ் என்றும் சனியன் என்றும் ஊர்ஊராகப் பிரசாரம் செய்தவர்கள். நமது கலாசாரம்மிக்க உயர்ந்த செந்தமிழ் இருக்க குடும்பங்களிலும் வேலையாட்களிடமும் ஒவ்வொரு தமிழனும் பரங்கியர் மொழியிலேயே பேசிப்பழகும்படி வலியுறுத்தினவர்கள். நம் செந்தமிழை வளர்க்க எண்ணும் தமிழ்புலவர்களை தன் எதிரிகளாய் கருதினவர்கள். ஆங்கில எழுத்துக்களையே செந்தமிழுக்குக் கொண்டுவர எண்ணினவர்கள். இவ்வாறுத் தமிழ்துரோகிகள். பரங்கியகலாசாரத்தையும் மொழியையும் எப்படியாவது எங்கும்

தமிழகத்தில் புகுத்த முயன்றவர்கள். இவ்வாறான தமிழ்துரோக தேசத்துரோக பண்பாட்டுத்துரோக சமூகத்துரோக விஷயங்களையே உயிர்நாடியாய் கொண்ட காட்டுமிராண்டிகளையே சான்றோர் களாயும் சமூகமுன்னோடிகளாயும் நம்பிகெட்டோம் தமிழர்களான நாம். வள்ளுவமும் தொல்காப்பியமும் எந்த மறைகளை புகழ்கின்றனவோ அதை வெறுத்தவர்களையே தமிழைக் காக்கவந்தவர்களாய் நம்பிக் கெட்டோம்.

**தொல்பொருள் அத்தாட்சி -**

பழைய பரங்கிய ஆராய்ச்சியாளர்கள் ஆரியத்திராவிடப் பாகுபாடு என்ற கட்டுக்கதையை அமைக்க அத்தாட்சிகளைத் தேடினர். தொல்பொருள் அத்தாட்சியாவது ஹரப்பா எனும் புராதன நகரம். அது இன்று அழிந்தே காணப்படுகிறது. அதை அழித்தவர்கள் ஆரியர்களாம். இவர்கள் மத்தியஆசியாவிலிருந்து ஆடுமாடு மேய்த்துக்கொண்டு இங்கு கைபர் போலன் கணவாய்கள் மூலம் வந்தனராம். இங்கு கலாசாரம் மிக்கத்திராவிடர்கள் ஹரப்பாவில் இருந்தனராம். இவர்களை ஆடுமாடுமேய்க்கும் ஆரியர்கள் வென்று இப்பெரும் ப்ரதேசத்தை அழித்தனராம். திராவிடர்களையும் அடிமைப்படுத்திக் கொண்டனராம். ஹரப்பர்களிடம் குதிரைப்படை இல்லையாம். ஆரியர்கள் குதிரைப்படைக் கொண்டவர்களாதலால் ஹரப்பர்களை வெல்லமுடிந்ததாம். அவர்களின் மொழியைப் பயின்று அம்மொழியிலுள்ளக் கருத்துக்களையே தங்கள் ஸம்ஸ்க்ரு தத்தில் மொழிபெயர்த்துக் கொண்டனராம். இவ்வாறே ஹரப்பம் அழிந்தது என பழையப்பரங்கியர்களின் ஆராய்ச்சி.

**இலக்கிய அத்தாட்சி -**

மேலும் இலக்கிய அத்தாட்சிகளைத் தேடினர். வேதத்தில் தேவர்கள் யாவரும் ஆரியர்களாம். அஸுரர்கள் யாவரும் திராவிடர் களாம். தேவர்கள் அஸுரர்களைக் கொன்றதாய் கூறப்படும் வர்ணனைகள் ஆரியர்கள் திராவிடர்களைக் கொன்றதாம். ராமாயணத்தில் ராமன் ராவணனைக் கொன்றது ஆரியன் திராவிடனைக் கொன்றதாம்.

மொழியியல் அத்தாட்சி -

ஸம்ஸ்க்ருதம், க்ரேக்க இலத்தீனாதி ஐரோப்பியமொழி வடிவமைப்பில் உள்ளதால் அது அங்கிருந்து இங்கு வந்த மொழியாம். திராவிடர்களின் மொழியமைப்பு வேறு ஆதலால் அது இங்கேயே இருப்பதாம்.

நிற அத்தாட்சி -

ஆரியர்களின் நிறம் வடஇந்தியர்களின் நிறம். திராவிடர்கள் தென்னிந்தியக் கருநிறமாம்.

மத அத்தாட்சி-

திராவிடமதம் சைவமாம். ஹரப்பாவில் சிவலிங்கங்கள் காணக் கிடைக்கின்றனவாம். ஆரியமதம் வைதிகமாம். ஹரப்பாவில் வேள்விக்குண்டங்கள் காணக்கிடைக்கவில்லையாம்.

இவ்வாராய்ச்சியையே உண்மை என இந்திய வரலாற்று ஆசிரியர்கள் பலரும் நம்பியதோடு மட்டுமல்லாமல் அவ்வாறு நம்புவதையே பரந்தநோக்காக எண்ணினர்.

தொல்பொருள் அத்தாட்சி -

ஆனால் இது யாவற்றையும் புத்தம்புதிய ஆராய்ச்சிகள் அப்பட்டமானப் பொய் என நிரூபிக்கின்றன. நவரத்தினராஜாராமன், டேவிட்ப்ராலே, ஸுபாஷ் காக், கோல்ஸ்டமேயர், சாந்தா செல்கே, பகவான் ஸிங்க் முதலிய பல இந்தியர்களும் விதேசிகளும் புத்தம்புதிய ஆராய்ச்சிபூர்வகமாக பழையத்தியரிகளை கிழித்தெறிந்தனர். ஆடுமாடுமேய்த்து வந்தப்பழங்குடியினர் எப்படி ஒரு நகரத்தை அழிக்கமுடியும். மிகவும் நாகரீகமான காலத்தில் எல்லா வசதிகளும் பெற்ற அலெக்ஸாண்டரே இந்தியாவரை பரிஸ்ரமப்பட்டு வந்து வழியில் உள்ள க்லைமெட்டைத் தாங்கமுடியாமல் செல்லுகையில் வ்யாதியால் மாண்டார் எனில் தன் ஸேனைகளில் பலரை இழந்தார் எனில் எப்படி வசதியற்றக் காட்டுமிராண்டிகள் தங்கள் ஆடுமாடுகளையும் ஓட்டிக்கொண்டு இவ்வளவுதூரம் வந்திருக்கமுடியும்? அப்படி வந்திருந்தாலும் எப்படி இவ்வளவு பெரியஹரப்பத்தை வசதியற்ற காட்டுமிராண்டிகள் சிதைத்திருக்கமுடியும்? அப்படி சிதைத்திருந்தாலும் எப்படி

திராவிடர்களோடு பழகி அவர்கள் மொழிகளில் நிபுணர்களாகி அவர்களின் கருத்துக்களை ஏற்று தன் மொழியான ஸம்ஸ்க்ருதத்தில் மொழிபெயர்க்கும் பாங்கு காட்டுமிராண்டிகளுக்கு வந்தது? காட்டுமிராண்டிகளுக்கு அடுத்தவன் கருத்தை ஏற்கும் பாங்குண்டா? இக்கட்டுக்கதையை எப்படி நம் பகுத்தறிவுவாதிகள் நம்பினர் என்பது வியக்கத்தக்கதே.

புத்தம்புதிய ஆராய்ச்சியின்படி ஹரப்பாவில் ஸரஸ்வதிநதி ஓடியிருக்கிறது. அந்த நதி பெரியதாய் ஓடியதாயும் அது காலப் போக்கில் குறுகிவிட்டதாயும் நாளடைவில் வற்றிவிட்டதாயும் பழங்கால ஸம்ஸ்க்ருத இலக்கியங்களில் காணக்கிடைக்கின்றன. நாளடைவில் அது வற்றியதால் ஹரப்பாவில் உள்ள மக்களே அங்கிருந்து மெல்ல கங்கை யமுனை எனக்குடியேறினர். இங்கு ஹரப்பாவில் சேதம் ஏற்பட்டதற்கோ படுகொலைகள் நடந்ததற்கோ இன்று எந்த அத்தாட்சியுமில்லை. அது நதி வற்றிப்போனதால் விடப்பட்ட ப்ரதேசம். மிக்க நாகரீகமும் காலாசாரமும் கொண்டு விளங்கிய ப்ரதேசம் இது. வேதப்படியே இதன் மக்கள் வாழ்ந்தனர் என்பதற்கு பற்பலயக்ஞகுண்டங்கள் இங்கு காணப்படுகின்றன. புதிய ஆராய்ச்சியாளர்களால் குதிரை எலும்புகளும் காணப்பட்டு ஹரப்பர்கள் குதிரைப்படை கொண்டவர்களே என நிரூபிக்கப்பட்டுள்ளது.

**இலக்கிய அத்தாட்சி -**

வேதத்திலும், ஜந்தாவஸ்தா போன்ற மற்ற பல புராதன ஆன்மிக இலக்கியங்களிலும் தேவர்கள் அஸுரர்கள் எனப்படுபவர்கள் நற்சக்திகளும் தீயசக்திகளுமேயன்றி இவர்கள் இனங்களாகக் கூறப்படவில்லை. இவர்களை இனங்களாக விவரிக்க வேதத்தில் எந்தவித அத்தாட்சியும் சிறிதும் காணப்படவில்லை என்பதோடு மட்டும் அல்லாமல் எந்தப் பழந்தமிழ் இலக்கிய ஆதாரமும் ஆரியதிராவிட இனப்பாகுபாட்டிற்கு இல்லை. இவ்வாறு இரு இனங்கள் இருந்ததாகவும் ஆரியர்கள் வந்தேறிகள் என்பதாகவும் தொல்காப்பியம் போன்ற எந்தப் புராதன தமிழ் இலக்கியங்களிலும் காணக்கிடைக்கவே இல்லை.

மொழியியல் அத்தாட்சி -

ஆரியன் எனும் ஸம்ஸ்க்ருதச் சொல் எவ்விலக்கியத்திலும் இனத்தைக் குறிப்பதாயமையாமல் சான்றோன் என்னும் பொருளைக் கொண்டதாய் அமைகிறது. ஆதலால்தான் பௌத்தமும் ஜைனமும் தங்களை ஆரியமதங்களாய் குறிப்பிட்டுக்கொள்கின்றன. ராமாயணத்திலும் ராவணனை அவனின் மனைவியர் ஆரியபுத்திர எனும் சொல்லால் அழைப்பதை யுத்தகாண்டத்தில் காண்கிறோம். ராவணனும் ஆரியர்கள் அல்லாதோருடன் நட்பு கூடாது என்றும் ஆரியர்கள் அல்லாதோர் நன்றிகெட்டவர்கள் நயவஞ்சகர்கள் என்றும் கூறுகிறான். இங்கும் சான்றோர்களையே குறிக்கிறான். ராவணன் திராவிடர்களைத் திட்டுகிறான் என்று பொருள்கொள்ளக் கூடாது. ராவணன் திராவிடனல்லன். இதற்கு ராமாயணத்திலேயே தக்க ஆதரங்கள் உள்ளன.

இங்குள்ள சீதோஷ்ண நிலையில் வளரப்பழகியவர்கள் அக்காலத்திலேயே ஐரோப்பா வரை பயணம் செய்கையில் உள்ள க்லைமெட்டைத் தாங்க முடியும். ஆனால் அவ்வித சக்தி அங்குள்ள க்லைமெட்டில் வாழ்பவர்களுக்குக் கிடையாது. ஆதலால் இங்கிருந்தவர்களே அங்கு சென்றிருக்கின்றனர். ஆதலாலேயே இந்நாட்டு மொழியான ஸம்ஸ்க்ருதச்சாயலை ஐரோப்பிய க்ரேக்கஇலத்தீனாதிகளில் காணமுடிகிறது. நம் நாட்டிலும் மக்கள் மிகவும் இலக்கண வல்லுனர்களாக இருந்த படியால் இருவித மொழிவடிவு மரபுகளைக் கொண்டிருந்திருந்தனர். ஒன்று தமிழ் மரபில் மொழியமைப்பு.மற்றொன்று ஸம்ஸ்க்ருதமரபில் மொழி யமைப்பு. இவ்விரண்டையும் எப்படி ஒரே இனம் கொள்ள முடியும் எனச் சந்தேகிக்க வேண்டியதில்லை. ஏனெனில் இவ்வினத்தின் ஸம்ஸ்க்ருத தமிழ் மரபுகளைச்சார்ந்த இலக்கண நூல்களைக் கண்டால் இவர்கள் எந்த அளவிற்கு இலக்கண நிபுணர்களாகவும் மொழிவல்லுனர்களாகவும் இருந்தவர்கள் எனத் தெரிய வருகிறது. ஆதலால் இவர்களால் இரு மொழிமரபுகளையும் ஒருங்கே கொண்டிருந்திருக்க முடியும். இது புத்தம்புதிய ஆராய்ச்சியின் கருத்து.

**நிற அத்தாட்சி-**

பழைய நிறஅத்தாட்சி தவறானது. ஏனெனில் ஒரே இனமே பலநிறங்களில் தட்பவெட்பத்திற்கேற்றவாறு மாறக்கூடும். அவ்வாறு மாறியும் உள்ளது. நிலநடுக்கோட்டிற்கு அருகே வரவரக் கருமையாவ்தாலும் அங்குள்ள தட்பவெட்பநிலைக்கேற்றவாறும் நிறம் உரு மாறுபடும். அவ்வாறே தென்னிந்தியர்களின் உருவும் நிறமும் வடஇந்தியர்களைவிட சற்று மாறுபட்டதாகத் தென்படுகிறது. இதனால் இவ்விருவரையும் இரு இனங்கள் எனக்கூறமுடியாது. வட தென் ஐரோப்பியர்களிடமுமே நிறவுருபேதங்கள் காணக் கிடைக்கின்றன என்பதால் இவ்விரு மக்களையும் வெவ்வேறு இனங்களாய் கூறமுடியுமா? ஒருபஞ்சாபி ஒரு மஹாராஷ்ட்ரியன் ஒருதமிழன் என மூவரைக் கண்டால் நிறத்தாலும் உருவாலும் மஹாராஷ்ட்ரியன் மற்ற இருவருக்கும் நடுவே இருப்பான். வடக்கிலிருந்து தெற்கு வரை நிறத்தில் படிப்படியான மாற்றம் உண்டு. இதைக் கொண்டு இரு இனங்கள் இருந்ததாய் கருதக் கூடாது. என்பது புத்தம்புதியஆராய்ச்சியின் கருத்து.

**மத அத்தாட்சி-**

இந்தியா முழுவதும் ஒரே வைதிகமதமே இருந்திருக்கிறது. சைவம் உட்பட யாவும் வைதிகமதத்தில் அடக்கம். சைவநூல்களே வேதத்தைப் போற்றுகின்றன. வேதம் இறைவனால் ஞானியருக்குத் தரப்பட்டதாய் சைவம் கூறுகிறது. மேலும் சைவம் தமிழகத்தின் சித்தாந்தம் மட்டிலும் இல்லை. அது இந்தியா முழுவதிலும் உள்ள ஒன்றாகும். தமிழகத்திலும் சைவம் மட்டிலும் தானிருந்தது என எண்ண வேண்டாம். வைணவம் முதலிய மற்றவைதிகஸித்தாந்தங் களும் இருந்திருக்கின்றன. இருக்கவும் செய்கின்றன. இவ்வாறு இருக்கையில் திராவிடர்களின் மதம் சைவம் என்றும் ஆரியர்களின் மதம் வைதிகம் என்றும் பிரிப்பது மிகப்பெரிய பிழையாம். வடஇந்தியர்களுக்கும் தென்னிந்தியர்களுக்கும் பழக்கவழக்கங்களி லும் சடங்குகளிலும் வழிபாடுகளிலும் பேதங்கள் தென்படுகின்றன. இதைக் கொண்டு இருவரும் வெவ்வேறு மதத்தவர்கள் எனக்கூறுவதற்கில்லை. இந்தியக்கிறித்துவர்களுக்கும் மேல் நாட்டுக்கிறித்துவர்களுக்கும் பலபேதங்கள் உள்ளன. இந்திய

கிறித்துவர்கள் வேளாங்கன்னியில் மொட்டையடித்துக் கொள்கின்றனர். அமெரிக்க கிறித்துவர்களோ சர்ச்சுக்கே பெரும்பாலும் போவதில்லை. இதனால் இவ்விருவரும் இரு மதங்களைச் சார்ந்தவர்கள் எனக் கூறமுடியுமோ? ப்ராடஸ்டன்டுகள் வேறுமதம் கத்தோலிக்கர்கள் வேறுமதம் எனக் கூறமுடியுமோ? சையாக்கள் வேறுமதம் சன்னிகள் வேறுமதம் எனக்கூற முடியுமோ? சைவத்திலேயே கர்னாடகசைவர்களின் வழிபாடுகளும் சடங்குகளும் பழக்கவழக்கங்களும் காஷ்மீர் சைவர்களின் பழக்க வழக்கங்களும் தமிழ் சைவர்களின் பழக்கவழக்கங்களும் பற்பலவாய் மாறுபட்டு உள்ளன. இதனால் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு மதமாயும் ஒவ்வொரு இனமாயும் நினைப்பது எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனமாகும்.

இந்தியாமுழுவதும் ஒரே வைதிகக் கொள்கைதான் பல முறையில் வேறுபட்டுக் காணக்கிடைக்கிறது. தமிழர்களும் வைதிகப் பண்பாட்டையே பெறும்பாலும் சார்ந்தவர்கள். தொல்காப்பியர் வேதத்தைப்போற்றியதோடு மட்டுமல்லாமல் வேதவாழ்வின் ஸாரமான தருமத்தின் அடிப்படையிலேயே கலாசாரத்தைப்பற்றிப் பேசுகிறார். பரிபாடல் மற்றும் பலபழைய இலக்கியங்களில் வேததெய்வங்களான இந்திரன் அக்னி முதலிய தேவர்களே கூறப்படுகின்றனர். தமிழர்கள் வேள்வி நடத்துபவர்கள். அக்னி யையும் வருணனையும் ருத்திரனையும் விஷ்ணுவையும் வணங்கியவர்கள். ஸத்தியம் பரோபகாரம் ஜீவகாருண்யம் முதலிய வேததர்மங்களைக் கொண்டவர்கள். ஐயன்திருவள்ளுவர் வேதத்தைப்போற்றுகிறார். இந்திரனையே பண்பாட்டிற்கும் புலனடக்கத்திற்கும் எடுத்துக்காட்டாய் கூறுகிறார். வேதவாழ்வையும் அறநெறிகளையுமே கூறுகிறார். தமிழர்களின் வேதவழிபாட்டைப் பற்றி ஆங்காங்கே பலநூல்களிலிருந்து ***மறையின் மறைபொருள்*** எனும் இந்நூலிலே மேற்கோள் காட்டப்படுகிறது.

நாம் ஒருவருக்கொருவர் சண்டைபோட்டு நமது பெரிய கலாசாரத்தை நாமே ஒருவருக்கொருவர் போட்டிப் போட்டுக் கொண்டு கெடுத்தொழிக்கவேண்டும் என்று சூழ்ச்சிபண்ணி சில குருட்டு ஆராய்ச்சியாளர்கள் ஆரியதிராவிடத்துவேஷத்தைக் கற்பித்தனர். அதையே சிலதிருட்டுகும்பல்கள் பரப்பி அப்பாவி

மக்களை ஏமாற்றுகின்றனர். இவ்விரு குருட்டு திருட்டு வர்கங்களும் தமிழையும், அதன் பண்பாட்டையும் காட்டுமிராண்டித்தனம் என்றும் நியுஸன்ஸ் என்றும் சனியன் என்றும் கருதியுள்ளனர். ஆனால் இவர்களைத்தாம் நாம் நமது பண்பாட்டின் காவலாளர்களாக நினைத்திருந்தோம். ஆனால் இப்போது அப்பிசகிலிருந்து மெல்ல மெல்ல விழித்தெழுகிறோம்.

இவர்களின் துஷ்பிரசாரங்களும் மெல்ல மெல்ல ஓயும் காலமிது. வேதத்தைக் காட்டுமிராண்டி நூல் எனக்கூறும் மடையர் களே! அந்நூல் எப்படிப்பட்டக் காட்டுமிராண்டிகளால் இயற்றப் பட்டது? கணிதத்தையும் வானவியலையும் துல்லியமாய் விளக்கிய வர்களா காட்டுமிராண்டிகள்? விஞ்ஞானிகளும் கண்டறியா அரும் மெய்ஞானத்தை ப்ரபஞ்சமஹாசக்தியின் ஆதாரத்தை கண்டறிந்து விளக்கியவர்களா காட்டுமிராண்டிகள்? சிற்பசாத்திரங்களிலும் வைத்தியசாத்திரங்களிலும் நுட்பமானத் தத்துவங்களைக் கூறி நமக்கு சிற்பத்தையும் ஆயுர்வேதத்தையும் தந்தவர்களா காட்டுமிராண்டிகள்? மனித நேயத்தையும் வாழ்வின் இலக்கையும் வாழ்வையும் யோகத்தையும் தந்தருளியவர்களா காட்டுமிராண்டிகள்?

நாம் நமது பண்பாட்டையும் அதன் உயிர்நாடிகளையும் அவைகளின் தற்போதையத் தேவையையும் ஐயந்திறிபற அறிய வேண்டும் . இதற்கு வித்துகள் வேதத்திலே உள்ளன. ஆதலால் வேதத்தை அறிந்தாகவேண்டும். இல்லாவிடில் அறிவிலிகளின் அற்பக்கருத்துக்கு நாம் இரையாகி நாம் நம்மையே அழித்துக் கொள்வோம். நமது கலாசாரம் மிகமிகப் பழமையானது. அதன் ஆதியை எந்தஆராய்ச்சியாளனும் கூறமுடியவில்லை. பழங்காலம் தொட்டு இன்றுவரை தடையின்றி தொடர்ச்சியாய் நம் கலாசாரம் இருப்பதில் நாம் பெருமை கொள்ள வேண்டும்.

தொல்காப்பியர் அகத்தியர் துவங்கி புதியகாலத்து சாமிநாத ஐயர் பாரதிவரை தமிழை அரும்பாடுபட்டு வளர்த்தோர் பலர் வைதிகப்பண்பாட்டைத் தம் உயிர்நாடியாய் கொண்டவர்கள் என்பது கவனிக்கத்தக்கது.

பண்டைய காலத்துத் தமிழர்கள் வேள்விநடத்தியவர்கள். இந்திரன் வருணன் வாயு அக்னிமுதலிய வேததேவர்களை வழிபட்டவர்கள். அறநெறிகள் கொண்டவர்கள். ஓதாமல் ஒருநாளும்

இருக்க வேண்டாம், அறம் செய்யவிரும்பு முதலிய வார்த்தைகள் தமிழகத்தின் உயிர்நாடிகள். *வேதம் நிறைந்த தமிழ்நாடு* என்கிறார் பாரதி. அகத்தியரே முதலில் தமிழுக்கு இலக்கணம் செய்ததாய் கூறப்படுகிறது. வேதத்தில் சில மந்திரங்கள் அகத்தியர் கண்டறிந் தனவாகும். தெய்வீகவுணர்விற்கு எப்படிச் செல்லமுடியும் என்கிற மந்திரங்களை அகத்தியர் வேதத்தில் உறைக்கிறார். அவை பின்பு இந்நூலிலேயே விளக்கப்படுகிறது. அந்த வேத அகத்தியரும் இவ்வகத்தியரும் ஒன்றாயுமிருக்கலாம்.வெவ்வேறாயுமிருக்கலாம். அது இங்கு முக்கியமில்லை. ஆனால் தமிழர்களுக்கு மந்திரங்களைக் கண்ட அகத்தியரின் திருநாமத்தைச் சூட்டிக் கொள்ளும் வழக்கம் இருந்திருக்கிறது என்பது இவ்வகத்தியரால் தெளிவாகிறது.

*ஆதிசிவன் பெற்றுவிட்டான் – என்னை*
*ஆரிய மைந்தன் அகத்திய னென்றோர்*
*வேதியன் கண்டு மகிழ்ந்தே – நிறை*
*மேவும் இலக்கணஞ்செய்து கொடுத்தான்.*
*மூன்று குலத்தமிழ் மன்னர் – என்னை*
*மூண்டநல் லன்போடு நித்தம் வளர்த்தார்*
*ஆன்ற மொழிகளினுள்ளே- உயர்*
*ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்தேன்.*

என பாரதி தமிழ்த்தாய் கூறுவதாகக் கூறுகிறார். தெய்வமே தமிழைத் தந்ததாயும் அதுவே தெய்வீகமானதாயும் பண்டைய தமிழர்கள் கருதுவர். இங்கு ஆரியன் என்று பாரதி சான்றோன் என்றப் பொருளைக்கொண்டு குறிப்பிடுகிறார். ஸம்ஸ்க்ருதத்தையும் மேன்மையான மொழி எனக்கருதியே அதை பண்டைய தமிழர் ஆரியம் என்றனர்.

*அறம்புரிகொள்கை நான்மறை முதல்வர்*
*திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி* என்று புறநானூற்றிலும்

*சாமகீத மற்றுமொன்று சாமி நன்கு பாடினான்*
என்று சீவகசிந்தாமணியிலும்,
*முத்தீச் செல்வத்து நான்மறைமுற்றி* என்று சிலப்பதிகாரத்திலும் மற்றும் பண்டைய தமிழ்நூல்கள் பலவற்றிலும் வேள்விகளும்

முத்தீக்களும் தருப்பைகளின் வருணனைகளும் தென்படுகின்றன. திருமங்கையாழ்வார் போன்ற ஆழ்வார்களும், சம்பந்தர் போன்ற நாயன்மார்களும் வேதத்தை நன்குப்போற்றியவர்கள். தமிழ் இலக்கியங்களில் அந்த அந்த தமிழ் நகரங்களிலும், கிராமங்களிலும் இருந்த வேதப்பண்பாடுகள் அறநெறிகள் வழிபாடுகள் முதலியன தெளிவாகக் கூறப்படுகின்றன. இவ்வாறே தமிழகம் பற்பல வேத பாடசாலைகளை நடத்தி பலவேதம் ஓதுபவர்களை உருவாக்கியது. தமிழகம் இன்று வரை சொற்பிழையும், ஒலிப்பிழையும் அற்றுத் தெளிவாக வேதம் ஓதும் பலரைக் கொண்டுள்ளது. பாரதியும் வைதிககலாசாரத்தையும், அதன் அறநெறிகளையும் மீண்டும் கொண்டுவர வேண்டுமென்றே பலபாடல்களில் விரும்புவதைக் காணலாம். *தீ வளர்த்திடுவோம்* எனப்பாடினார் பாரதி. புதிய காலத்திலும் வேதத்தொண்டாற்றிய தமிழர்கள் உள்ளனர்.

**ஜம்புநாத ஐயர்** வேதம்முழுவதற்கும் தமிழாக்கம் செய்தவர். இதுவொரு அரும்பணி. **சிவத்யானானந்தமஹர்ஷி** ரிக்வேத மந்திரங்களை செய்யுள் வடிவிலேயே மொழிபெயர்த்தார். **ஜம்புநாத ஐயர் வேதசந்திரிகை** என்ற நூலை இயற்றியுள்ளார். **கபாலிசாஸ்திரிகள்** ரிக்வேதத்தில் வரும் அக்னி தேவனைப்பற்றிய மந்திரங்களுக்குத் தமிழாக்கமும், அவ்வாறே அக்னியின் தத்துவ விளக்கமும் செய்துள்ளார். **காசிவாசி சிவானந்தயதீந்த்ர ஸ்வாமி**களால் க்ருஷ்ணயஜுர்வேதம், ஸாமவேதம் முழுவதும் பதம்பதமாய் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பதமும் அதனதன் தமிழ்மொழிபெயர்ப்பும் செய்யப்பட்டது. டி.பி ராமஸ்வாமி பிள்ளை இதன் போஷகர். **R.K.சாஸ்திரி** அவர்களால் **வேதவிஜ்ஞானம்** எனும் உயர்ந்த நந்நூல் இயற்றபட்டது. அது பிரஸித்திபெற்றும் போற்றப்பட்டும் பலரால் படிக்கப்பட்டும் வருகிறது.

இன்று உங்கள் கைகளில் தவழுகிற *மறையின் மறைபொருள்* என்னும் இந்நூல் வேதத்தின் உட்கருத்தை விளக்குவதற்காக எழுதப்பட்டது. வேதத்தைப் பற்றிய பலத்தவறானக் கருத்துக்கள் நிலவியுள்ள இத்தமிழகத்தில் வேதத்தின் உள்ளிதயத்தை நாம் நன்கு அறிதல் வேண்டும். ஏனெனில் அதிலேயே நம் உயர்ந்த பண்டைய பண்பாட்டின் புதிர்களின் விளக்கங்களும் உயிர்நாடிகளும் விதைகளும் உள்ளன. அவைகளை நாம் அறிவது நம் கடமையாகிறது.

மானுடம் என்பது என்ன? தெய்வீகம் யாது? மரணத்தின் பிறகு உள்ள வாழ்வை எப்படி இவ்வாழ்வு நிர்ணயிக்கிறது? வாழ்வியல் என்பது யாது? அறம் யோகம் என்பன என்ன? என்பவை இந்நூலில் விளக்கப்படுகின்றன. வேதம் ஸ்வயம் ப்ரமாணமாகிறது. மற்றப் பட்டாங்குகள் வேதத்தையே ப்ரமாணமாய் கொண்டவை. வேதப்பட்டாங்கோ சுயம் ப்ரமாணமாய் விளங்குவ தாம். அதிலிருந்து பண்பாடு வந்தது எங்ஙனம்? மனிதநேயம் பிறந்தது எங்ஙனம்? தெய்வீகம் அவதரிப்பது எங்ஙனம்? இவை யாவும் விளக்கப்படுகிறன. மறையின் மறைப்பொருள் விளக்கப் படுகிறதோடு மட்டுமல்லாமல் மற்றப் பட்டாங்குகள் இதிலிருந்து வந்தவையே என்பதும் விளக்கப்படுகிறது. ஆங்காங்கே சைவ வைணவக்கோட்பாடுகளுக்கு மறையிலுள்ள ஆதாரங்களும் கீதையின் ரகசியங்களும் ராமனின் மானுட தெய்வீகவாழ்வின் ரகசியங்களும் பதினொன்றாம் கட்டுரையில் மறையில் மறைந்து கிடக்கும் வேதாந்தக் கருத்துக்களும் சகல உபநிஷத்துக்களின் கருத்துக்களும் விளக்கப்படுகின்றன. இரண்டாம் பகுதியான யஜுர்வேதத்தில் வேள்விச்சடங்குகளின் ரகசிய அர்த்தங்கள் விளக்கப்படுகின்றன. வேதத்தில் இன்றுள்ள ஸித்தாந்தங்களின் கருத்துக்களும் அதற்கு மேற்பட்டப் பலகருத்துக்களும் புதைந்து கிடக்கின்றன.

மானுடத்தை தெய்வீகமாக்கவல்ல யோகம் வேதத்திலேயே விஸ்தாரமாகவும் தெளிவாகவும் உள்ளது. அவ்வாற்றலை நாம் அவசியம் பயின்றால் நாம் தெய்வீகத்தைப் பெறுவோம். இதனால் இந்நூலைப் படித்து வேதத்தைப் பற்றிய தவறானக் கருத்துக்களை மனதிலிருந்து நீக்கி வேதத்தின் உண்மைக்கருத்துக்களை நன்கறிந்து அவைகளை நடத்தையிலும் மனதிலும் திறன்படக் கொண்டு தெய்வீகத்தைப் பெறுவீர்களாக. தெய்வீகம் என்பது வேதத்தில் ஏதோவொரு கண்டறியமுடியா நம்பிக்கையோ புரியாமல் அப்படியே ஏற்கவேண்டிய சட்டமோ அல்ல. அதுவொரு நேர்முக அனுபவம். வேதப்படி நடந்தால் தெய்வீகத்தைப் பெறுவீர்கள் என்பது ஓரனுபவமாயிருப்பதால் இதை அப்படியே நம்பியாக வேண்டுமென்ற அவசியமில்லை. வேதப்படி நடந்து பாருங்கள். தெய்வீகத்தைப் பெறுவீர்களா? இல்லையா? என்று உங்களுக்கே

தெரியவரும். தெய்வீகம் ஒரு நேர்முக அனுபவமான ஒரு நிரூபணம். வெறும் கனவாகவோ நம்பிக்கையாகவோ வரட்டுக்கோட்பாடாகவோ அல்லாமல் தெய்வீகத்தை வாழ்விலே உண்மையிலேயே அறிய உணர முடியும். அதனால் மிகப்பெரிய பயன்களும் உண்டு.

*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறை மொழி காட்டிவிடும்.*

-திருக்குறள்.

நாடுகின்றன. மற்றும் சில உயிரினங்கள் தம் ஸுகத்தையும் தம் உறவினர் ஸுகத்தையும் தம் சுற்றத்தார் ஸுகத்தையும் தமக்கு உதவுகிறவர் ஸுகத்தையும் நாடுகின்றன. உதாரணமாக நாய் தனது ஸுகத்தைமட்டுமல்லாமல் தனது எசமானின் ஸுகத்தையும் நாடுகிறது. ஆனால் மனிதஇனமோ தன் ஸுகத்தை மட்டுமல்லாமல் தன் சுற்றத்தார் ஸுகத்தை மட்டுமல்லாமல் வையகத்திற்கே ஸுகத்தை நாடுகிறது.மனித இனத்திலும் பலர் தன் ஸுகத்திற்கே முதல் முக்கியத் துவம் தந்து பிறகே பிறஸுகத்தை நாடுவர்.

மனித இனத்திற்கும் அப்பால் உயிரினம் உள்ளது. அந்த அதிமானுடம் இப்படித்தான் இருக்கும் என்று அதிமனதால்தான் அறிய முடியுமேயன்றி சாமானிய மனதால் ஊகிக்கக்கூட முடியாது. ஆனால் அதிமானுடத்தை அறிந்தே ஆகவேண்டும். ஏனெனில் அதனால் பரமப்ரயோஜனம் உண்டு. அந்தப் பிரயோஜனத்தைக்கூட சாமானிய மொழியால் சாமானிய மனத்திற்கு புரியவைக்க இயலாது. ஆனால் அதிமானுடத்தால் எல்லாவற்றையும்விட மிகவும் அதிகப் பிரயோஜனம் உண்டு என்பதால் அதை அறிந்துகொள்ள பக்குவம் பெற்ற அதிமனத்தைப் பெறுவது எப்படி என்று பேசியேயாக வேண்டும். அதிமனதையும் அதிமானுடத்தையும் பற்றிப் பேச முடியாதெனினும் அதையடையும் வழியை அவசியம் விளக்கியாக வேண்டும். அதிமனத்தை அடைவது என்றால் எங்கோ ஒரு மேக மண்டலத்தில் அது அமர்ந்து உள்ளது; அதைப்போய் நாம் அடைய வேண்டும் என்று பொருளல்ல. மனதையே அதிமனமாக மாற்ற முடியம். மனதைவிட்டு தனியே அதிமனத்திற்குப் போவதல்ல இது. மனதை அதிமனமாக்க வேண்டும் என்பதுதான் அது. இது ஒரு கட்டுக் கதையல்ல; இது உண்மையாக நடக்கும் செய்தி.

அதிமனத்தில் படர்ந்துள்ள விசாலமான ஒரு தெய்வீகம் சாமானிய மனதில் ஒரு சிறுதுளியாக துலங்குகிறது.அதற்கு தருமம் என்று பெயர் வைத்துக் கொள்ளலாம்.

தருமம் என்றால் என்ன என்று கேட்டவுடனேயே ஒருவன் சற்றும் சிந்தியாமல் சற்றும் கவனியாமல் உடனடியாக சில சட்டதிட்டங்களின் கூட்டையோ தன் பண்பாட்டுக்கருத்துக்களையோ தன் மதக்கோட்பாடுகளையோ தருமம் என்று எடுத்துரைப்பான். ஆனால் இதுயாவும் உண்மையான தருமம் ஆகா. இவைகள்

யாவும் தருமம் என்ற பெயரில் அவன் மனதில் திணிக்கப்பட்ட ஒன்றேயன்றி அவன் உள்ளிருந்து ஆழ்ந்து கவனித்தபடியால் வந்ததன்றுஅவன் ஆழ்ந்து உள்ளே கவனித்தால் தருமம் விளங்கும். அல்லது அவன் தருமம் என்று நம்பும் சட்டதிட்டங்களையோ மதக்கோட்பாடுகளையோ நன்கு பரிசீலித்தால் தருமத்தின் பொருள் விளங்கும். உதாரணமாக சட்டதிட்டங்களையே ஒருவன் பரிசீலிக்கிறான். இவ்வெல்லா சட்டதிட்டங்களும் எதனடிப்படையில் அமைகின்றன?அல்லது எதன் அடிப்படையில் அமைய வேண்டும்? என்று கவனிக்கிறான். அதனால் அவனுக்குத் துலங்குவது யாதெனில் இவையாவும் பயன்பெறவே அமைக்கப் பெற்றிருக்கின்றன என்பதே. அப்படியெனில் எவன் பயன்பெற அமைய வேண்டும் ? அயோக்கியர்களும் அக்கிரமக்காரர்களும் திருடர்களும் பயன்பெறவா? அல்ல. நல்லோர்கள் பயன்பெறவே என்பது விளங்கும்.

இங்கு இருகேள்விகள் எழும். நல்லோர்கள் என்றால் என்ன? பயன் பெறுதல் என்றால் என்ன? பயன்பெறுதல் என்றால் ஸுகத்தைப்பெறுதல் என்றே பொருள். ஸுகம் என்றால் என்ன? இடைவிடாது மதுபானம் செய்வதும் ஸுகம்தானே. போதையும் ஸுகம்தானே. அப்படியெனில் நலம் என்பதற்கு வெறும் ஸுகம் என்ற பொருள் பொருந்தாது. ஸுகத்திலேயே இருவிதம் உண்டு. மிதஇன்பத்தையும் அதிக துக்கத்தையும் தரவல்ல ஸுகம். மிததுக்கத்தையும் அதிக இன்பத்தையும் தரவல்ல ஸுகம். இவ்விரண்டு விஷயத்தைப்பற்றியே மானுடமனத்திற்குத் தெரியும். இவ்விரண்டில் நலம் என்பது இரண்டாவதே ஆகும். இவ்வளவே மானுடமனத்தால் நலம் என்பதற்குப் பொருள் கூறமுடியும். இதற்குமேலே அதிமனதின் நலத்திற்கான விளக்கம் அலாதியானது. அதைப்பின்பு காண்போம்.

நல்லோர்கள் யாரெனில் தருமத்தை அதிகபக்ஷமும், அதருமத்தை மிகவும் குறைவாகவும் தரித்திருப்பவர்களும் பரிபூரணமாக தருமத்தை தரித்திருப்பவர்களும் நல்லோர்கள். இதற்கு நேர்மாரானவர்கள் தீயோர்கள். அதாவது அதருமத்தை அதிக பக்ஷமும், தருமத்தை மிகவும் குறைந்தபக்ஷமும் தரித்திருப்பவர்கள் தீயோர்கள். இவ்விருவர் மட்டிலும்தான் உலகில் உள்ளனரோ?

நூலில் இஷ்டம் அதிகமிருந்தால் அதற்குக்காரணம் இந்த நூலில் அதிகம் தருமம் இருப்பதே காரணமாகும். எனக்கு பாக்கிஸ்தானைக் காட்டிலும் இந்தியாவை மிகவும் பிடிக்குமென்றால் அதற்கு இந்தியா எனது தாய்நாடு என்பது காரணமல்ல. இந்தியா தார்மிகமாயி ருப்பதேயாம். அவனைக்காட்டிலும் இவனை எனக்குப்பிடிக்கும் என்பதற்கு ஒரே காரணம் இவன்அவனைவிட மிகவும் தார்மிகன். அக்கருத்தைவிட இக்கருத்து எனக்கு மிகவும் பிடித்தது எனில் இக்கருத்து அதைவிட தார்மிகமானது. எனக்கு தருமமே நண்பன். அதருமமே சத்ரு. தருமம் எவர்களிடம் உள்ளதோ அவர்களை பாராட்டுவேன். அதருமம் உள்ளோரை கண்டிப்பேன். இவ்வாறான ஆத்மஸமர்ப்பணம் தருமத்திடம் தேவை. எல்லாவற்றையும் விட அதிகமான ப்ரியம் தருமத்திடம் இருக்கவேண்டும். உயிரினங்க ளிடம் ப்ரேமை வேண்டும். அதுவே ஸேவை செய்ய ஹேதுவாக அமையும். வறண்டுபோன இதயத்தில் ப்ரேமதாரை ப்ரவஹித்தால் தான் தருமம் வளர்ச்சி பெறும். மற்றோரின் உணர்வுகளை உணருதலும் தருமவளர்ச்சிக்கு இன்றியமையாதது. தார்மிக ரஸங்களும் தார்மிகவுணர்ச்சிகளும் தர்மவளர்ச்சிக்கு அவசிய மாகின்றன. இவ்விதமாக மானுடமனத்தில் சிறுதுளியாய்க் குடிகொண்டு வழிகாட்டும் தருமம் என்ற தெய்வீகம் இருள்படர்ந்த அம்மனித மனத்தில் பரவி சுடர்விட்டெறிந்து எங்கும் ஒளியாக்கி இருளை நீக்கி மனதையே ஜோதிர்மயமாக்கி மனதையே அதிமனமாயும் தேவபூமியாயும்ஆக்கி அதிமானுடத்துடன் தொடர்பு கொள்ளவும் அதிமானுடமாய் ஆகவும் அகண்ட ஜோதியின் ப்ரவாஹத்தைப் பெறவும் தகுதிபெற்றதாயாக்குகிறது. ஆதலால் அதிமானுடத்தையும் அதிமனதையும் பெறவிரும்புவோர் மிகவும் அவசியமாக ஸனாதனமாக மனிதமனதிலேயே ஸ்தாபிக்கப்பட்ட தெய்வீகத்திற்கு தன்னை ஸமர்ப்பித்தேயாக வேண்டும்.

*அனைத்தையுந் தேவர்க் காக்கி, அறத்தொழில் செய்யு மேலோர்*
*மனத்திலே சக்தியாக வளர்வது நெருப்புத் தெய்வம்*
*தினத்தொளி ஞானங்கண்டீர் இரண்டுமே சேர்ந்தால் வானோர்*
*இனத்திலே கூடி வாழ்வர் மனிதரென் றிசைக்கும் வேதம்.*

- பாரதி

.வர்ணாச்ரமதருமம் -

*ந சாஹம் ப்ராம்ஹணம் ப்ரூமி யோனிஜம் மத்தி ஸம்பவம்*
*அகிஞ்சநமனாதானம் தமஹம் ப்ரூமி ப்ராம்ஹணம்*

*- தம்மபதம் (புத்தர்)*

*அந்தணர் என்போர் அறவோர்; மற்றெவ்வுயிர்க்கும்*
*செந்தண்மை பூண்டொழுக லான்.*

- திருவள்ளுவர்.

தருமமே ஈச்வரனின் இஷ்டமாக உள்ளது. தருமத்தை பின்பற்றுபவனிடமே அவர் ப்ரீதியடைகிறார். ஈச்வரனுக்கு எல்லாவற்றையும்விட மிகவும் பிடித்தது தருமமே. தருமம் என்கிற ஈசனின் ப்ரீதிக்காகவே செயல்களை செய்யவேண்டும். உதாரணமாக இருவர் வேலை பார்க்கிறார்கள். மாதச்சம்பளம் சரியாகத் தரப்படவில்லை. இருவரும் சரியான மாதச்சம்பளம் பெற முதலாளியிடம் போராடுகிறார்கள். ஒருவர் தனக்கு சம்பளம் கிடைக்கவில்லை என்கிற ஒரே காரணத்தால் போராடுகிறார். மற்றொருவர் சரியான சம்பளம் தரப்படாத இவ்வதருமத்தைப் பொறுக்கக்கூடாது என்பதற்காகவும் தனக்கு சம்பளம் சரியாக தரப்படாதது தனது கண்யமான வாழ்விற்கு தடையாவதால் அப்படியொரு கண்ய வாழ்வை ஆதாரமாகக்கொண்டே பணிபுரியமுடியும் என்பதாலும் அவ்வாழ்வையும் இலக்காகக்கொண்டே முதலாளியிடம் போர்புரிகிறார். இவ்விருவரில் இரண்டாமவரே ஈசனின் ப்ரீதியை செய்யக்கூடியவர். ஈசனின் ப்ரீதி தருமமேயாகும்.

தருமம் மூன்று வகையானசெயல்களிலேயே அமைகிறது.

1. ஒருவன் நல்ல காரியங்க்ள் செய்தால் அவைகட்காக அவனுக்கு நல்லது செய்தல்.
2. தீயகாரியங்கள் செய்பவரை திருத்த முயலுதல்.
3. முடியாவிடில் கண்டித்து தண்டித்தல்.(அப்படி தண்டித்தால்தான் அவன் தீங்கு செய்வதை நிறுத்துவான்..)

நன்மை செய்பவர்களுக்கு பயன்பெறும்படியான

கந்தத்தைக் கூட சற்றும் முகராமல் இன்று பயமற்று மேடையில் ஏறி சண்டப் பிரசண்டமாக வேதவிரோதக் கருத்துக்களைப் பேசி அவை வேதத்தில் உள்ளதாயும் ஸாதித்துப் பெரும் அனர்த்தத்தை விளைவிக்கிறார்கள். இதனாலேயே ஹிந்துமதம் சீர்கெடுகிறது. வேதம் சற்றும் தெரியாமல் யோகத்தைப் பயிலுவிக்க ஸெண்டர்கள் ஆரம்பிப்பதோ புராணங்கள் இதிஹாஸங்கள் பிரஸங்கிப்பதோ சடங்குகள் நடத்துவதோ பெரும் சீர்கேட்டிற்குக் காரணமாயமையும் ஹிந்துமதத்தை எவன் போதிக்கக் கிளம்பினாலும் வேதம் தெரியாமல் எப்படி போதிக்கலாம்? பைபிளே தெரியாமல் பேரெடைஸ் லாஸ்டையும் பில்க்ரீம்ஸ் ப்ராக்ரெஸ்ஸையும் கொண்டு கிறித்துவத்தைப் பிரசாரம் செய்ய முடியுமா? ஆதலால் வேதத்தின் பொருளை உள்ளது உள்ளபடி அறிந்தேயாகவேண்டும்.

வேதத்தைக்காப்பதற்காகவே ஒருசிலர் வாழ்வை த்யாகம் செய்யவேண்டும். அவர்கள் வாழ்வு முழுவதும் வேதத்தின் பொருட்டு அர்ப்பணிக்க வேண்டும். அவர்கள் வேதநூலை முதலில் பூர்ணமாக அறியவேண்டும்.

ஐயந்திரிபற வேதநூலை நன்கு கற்று அதன் ரகசியங்களையும் ஸூக்ஷ்மங்களையும் ஆழ்ந்த உட்கருத்துகளையும் நன்கு கசடற தெளிந்தறிந்து அதன்படி நடக்கவேண்டும். தருமத்தின் அடிப்படையில் அவர்களின் வாழ்வு அமையவேண்டும். தூய்மையே உருக்கொண்டு சிறிதும் அதார்மிகமான சுயநலமற்று வாழவேண்டும். தார்மிகமான புலனடக்கம் கருணை அன்பு அறிவு சாந்தி தவம் திருப்தி பொறுமைமுதலிய குணங்களின் இருப்பிடமாக அவர்கள் அமைய வேண்டும். வேதத்தின் ஆலயங்களாயும் வேதமேயாயும் தருமமேயாயும் அக்னிதேவனேயாயும் தவமேயாயும் அவர்கள் இருக்கவேண்டும். இவர்தான் வேதம் என்று காட்டும்படி இவர்கள் இருத்தல் வேண்டும். அவர்களின் வாழ்வுமூலமாயும் உபதேசங்கள் மூலமாயும் இவர்கள் வேதத்தை விளக்குபவர்களாயிருக்க வேண்டும். இவர்களின் வீடுகளே ஆச்ரமங்களாயிருக்க வேண்டும். ஆச்ரமம் எனபதன் பொருள் துறவிகளின் வீடு என்பதாக மட்டிலுமில்லை. இவர்கள் உள்ள ஆச்ரமங்களில் பலர் வந்திருந்து வேதத்தையும் அதன் அன்றாடவாழ்வில் பயன்படுத்தும் முறையையும் தருமத்தின் உட்பொருளையும் கற்றறிந்து செல்ல

வேண்டும். தருமஅடிப்படையான வாழ்விற்கு இவர்களின் ஆச்ரமம் ஓரிருப்பிடமாகும். பலதுறைகளில் இவ்வாச்ரமங்கள் சிறந்து விளங்கவேண்டும்.

*அந்தணர்க்கு உரிய மரபுகள்:*
*நூலே கரகம் முக்கோல் மணையே*
*ஆயும் காலை அந்தணர்க்கு உரிய.*
*அரசர்க்கு உரிய மரபுகள்:*
*படையும் கொடியும் குடையும் முரசும்*
*நடை நவில் புரவியும் களிறும் தேரும்*
*தாரும் முடியும் நேர்வன பிறவும்*
*தெரிவு கொள் செங்கோல் அரசர்க்கு உரிய.*

– தொல்காப்பியம்.

சமூகத்தை ஆளக்கூடியவர்களும் காக்கவேண்டியவர்களும் அவசியம் இவ்வாச்ரமங்களுக்கு வந்து தரும நெறிதவறாமல் எப்படி ஆள்வது என்பதை நன்கு அறியவேண்டும். தருமத்தின் அடிப்படையில் வாழ்வை அமைப்பதெப்படி என்று அறிய வேண்டும். சுயநலமேயற்ற உயர்ந்த ராஜவித்யையை நன்கறிந்து சுயநலமும் ஊழலும்அற்று தருமத்தினடிப்படையில் ஆளத் தெரிந்திருத்தல் வேண்டும். தருமம், ஸத்யம், நீதி, ந்யாயம், அடக்கம், வீரம், ஆற்றல் எல்லாதார்மிகப்பண்புகளும் கொண்டு அவர்கள் ஆளவேண்டும். ஆச்ரமங்களில் வாழ்ந்து தருமஅடிப்படையில் வாழவும் ஆளவும் கற்றுக்கொண்டு தார்மிக ஸம்ஸ்காரங்களிலேயே உதித்தவர்களே தேர்தல்களில் நிற்க வேண்டும். அவர்களே ஆளவும் வேண்டும்.

*வைசிகன் பெறுவன:*
*வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை*

– தொல்காப்பியம்

சமூகத்தில் தனம் மிகவும் முக்கியம். தனத்தை தரும நெறியில் சம்பாதித்து தருமத்திற்காக செலவு செய்தால் அது தெய்விகமாகிறது. அதை ஒட்டுமொத்தமாய் நிராகரிப்பது தவறு. அப்படி நிராகரித்தால் அது அயோக்கியர்களால் அநீதிக்கு பயன்

தொழிலும் அமைந்தால் அவன் அதை விரும்பி ஏற்கிறான். இவ்வாறே வேதியனின் மகனாய் பிறந்தவனும் தன் சிறுவயது துவங்கி தனது பந்துக்கள் வேதமோதுதலையும், வேதநெறிகளைக் கற்பிப்பதையும் நன்கு கவனித்து வளர்ந்து அதையே விரும்பி பயின்று அதையே தன் தொழிலாய் கொள்கிறான். இவ்வாறே வணிகனின் மைந்தனும் தன் பந்துக்கள் செய்யும் வியாபாரத்தையும், அன்றாடம் கணக்குப்பார்த்தல் முதலிய பழக்கவழக்கங்களையே கண்டு அதையே சுபாவமாய் கொண்டு விரும்பி கற்று அதையே தொழிலாக்கிக் கொள்கிறான். இவ்வாறு தானே விரும்பும் கல்வியையும் தொழிலையும் தான்பெருகிறான். ஆனால் இக்காலத்திலேயோ தான்விரும்பும் கல்வியையும் தொழிலையும் ஒருவன் பெறாமல் எத்துறையில் பணம் அதிகம் பெறலாமோ அதற்குப் போட்டியிடுபவரே ஏராளம். இஷ்டமானத்துறையில் புகமுடியாமல் பணம் அதிகம் கிடைக்கும் துறையில் தள்ளப் படுகின்றனர். ஆதலால் போட்டி பொறாமை அதிகமாகிறது.

குலதருமம் நன்கு விளங்கிய காலத்தில் வேலையில்லாத் திண்டாட்டமே கிடையாது. பிறந்தவுடன் அவன் வேலை நிர்ணயிக்கப்பட்டது. அவன் தந்தைக்கு எந்த வேலையோ அதுவே அவனுக்கும். குலதருமத்தில் ஒருவர்கத்தின் வேலை மற்றொரு வர்கத்தால் கைப்பற்றப்படாது, பாதிப்புமடையாது. இவ்வாறு சாந்தியாகப் போய்க்கொண்டிருந்தது சமூகம். தன் குலத்தொழிலில் ஈடுபாடற்று வேறுகுலத்தொழிலில் ஈடுபாடும் அதில் அபரிமித ஆற்றலும் கொண்டவர்களுக்கு குலத்தொழில்முறையில் என்ன கதி என்கிற கேள்வி எழுவது ந்யாயமே. ஆனால் அவ்வாறு மிகவும் குறைவானோர்க்கே நேரிடும். கலெக்டிவ் அன்கான்ஷியஸில் விருப்பமற்று வேரெதிலோ விருப்பு என்பது மிகமிகக் குறைவா னோர்க்கே உண்டு. அதற்காக குலதருமத்தையே அழிக்க வேண்டுமென்கிற அவசியமில்லை. பண்டையநாட்களிலே இவ்வாறு வேறுதொழிலிலே நாட்டமும் ஆற்றலும் இருந்தவர்கட்கு அவர்கள் விரும்பும் அத்தொழிலையே ஏற்க அனுமதி இருந்ததாகவே நமது புராதன வரலாறுகள் முழங்குகின்றன.ஆனால் பெரும்பாலோர் குலதருமத்தையே அக்காலத்தில் பின்பற்றிவந்தனர்.

சிலர் குலதருமத்தில் உள்ள தந்தையின் தொழில் பிள்ளைக்கு

என்கிற கருத்தை மட்டிலும் மிகவும் மேலோட்டமாய் கண்டுவிட்டு இதை தவறாகக் கருதுவர். குலதருமம் என்பதை ஆழ்ந்து காண வேண்டும். குலம் என்பதற்கு பரம்பரை என்ற பொருள் மட்டிலும் கிடையாது. அதற்கு க்ரூப் என்ற பொருளும் உண்டு. கலக்டிவ் அன்கான்ஷியசிலும் பரம்பரை க்ரூப் இவ்விரண்டினாலும் ஏற்படும் தாக்கங்களே உள்ளனவாய் மனோதத்துவவாதிகள் கருதுவர். இவ்வித ரகசியத்தை அடிப்படையாய் கொண்டே குலதருமம் என்பது அமைகிறது. குலம் என்பது தான் பிறந்த பரம்பரையை மட்டிலும் குறிப்பிடவில்லை. தான் எந்த க்ரூப்பில் வளருகிறானோ அதுவும் குலம் என்ற சொல்லுக்குப் பொருளாகும். தன் தந்தை எத்தொழிலைக்கொண்டவனோ அத்தொழிலைக்கொண்டவர்களின் க்ரூப்பிலேயே அவனும் வளருகிறான். தனது பந்துக்களும் சுற்றத்தாரும்தான் அவனது க்ரூப். அவர்கள்யாவருமே அவனின் தந்தையின் தொழிலையே கொண்டவர்கள். அவர்களையே கவனித்து அவர்களின் நடத்தைகளையே பழகி அந்த ஸம்ஸ்காரத்தி லேயே வளர்ந்து அத்தொழிலையே மேற்கொள்கிறான். இதுவே குலதருமம். இது நாளடைவில் தருமத்தைவிட்டு சுயநலத்திற்கு பலியானது. ஆதலால் பிற்காலத்தில் இதை ஜைனர்களும் பௌத்தர்களும் மற்றும் பலரும் எதிர்க்கத் துவங்கினர். பிற்காலத்தில் அவர்களும் தருமத்தைவிட்டு சுயநலத்திற்கு பலியானதால் அவர்களின் ஸ்தாபனங்களும் குலைந்தன.ஆதலால் தூய்மையான வர்ணாஸ்ரமதருமத்தில் பிற்காலத்தில் ஜாதிக்கொடுமைகளாகிய அசிங்கங்கள் கலந்தபடியால் வேதத்தைத் தவறென்று கூற முடியுமா? அல்லது உலகிலேயே அதிக அளவில் மாமிசம் சாப்பிடும் நாடுகள் பௌத்தமத நாடுகளான சீனமும் ஜப்பானுமே என்பதால் தம்மபதத்தைத் தவறென்று கூறமுடியுமா? மேலும் வேதத்தில் வர்ணாச்ரமதருமம் கூறப்படுகிறதே தவிற குலதருமம் எங்குமே கூறப்படவேயில்லை. இருப்பினும் குலதருமம் இயற்கையாகவே மக்களின் பழக்கத்தில் வந்துவிட்டது. பிற்காலத்தில் ஸ்ம்ருதிகளில் அது மிகவும் கடுமையாகவே விதிக்கப்பட்டிருப்பி னும் ஆதிகாலத்து வேதத்தில் இது விதிக்கப்படவில்லை. தருமமே கதியென்று இருக்கும்வரை அமைப்பு நிலைபெருகிறது. தருமத்தை யும் மீறி தன்னலம் வெறிபிடித்தாடத் துவங்குகையில் அவ்வமைப்பு

அடியோடு அழிகிறது.

*பெண்ணின் பெருந்தக்கயாவுள கற்பென்னும்*
*திண்மைஉண் டாகப் பெறின்.*

*-திருக்குறள்*

*செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்*
*அறிவும் அருமையும் பெண்பாலான.*

*-தொல்காப்பியம்*

இந்த வர்ணதருமம் ஆண்கள் பெண்கள் என்ற இருதரப்பட்டோருக்கும் இருந்தது. பொதுவாக ஆண்கள் வெளியில் சென்று கடும் வேலைகளைச் செய்துகொண்டிருந்தனர். பெண்களோ இக்கடும் வேலைகளில்பெரும்பாலும் நியமிக்கப்படவில்லை. இவர்கள் உள்வேலைகளையே பெரும்பாலும் செய்து வந்தனர். பெண்கள் பொதுவாகவே உடலாலும் மனதாலும் ஆண்களைக் காட்டிலுமே மென்மையாக இருந்ததால் அவர்களின் ஆற்றலுக்கு ஏற்றவாறே அவர்களின் வேலைகளும் இருந்தன. இதுவும் இயற்கையாக உண்டானதே. இவர்கள் தங்கள் உள்வேலைகளில் மிகவும் ஸ்ரத்தையாகவும் தார்மிகமாயும் இருந்துவந்தனர். இதுவே அவர்களின் சித்தசுத்திக்கும் தெய்வீகத்திற்கும் காரணமாயிருந்தது. இந்தியப் பெண்கள் என்றாலே அவர்களிடம் ஒரு தெய்வீகம் இருப்பதாகக் கருதுகிறோம். ஸாவித்ரி, மதயந்தி, அருந்ததி, ஸீதா என்றாலே இவர்களிடம் ஓரான்மீகத்தை உணருகிறோம். இவர்களை தபஸ்வினிகளாயும் சித்தசுத்தி பெற்றவர்களாயும் உணருகிறோம். இதன் ரகசியம் என்ன?

இவர்கள் பதிவ்ரதைகள், அன்னைகள் என்கிற இரு முக்கிய ஸ்தானங்களைக் கொண்டுள்ளனர். சிறந்த பதிவ்ரதைகளாயிருந்து வெளியில் சென்று ஏதோவொரு தார்மிகத்துறையில் இருந்து கடுமையாய் உழைத்து ஸேவை செய்யும் தம் புருஷர்களுக்கு உள் ஸேவைகளைச்செய்து அவர்களை அவர்களின் தொழில்களில் பலவாறு ஊக்குவித்து பல ஸஜஷன்களைச் சொல்லி இவ்வாறாக நல்லோர்களுக்கு நன்மை செய்து சுயநல ஆதிக்கமற்ற இவ்வித தார்மிக ஸேவைகளைச்செய்து சித்தசுத்தியையும் உண்மையான ஆன்மிகத்தையும் பெற்று தபஸ்வினிகளாயாகின்றனர். தங்களின்

குழந்தைகளையும் குருகுலம் செல்வதற்கு முன்னால் தாங்களே முதல் குருக்களாயிருந்து நன்நெறிகளையளித்து அக்குழந்தைக ளுக்கு வேண்டியதுறைகளில் அவர்களை ஊக்குவித்து நல்வழிப்படுத்தி அடிப்படைக் கல்வியைப் பயிலச்செய்து உருவாக்குகிறார்கள். இவ்வாறான இருவிதங்களால் தருமத்தைப் பின்பற்றாவிடில் ஆண்களும் வெளிஸேவைகள் செய்யமுடியாமல் போகும். ஆதலால்தான் பெண்களையே தருமத்திற்கு மூலம் என்றும் அவர்களைப் போற்றுமிடத்திலேயே தேவர்கள் ப்ரஸன்னமாவார்கள் என்றும் சான்றோர்கள் கூறுவர். இதனால் பெண்களை ஆதிக்கம் செய்ததாயாகாது. அவர்கள் ஆண்களுக்கு அடிமைகளாய் இருந்ததில்லை.

ஆண்களின் உரிமைகளில் பங்குகொள்வோராயும் கல்வியறிவு பெற்றவர்களாயும் தனிச்சொத்துகள் கொண்டவர் களாயும் கூர்மையறிவு பெற்றவர்களாயும் இருந்தனர். ஆண்களுக்கு உபதேசிப்பவர்களாயும்கூட இருந்தனர். உள்வேலைகளை கவனிப்பார்கள் என்றால் வெளியிலேயே வரமாட்டார்கள் என்று பொருளாகாது.

வெளியிலும் வந்து வெளிவேலைகளையும் செய்ய அவர்களுக்கு உரிமை இருந்திருக்கிறது. சிலர் அவ்வாறு செய்யவும் செய்திருக்கின்றனர். இதற்கெல்லாம் பழைய வரலாற்றிலே ஏராளமான ப்ரமாணங்கள் உள்ளன. இருப்பினும் அவர்கள் பெரும்பாலும் உள்வேலைகளையே செய்துவந்தனர். பண்டைய நாட்களிலே அவர்களுக்கு விதவைமறுமணம் என்கிற உரிமைகூட இருந்ததாகப் *பழைய சாஸ்திரங்களிலே தெரியவருகிறது. ஆனால் பெரும்பாலான விதவைகள் மறுமணத்தை தாங்களே விரும்பாதவாரே இருந்துவிட்டனர். மறுமனம் செய்துகொண்ட விதவைகளும் உண்டு. விதவைகளும் நாழ்த்தப்படாமல் பெருமதிப் புடன் காணப்பட்டனர். மக்கள் விதவைகளிடம் அன்போடும் கருணையோடும் பழகினர். ராமராஜ்ஜியத்தின் பெருமைகளை

---

**உதாரணமாக* Haster printing works *ஆல் அச்சிடப்பட்ட அதர்வணவேதத்தில் முதல் பாகத்தில் 447ஆம் பக்கத்தில் 28 ஆம் வாக்கியம்.*

*எம்ல்ஜே பிரஸ்ஸால் அச்சிடப்பட்ட ராமாயணத்தில் 471 ஆம் பக்கத்தில் நான்காம் ச்லோகம்.*

வர்ணிக்கையில் ராமாயணம் முதல் பெருமையாக விதவைகள் ராமராஜ்ஜியத்தில் துன்புறவில்லை என்றே கூறுகின்றது. பிற்காலத்தில் தான் ஆணாதிக்கம் பெண்கொடுமை முதலியன வளர்ந்தன. பெண்களின் மென்மைக்கும் தருமத்திற்கும் மதிப்புத் தந்து ஆண்கள் நடந்தவரை பெண்களின் தருமம் குலையவேயில்லை. என்று அவர்கள் தருமத்தை மறந்து பெண்களின் மென்மையை தனக்கு ஸாதகமாய் எடுத்துக்கொண்டு சுயநல ஆதிக்கம் செலுத்தத் துவங்கினரோ அன்று பெண்கள் தற்காப்பிற்காக தங்கள் சுபாவத்தை விடும்படி நேர்ந்தது. தற்காப்பிற்காக இப்படி சுபாவத்தை விடத்துவங்கியப்பெண்கள் தாங்களே நாளடைவில் சுயநலவெறி பிடித்து அத்துமீறிப்போய் தருமத்தைக் கைவிட்டுக் குலைந்து விட்டனர். இவ்வாறாக ஈச்வரப்ரீதியான தருமத்தை கைவிட்டு என்று ஒரு தனிநபரோ அல்லது ஓரமைப்போ சுயநலத்திற்கு பலியாகிறதோ அது அன்று குலைகிறது. ஈசனின் ப்ரீதியாகிய தருமத்தில் எது நிற்கிறதோ அது என்றும் விளங்குகிறது.

**இனி ஆச்ரம தருமங்களைக் காணலாம்.**

*ஓதல் பகையே தூது இவை பிரிவே அவற்றுள்*
*ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன.*

*–தொல்காப்பியம்*

மாணவர்கள் குருகுலத்தில் வஸித்து அங்கேயே வேதத்தை யடிப்படையாகக் கொண்ட தங்களுக்கு வேண்டிய கல்வியைப் பயிலுவர். கல்விமுறை பெரும்பாலும் ப்ரக்டிகலாகவே இருந்தது. ஏட்டுப் படிப்பும் உண்டு. இவ்வாறு ஒரு மாணவனாக இருந்து பயிலும் நிலையை ப்ரும்ஹசர்ய ஆச்ரமம் என்பர்.

*அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது.*
*அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை*

*–திருக்குறள்*

மாணவன் தனது குருகுலவாஸத்தை முடித்துக் கொண்டு குருவிடம் விடைபெற்று வெளிவந்து சமூகத்திற்கு அவன் பயின்றத் துறையின்மூலம் ஸேவை செய்யத் துவங்குகிறான். மணம் புரிந்து

கொள்கிறான். குடும்பத்தை உருவாக்கி அதற்கும் சமூகத்திற்கும் தொண்டு செய்து வருகிறான். இதை க்ருஹஸ்தாச்ரமம் என்பர்.

*காமம் சான்ற கடைக்கோட் காலை*
*ஏமம் சான்ற மக்களொடு துவன்றி*
*அறம் புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்*
*சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே*

*—தொல்காப்பியம்.*

*தவம் செய்வார் தம்கருமம் செய்வார் மற்றல்லார்*
*அவம்செய்வார் ஆசையுள் பட்டு.*

*—திருக்குறள்*

காடுகளில் குடும்பத்துடன் வாழ்ந்து தவம் புரிந்து கொண்டு சமூகத்துடன் தொடர்பும் கொண்டும் தங்களின் தவத்தால் சமூகத்திற்கு நன்மைகள் பயக்கிக் கொண்டும் வாழுதலை வானப்ரஸ்த ஆஸ்ரமம் என்பர். இவ்வாறு வர்ணாச்ரம தருமங்கள் விளக்கப்பட்டன.

இந்த வர்ணாச்ரமதருமம் என்பது சுயநல அடிப்படையில் இல்லாமல் தரும அடிப்படையில் பண்டைய காலங்களில் இருந்தது. இடைக்காலத்திலே அதன் ஆழம்புரியாமல் வெறும் மேலோட்ட மாகக் காணும் தன்மையினாலும் அந்த உயிரற்ற மேலோட்டமே மிகவும் கடுமையாயானதாலும் எல்லாவற்றிற்கும்மேல் சுயநல ஆதிக்கம் வளர்ந்துவிட்டதாலும் சீர்கெட்டுக் குலைந்தது. இன்று அது அழியாமலும் ஆனால் சீர்கெட்டுக் குலைந்தும் உள்ளது. பல சீர்திருத்தவாதிகள் வர்ணாச்ரம முறையை வேரோடழிக்கப் பாடுபடுகின்றனர். வர்ணாஸ்ரமம் இல்லாவிடில் வேறொரு அமைப்பு வரவேண்டும்.

அமைப்பில்லாமல் சமூகம் இராது. ஆதலால் ஒவ்வொரு சீர்திருத்தவாதியும் ஒவ்வொரு அமைப்பைப்பற்றி கூறுகின்றனர். எந்த அமைப்பு வேண்டுமென்றாலும் வரலாம். அல்லது மீண்டும் அந்த வர்ணாச்ரம அமைப்பேகூட வரலாம். எது நிறுவப்பட்டாலும் அது தருமத்தின் அடிப்படையில் அமையவேண்டியது மிகவும் முக்கியம். தூய சுயநலத்தின் பெயரில் அமையக்கூடாது. தருமத்தின் அடிப்படையில் அமைந்தால் எதுவும் நல்லதே. வர்ணாச்ரமம்

குலைந்தபின் இன்றுவரை எந்தவித ஒரு புதிய அமைப்பும் சமூகத்தில் ஆழமாக ஸ்தாபிக்கப்படவில்லை. அமைப்பற்ற சமூகம் திண்டாடுகிறது. எவ்வித அமைப்பு நன்கு தார்மிகமாக இருக்குமோ சுயநல நோக்கை மட்டிலும் கொண்டமையாதோ அதையே இப்போது நிறுவவேண்டும். அதுதான் சமூக முன்னேற்றத்தின் ரகசியமாகும்.

வர்ணாச்ரமத்தை அழித்தால் மட்டிலும் ஸமூகம் முன்னேறாது. சுயநல ஆதிக்கமற்ற ஒரு தருமம் சமூகத்தில் வேண்டும். இதுவிருந்தால் எந்த அமைப்பு நிருவப்பட்டாலும் மீண்டும் வர்ணாச்ரமமே நிறுவப்பட்டாலும் அது சமூக முன்னேற்றத்திற்குக் காரணமாயமையும்.

**ஸாமான்ய தருமம் -**

***யார்க்கும் உரிய:***

***ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்***
***யாரும் சார்த்தி அவை அவை பெறுமே.*** *–தொல்காப்பியம்.*

'வேதியனுக்கு இது அறம். வேந்தனுக்கிது அறம். வணிகனுக்கு இது அறம்.வேந்தனுக்குள்ள சில நீதிகளை வேதியன் கடைபிடித்தால் அது வேதியனுக்கு அநீதி.' இவ்வாறு இன்னாரின்னாருக்கு இதுவிது அறம் என்று பிரித்துப் பிரித்துக் காண்பது வர்ணாச்ரமதருமம். இது யாவற்றிற்கும் உத்தேசம் 'சமூகத்திலுள்ள நல்லோர்களுக்கும் சாமானியர்களுக்கும் நலம் புரிய வேண்டும். தீயோர்களைத்திருத்த வேண்டும். முடியாவிடில் வலிய அடக்கவேண்டும்' என்கிற ஸனாதனமான தருமவுணர்வே இதுவே உண்மையான வர்ணாச்ரமதருமத்தின் அடிப்படை. ஸாமான்ய தருமம் என்பதும் உண்மையான ஸனாதனமான தருமவுணர்வை அடிப்படையாகக் கொண்டதே. ஸாமான்ய தருமம் என்பது **ஸத்யம், பரோபகாரம், ஜீவகாருண்யம், அஹிம்ஸை, த்யாகம், பொறுமை, வீரம், தானம், கருணை, அன்பு, திருடாமை, பிறன்மனையை விரும்பாமை** முதலியவாம். இவைகளை சுயநலஆதிக்கமின்றிதருமஅடிப்படையில் எப்படி அனுஷ்டிக்கலாம் என்று காண்போம்.

**ஸத்யம்** - உலகமே நம்பிக்கையின் பூர்வகமாய் இயங்குகிறது.

நம்பிக்கையும் ஸத்யத்திலடக்கம். நான் இன்று உங்களை நம்புகிறேன். ஏன்? உங்களிடம் உள்ள உண்மையான நட்பை நம்புகிறேன். அதில் சந்தேகம் வந்துவிட்டால்..... உங்களிடம் எனக்குள்ள நட்பு அறுந்து விடும். நீங்கள் என்னிடம் உண்மையாய் இருப்பதாய் நம்புகிறேன். நம்பாவிடில்.... தாய் மகனை நம்பாவிடில்.... தந்தை தாயை நம்பாவிடில்..... மக்கள் ஆள்பவனை நம்பாவிடில்..... வணிகனை வாங்குபவன் நம்பாவிடில்.... உலகமே சீர்குலைவது இவைகளின் விளைவாகலாம். நான் உங்களை நம்பவேண்டுமென்றால் உங்களிடம் என்ன எதிர்ப்பார்க்கிறேன்? உண்மையை எதிர் பார்க்கிறேன். உண்மை அழிந்தால் நம்பிக்கை அழியும். நம்பிக்கை அழிந்தால்மனித ஸமூகமே நசியும். இவ்வுண்மையில் பலவிதம். அவைகளுள் பேசும் உண்மைகள் ஒன்று. பேசும் உண்மைகள் இருவிதம். அவைகளுள் முதலாவது ஸாமானிய உண்மை. நாளை வருவேன் என்று கூறியும் மறுநாள் வரமுடியாமல் போகிறது. இதனால் எந்த நல்லோர்க்கும் எத்தீங்கும் இல்லையெனில் இதுவொரு தவறாகாது. ஆனால் அசாதாரண உண்மை என்று ஒன்று உண்டு. இது நீதியின் எளிமைக்காக உள்ளது. இதை கடைபிடித்தேயாக வேண்டும். எக்காலத்திலும் கைவிடக்கூடாது. கைவிட்டால் சமூகத்திற்கே தீங்கு. அசாதாரண உண்மை என்றால் என்ன?

பெரும்பாலும் நீதிமன்றங்களிலேயே இது கையாளப் படுகிறது. நீதிமன்றங்களில் எதை வைத்து ஒருவனை குற்றவாளி என்று கண்டுபிடிக்க முடியும்? அத்தாக்ஷிகளைக் கொண்டு. அத்தாக்ஷிகள் பலவிதம். ஸாக்ஷிகள், ஆடியோக்கள், வீடியோக்கள், கையெழுத்துக்கள் முதலியன. ஸாக்ஷிகள் பொய் சொல்லிவிட்டால்.... ஆடியோக்களில் ஒருவன் குரல் போலவே மற்றொருவன் குரல் பதிவுசெய்யப்பட்டால்..... வீடியோக்களில் கேமெரா ட்ரிக்குகளால் நடக்காத காட்சிகளை உருவாக்கி விட்டால்..... கையெழுத்துக்கள் போர்ஜரியாக இருந்தால்......

சரி. ஸாக்ஷிகளை நம்ப வேண்டாம். எந்த வக்கீல் மிக நயமாகப் பேசுகிறாரோ அவர் பக்கம் ஸாதித்துத் தரலாம் என்றாலும் அது பட்டிமன்றம் போலாகிவிடுமேதவிர அது ஒரு நீதி வழங்குவதாகாது. அப்படியெனில் எதை வைத்து நீதி வழங்குவது?

அங்குதான் அஸாதாரண ஸத்யம் உபயோகமாகிறது.

ஐம்பது வருடங்கள் முன்பு சபதத்தைமீற சமூகத்தில் யாருமே பயந்தனர். அன்றாடவாழ்வில் சாதாரணப் பொய் சொல்லுபவர்கள் கூட சபதம்செய்து பின் அதை மீற அஞ்சுவர். சபதத்தைக் கடை பிடிப்பதே அஸாதாரண உண்மை. சபதத்தை மீற மிகவும் அஞ்சுவர். ஏனெனில் இதுவரை சமூகத்தில் சபதத்தை யாருமே மீறியதில்லை. சமூகத்தின் பிரகாரமே மனிதன் இயங்குகிறான்.

சமூகத்தில் இதுவரை யாருமே செய்யாததை தானும் செய்ய அஞ்சுகிறான். அந்நாட்களிலே ஒருவன் மற்றொருவனிடம் கடன் பெற்றால் சபதமிடுவான். சபதத்தை ஒருக்காலும் மீற அஞ்சுவான். சரியாகக் கடனை அடைப்பான்.

நீதிமன்றத்தில் ஸாக்ஷிக்கூண்டில் நுழைந்தவன் தான் இங்கு கூறப்போவதெல்லாம் உண்மையே என்று சபதமிடுவான். பிறகு அவன் ஒருக்காலும் அதை மீறாமல் உண்மையையே பேசுவான். எவன் குற்றவாளி என்பதை எளிதில் கண்டுபிடித்துவிடலாம். நீதிபதி நால்வரைக் குற்றவாளிகள் என்று சந்தேகித்து அவர்களிடமிருந்து அவர்கள் பேசப்போவதெல்லாம் உண்மையே என்ற சபதத்தைப் பெற்று அவர்களை விசாரித்தால் அவர்கள் உண்மையையே பேசுவார்களாதலால் எளிதில் குற்றவாளியை கண்டுபிடித்துவிடலாம். இந்த அஸாதாரண உண்மையால் நீதிமன்றங்களில் நீதி நன்கு தவறற்று வழங்கப் பெற்றது.

பிற்காலத்தில் நீதிமன்றங்களிலோ வேறுஇடங்களிலோ சபதம் என்பது ஒரு வேடிக்கையாயும் அலக்ஷ்யமாய் பார்க்கப்பட்டதாயும் ஆனது. சிறுகச் சிறுகப் பொய் வளர்ந்தது. அஸாதாரண ஸத்யம் நீதிமன்றங்களில் குலைந்தது. இதனால் நீதி வழங்குவதும் மிகவும் கடுமையாக ஆனது. நீதியின்நிலை குலைந்தது. மிகவும் பிரபலமானவர்களும் சமூகத்தலைவர்களும் கூட நீதிமன்றங்களில் சபதத்தை விளையாட்டாக மீறத்துவங்கினர். இதைப் பொதுஜனங்களும் பின்பற்றினர். இதனாலேயே தீமைகளும் இன்னல்களும் சமூகத்திற்கு மிக அதிக அளவில் இன்று நேருகிறது.

மீண்டும் நீதி நிலைக்க அஸாதாரண ஸத்யத்தை மீண்டும் நாம் பழகவேண்டும். இல்லாவிடில் கூடிய சீக்கிரம் மனிதஇனமே

அழியவும் நேரிடலாம். இது உண்மை. வெத்துவார்த்தையில்லை. உண்மையே மனித இனத்தை தரிக்கிறது. ஆதலால் ஸத்யத்தைக் காக்க வேண்டும். சாமானிய உண்மையையாவது சிலசந்தர்பங்களில் கைவிடலாம். அஸாதாரண உண்மையை ஒருக்காலும் கைவிடவே கூடாது. இதைக் கடுமையாகப் பயில வேண்டும். நமது அக்காலத்து அரசர்களான ராமன் முதலியோர் உயிரைப் பணயம் வைத்தாவது கூட ஸத்யத்தை ரக்ஷிக்க முயன்றனர். அதனாலேயே மக்களும் அதைப்பின்பற்றினர். நீதியும் எளிதில் விளங்கியது. சமூகமும் க்ஷேமமாயிருந்தது.

**த்யாகம்**- அஸாதாரண ஸத்யத்திற்காக எதையும் த்யாகம் செய்யலாம் என்பது சான்றோர் கருத்து. த்யாகத்தாலேயே எல்லா மஹாபுருஷர்களும் மிகவும் சிறப்பை அடைந்தனர். த்யாகம் என்பது மிகவும் சிறந்த பண்பு. த்யாகம் என்பது தேசகாலோசிதமாயமைந்தால் மிகவும் சிறப்பாய்.அமைகிறது. ஏதாவது ஒன்றை இழப்பது மட்டிலும் த்யாகமாகாது. தனக்கு பாரமாய் இருப்பதால் ஒருவன் ஒரு பொருளை இழக்கலாம். அதில் ப்ரியம் இல்லாததால் இழக்கலாம். புத்தருக்கு தனது ஆட்சியில் ப்ரியம் இல்லை. அவர் மனம் முழுதும் விடுதலை நாட்டத்தில் மட்டிலுமே இருந்தது. ஆட்சியை விட்டார். தனக்கு ப்ரியமான வஸ்துவை த்யாகம் செய்வதே சிறந்த த்யாக மாகும். ஒரு பலசாலியால் சொத்து பிடுங்கப்பட்டதால் சொத்தை இழந்தவன் த்யாகியாக முடியாது. தானே தனக்குப் பிடித்தப் பொருளை த்யாகம் செய்ய வேண்டும். எதை விடுவதால் ஒருவனின் அகந்தை ஸுகத்தை விட்டு துக்கத்தை ஏற்கிறதோ அதை த்யாகம் எனலாம்.

**பரோபகாரம்** - த்யாகம் என்பது பொருளற்று இருக்கக் கூடாது. அது ஒரு ஹேதுவுடன் விளங்கவேண்டும். த்யாகம் மூன்றுகாரணத்திற்காக இருக்கலாம்.

1. நல்லோர்களுக்கு நன்மை பயக்கவும்
2. சாமானியர்களுக்கு நன்மை பயக்கவும்
3. தீயோர்களையும் சாமானியர்களையும் நல்லோர்களாய் ஆக்கவும் த்யாகம் பயன்படவேண்டும்.

இவ்வித த்யாகமே தார்மிக த்யாகமாகும். அதாவது இம்மூவித காரணங்களுக்கும் ஒருவன் தனது அகந்தையை

ஸ்ரமப்படுத்திக் கொள்வதே த்யாகமாம். சாமானியர்களின் நன்மையின் பொருட்டான த்யாகம் மிதமாக இருக்கவேண்டும். ஒருவன் எவ்வளவுக்கெவ்வளவு நல்லவனோ அவனுக்கும் எவ்வளவுக்கெவ்வளவு நமது த்யாகம் தேவைப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு நாம் த்யாகம் செய்யலாம். இவ்வாறு த்யாகம் தேசகாலோசிதமாயும் பரோபகாரத்தின் பொருட்டும் இருந்தால் சிறப்பாய் அமையும். இவ்வித த்யாகத்தாலேயே ராமன் தனது வாழ்வில் மேன்மை பெற்றார்.

**ஜீவகாருண்யம்** - நாம் ஒருவருக்கு உபகாரம் செய்ய வேண்டுமெனில் அவரிடம் தயவும் அன்பும் வேண்டும். தருமத்தின் அடிப்படை பிரேமை. அதுவற்றால் நாம் யாருக்கும் நலம் செய்ய இயலாது. தயவும் அன்பும் ஜீவர்களிடம் காட்ட வேண்டும். அவ்வித ஜீவகாருண்யமே தார்மிக த்யாகத்திற்கு ஹேதுவாகும்.

**அஹிம்ஸை** - நல்லோர்களுக்கும் சாமானியர்களுக்கும் ஹிம்ஸை செய்யாமல் இருப்பதே தார்மிக அஹிம்ஸை.

**பொறுமை** - நாம் அறிந்து செய்த நமது அதருமத்தின் பொருட்டு அர்ஹதையுள்ளவன் நமக்குத் தரும் தக்க தண்டனையையும், தீயோன் நம்மை ஹிம்ஸிக்கையில் பொறுத்துப்போனால் அவன் திருந்துவான் எனில் அவன் தரும் ஹிம்ஸையையும், நல்லோர்-சாமானியர் நலம் பொருட்டு சிந்திக்கையிலோ செயல் படுகையிலோ கிடைக்கும் கஷ்டத்தையும் பொறுத்திருத்தலே பொறுமையாகும்.

**வீரம்**- தீயோர்களை அடக்கி நல்லோர்களைக் காக்கப் பயன்படும் வீரமே தார்மிக வீரமாம்.

**வினயம்**-நம்மைவிட அறநெறிகளால் முதிர்ந்த பெரியோர்களுக்கு மதிப்பளித்தலே தார்மிக வினயமாகும். நமக்கு உதவிய பெற்றோர்கள் முதலிய குடும்பப் பெரியோர்கள் ஸாமானியராகவோ நல்லோராகவோ இருந்தால் அவர்கட்கு தக்க மரியாதை தருவதும் வினயமாகும். தனது ஆற்றலையோ சிந்தையையோ உள்ளது உள்ளபடியில்லாமல் அதிகப்படியாகப் புகழ்ந்து கொள்ளுதல் வினயத்தின் எதிர்மறை. இவ்விதப் பண்புகளால் உண்மையான தருமம் வளர்ச்சி பெறுகிறது.

விசேஷ தருமம் -

ஒரு ப்ரபுவைப் பார்க்க வேண்டுமெனில் அதற்கு எளிதான உபாயம் அவரின் இச்சைப்படி நடப்பதேயாம். அவ்வாறு நடந்தால் அவருக்கு நம்மைப் பிடித்துவிடுகிறது. நம்மை அவரே அழைத்துப் பேசுகிறார். அவ்வாறே ப்ரபுவிற்கெல்லாம் ப்ரபுவான ஈச்வரனைக் காண வேண்டுமெனில் அவரின் இச்சைப்படி நடத்தல் வேண்டும். அவரின் இச்சை எது என்று அறியாமலேயே எல்லாம் அவரிஷ்டம் என்கிறார்கள் சிலப் பைத்தியக்காரர்கள். பகவான் எப்படி வைக்கிறானோ அவ்வாறே நானும் இருக்கிறேன் என்று *டாம் டாம்* அடித்துக் கொள்கிறார்கள். ஆனால் தாங்களும் மனதினுள் பகவதிச்சைக்குத் தன்னை விட்டுக்கொடுக்காமல் தங்களுக்கென்று சுய இச்சைகளை வைத்துக் கொண்டு அதற்காகவும் முயற்சிகளை எடுக்கிறார்கள்.ஆனால் எல்லாம் அவன் இஷ்டம் என்றும் கூறிக்கொள்கிறார்கள். இது ஒரு ஏமாற்று வேலையே தவிற ஈசனிடம் நம்மைக் கொண்டு செல்லாது. ஈசனை அடைய அவருக்கென்ன உகந்ததோ அதில் பூர்ணமாய் இருத்தல் வேண்டும். அவருக்குப் பிடித்தது என்னவென்று முதலில் கசடற அறிய வேண்டும். அவருக்குப் பிடித்தது தருமமே. அதன் விபரீதமான அதருமம் அவருக்குப் பிடிக்காதது. தருமம் தெய்வீகமானது. அவ்வுணர்வை அனுஸரித்தே மற்ற உணர்வுகள் இருக்கும் படியும் அவ்வுணர்வை அனுஸரித்தே மற்ற செயல்களும் இருக்கும் படியும் அமைத்துக் கொண்டால் ஈச்வரன் ப்ரீதியடைகிறார். அவரே அப்படித்தான் உள்ளார். அதாவது அவரே தருமத்தை அனுஸரித்தவராயும் அதன் பிரபுவாயும் அதையே தனது பிரீதியாகக் கொண்டும் உள்ளார். ஆதலால் தன்னை பூர்ணமான தருமத்தைக் கொண்டவனுக்குக் காட்டிவைக்கிறார். அவனிடமே அவருக்குப் பரம ப்ரீதி வருகிறது.

கர்மயோகம் என்பது வெறும் இல்லற வாழ்வு மட்டிலும் இல்லை. பற்றே அற்று செயல் செய்வது மட்டிலும் கூட அன்று. சடங்குகள் செய்வது மட்டிலும் அன்று. செயல்கள் செய்துகொண்டே இருப்பது மட்டிலும் அன்று. இதெல்லாம் கர்மயோகத்திற்கு நிறைவான விளக்கங்கள் அல்ல. கர்மயோகம் என்பது எந்த ஒரு தெய்வீகம் நமது நற்செயல்களைத் தூண்டிவிட்டுக் கொண்டு நம்முள் புதைந்துக்கிடக்கின்றதோ அதைப்பற்றியது. அதை அறியாமல் நான்

ஈசனின் இச்சைப்படி வாழுகிறேன் என்று வெத்துவார்த்தையாக கூறுவது மட்டிலும் கர்மயோகமில்லை. நம்யாவருடைய இதயத்திலும் தெய்வீகம் என்பது ஆழமாகப் படிந்து கிடக்கிறது. அது சிறு துளியாகத் தென்படுகிறது. அதற்கே தருமம் என்று பெயர். அதை மொழியால் ஓரளவிற்கே விளக்கமுடியும். தருமம் என்பது என்ன என்பதை ஆழ்ந்து நன்கு கவனித்தால் அது நன்கு விளங்கும். தருமத்தின் பொருள் வெறும் சட்டதிட்டங்கள் இல்லை.

தருமம் என்னும் தெய்வீக உணர்வு இதயத்திலே துளியாய் துலங்குகிறது. அதனிடம் நம்மை நன்கு ஆத்மஸமர்ப்பணம் செய்யவேண்டும். இதுவரை தனக்கென்று எல்லா ப்ரீதிகளும் இச்சைகளும் இருந்தன. இன்றிலிருந்து நமக்கென்று ஒன்றும் கொள்ளாமல் தம்மையும் யாவற்றையும் அந்த ஈசனின் ப்ரீதியான தருமத்தின் பொருட்டே ஸமர்ப்பித்து விட்டு நமது செயல்கள் யாவற்றையும் அதையடிப்படையாகக் கொண்டேசெய்து வந்தால் சிறிய்தாய் இருந்த அந்த தெய்வீகம் நமக்குள்ளே மெல்ல மெல்ல வளரும். இதயம் முழுவதும் பரவும். அது ஒளிமயமானது. ஆதலால் ஒட்டுமொத்தமாய் இருளை நீக்கும். இதயம் முழுவதும் தெய்வீகம் பரவி ஒளிமயமாயாகும். இதய வேதம் இவ்வாறு விளங்குகிறது. நமக்கென்று உள்ள அத்தனை உணர்வுகளையும் நம்முகமாகக் கொள்ளாமல் தருமத்திற்காக ஸமர்பித்தல் வேண்டும். வெறும் செயல்களை ஸமர்பித்தால் போதாது. உணர்வுகள் யாவற்றையும் ஸமர்பித்தல் வேண்டும். நன்மை செய்விக்க ஏற்படும் உந்துதலே தருமம் என்றே பலகோணங்களில் கண்டுவருகிறோம். நன்மை என்பது என்னவெனில் முன்பு கூறியவாறே எதில் மிதமான துக்கமும் அதிகமான இன்பமும் உள்ளதோ அதுவே எனலாம். இவ்விளக்கம் ஏன் தரவேண்டியுள்ளதெனில் உலகில் நிரந்தர இன்பம் இல்லவே இல்லை. அப்படி ஒரு இன்பம் இருக்குமாகில் அதுவே உண்மையான நலம். அப்படியாகில் தருமத்திற்கு முன்புகூறியதைவிடத் தெளிவான விளக்கம் நிரந்தர நன்மையை அடையவேண்டும் என்ற நாட்டமே.

மிதமான அறிவு கொண்டவன் தனதுள் உள்ள நன்மை பயக்கும் உந்துதலை அதை அடிபணியும் செயல்களாலும் உணர்வுகளாலும் வளர்த்து அது வளரவளர அவன் அமிதமான

அறிவைக் கொண்டவனாகிறான். மிதமான அறிவால் எது அதிக இன்பமும் மிதமான துன்பமும் கொண்டுள்ளதோ அந்த நன்மையின் நாட்டத்தையே தரிக்கமுடிகிறது. ஆனால் இவ்வித தெய்வீக ஒளியை வளர்ப்பது மூலம் பக்குவமும் தகுதியும் பெற்ற மனிதன் அந்த மித அறிவையே அமானுட அறிவாய் ஆக்கி அதன் மூலம் அதிக இன்பம் மித துன்பம் கொண்ட நன்மையையும் நிரந்தரமான நன்மையையும் நாடுகிறவனாய் ஆகிறான். இந்நாட்டம் வாக்குக்கு அப்பாற்பட்டதால் இதை வாயினால் இவ்வாறு இருக்கும் என்று கூற இயலாது. இதை ஓரளவிற்கு வாயால் விளக்க முயற்சிப்போமெனில் இதை இருக்கையின் ஆதாராத்தைக் குறித்த நாட்டம் எனலாம். இது நிரந்தர நன்மையின் நாட்டமாதலால் இதை விசேஷ தருமம் எனலாம். மித மனதை அமானுடமனமாக்கினாலே தவிற இவ்விசேஷ தருமம் ஆயிரம் விளக்கப்பட்டாலும் என்னவென்று புரியாது. இவ்வமானுட மனம் நாட்டத்தாலேயே பரம்பொருளை அணுக தரிசிக்க ஸ்பர்சிக்க அதிமானுடமான ஜோதிமனமாகிறது. பரம்பொருளை தரிசிக்கிறது.

*இது கடந்தது. ஸூக்ஷ்மானது. அழியாதது. ப்ரும்ஹம் எனப்படும். தேவர்களின் இதயம் இதுவே. ஆனந்தமானது. ரகசியமானது.இதுவேராமன்.* –*ராமாயணம்.*

தேவர்களின் அறிமுகம் -

*வேள்வியில் கடவுளிருத்தினை கேள்வி*
*உயர்நிலையுலகத்தையரின்புறுத்தினை.*
*உருகெழு மரபிற் கடவுட்பேணியர்*
*கொண்டதீயின் சுடரெழுதோறும்...*

–*பதிற்றுப்பத்து*

**ரிக்வேதத்தில் பத்து மண்டலங்கள் உள்ளன. அதில் முதல் மண்டலம் இங்கு துவங்குகிறது.**

இருள் சூழ்ந்த மனிதமனத்திலும் உள்ள தருமத்தை நோக்கிய உந்துதல் என்கிற ஒரு தெய்வீகத்தையே வேதநூல் ஒரு தீயாகக் கூறும். அக்னிதேவன் இதயத்தில் மிளிரும் தருமத்தின் உந்துதலேயாகும்.

இவ்வித தெய்விகத்தீயை வளர்ப்பது எப்படி? அதை செயல் களையும் மனவெண்ணங்களையும் அதற்கே ஸமர்பிப்பது மூலம் வளர்க்கலாம் என்று முன்பேயே கண்டோம். இதனால் நமது செயல்களும் எண்ணங்களும் தெய்வீகமாகும். வெளியிலே வழிபாடுபோல் நடத்தும் சடங்குகளில் தீயில் ஸமர்பிக்கப் படும் ஸமித்துக்களும் நெய்யும் உள்ளக்னியான தெய்வீகத்திற்கு ஸமர்ப்பிக்கப்படும் செயல்களையும் எண்ணங்களையும் குறிக்கிறது. வேதகாலத்தில் இவ்வித தெய்வீக வழிபாட்டை யக்ஞம் என்பர். இது பலவகைப்படும். இதன் உள்ளர்த்தம் யாதெனில் உள் அக்னியான விவேகவொளியை வளர்த்தலே. அது வளர வளர பழுத்துப்போய் ஈசதரிசனத்தை ஏற்படுத்தும்.

அக்னி வழிபாட்டின் விவரங்கள் கூறப்பட்டன. ஒளியை அடைய விரும்பி இவ்வித அக்னியை வழிபட எண்ணிய ரிஷி அக்னியின் புகழைப் பாடத்துவங்குகிறார்.

**அக்னிமீளே என்று துவங்கும் முதல் ஸூக்தமந்திரங்கள்:**

நம் புரோஹிதரான யக்ஞத்தின் தேவரான தேவர்களை யக்ஞத்திற்கழைப்பவரான அக்னியைத் துதிக்கிறேன். இந்த தேவனால் உபாஸகன் என்றென்றைக்கும் வீரியத்துடனும் புகழுடனும் கூடியப் புஷ்டியான தனத்தை அடைகிறான். தேவனே! எந்த வழிபாட்டில் தாங்கள் ஸான்னித்தியம் கொண்டுள்ளீர்களோ அது தேவர்களையே சென்று அடையும். ஸூக்ஷ்மதரிசிகளின் க்ரதுவான ஸத்யஸ்வரூபரான அக்னி தேவர்களுடன் இங்கு வரட்டும். தேவனே! தருபவனுக்கு நீங்கள் அருளும் மங்களம் உங்களுக்கே ஆகும். தங்களை தினந்தோறும் இரவுபகலாய் நாங்கள் வணங்குகிறோம். ஸத்தியத்தைக் காப்பவரான ஜோதிக்கழைத்துச் செல்லும் யக்ஞங்களில் சோபிக்கும் தன் ஜோதிர்மயமான ஸ்தானத்தில் அபிவிருத்தியாகும் அக்னிதேவன் தந்தை மகனிடம் அன்புடன் வருவதுபோல் நம்மை வந்தடையட்டும்.

விளக்கம்: புரோஹிதர் என்றால் நம் முன்னிருந்து யக்ஞத்தை நடத்திவைக்கும் குரு என்று பொருள். அக்னிதேவதை என்கிற விவேகவுந்துதலே நமது வாழ்வின் யக்ஞச்சாதனைக்கு குருவாக இருக்கிறார். யக்ஞத்தின் தேவனும் அவரே. யக்ஞம் என்பது

செயல்களையும் சிந்தனைகளையும் தருமத்தை அடிபணியவைப்பது மூலம் தெய்வீகமாக்கும் ஸாதனையேயாம். இவ்வாறு அக்னியை தெய்வமாகவும் குருவாகவும் ஏற்று அவரை அடிபணிந்து வாழ்ந்தால் அவர் மற்ற தேவர்களை நம் யக்ஞத்திற்கு அழைத்து வருகிறார். தேவர்களுடன் மனிதர்கள் தொடர்பு கொள்ள அக்னியே ஸாதனமாயிருக்கிறார், அவர்மூலம் மனிதன் தேவர்களுடன் தொடர்பு கொள்ளமுடியும். இதைப்பற்றி பின்பு விஸ்தரித்துக் காண்போம்.

**க்ரது** என்றால் ஸங்கல்பம் என்றும் உந்துதல் என்றும் பொருள். அக்னி ஸ்தூலத்தையே எப்போதும் நோக்கும் குறுகிய புத்தியை விட்டு ஸூக்ஷ்மங்களைக்காணும் பரந்த அறிவைக் கொண்டவனின் அதாவது ஸாதகனின் க்ரதுவாக ஸங்கல்பமாக உந்துதலாக உள்ளார். இவ்வாறு ஸூக்ஷ்மதர்சிகளின் இதயத்தில் என்றும் துலங்கும் அக்னியை அடிபணிந்து செயல்களையும் சிந்தனைகளையும் அவர் பொருட்டு வாழ்வாகிற யக்ஞத்தில் ஸமர்பித்தால் அவை மங்களரூபமாக ஸமர்பித்தவர்களையே வந்து சேருகிறது. இவ்வித ஸமர்பணம் இருகாரியங்களைச் சாதிக்கிறது. உள்ளக்னியையும் வளர்க்கிறது. ஸமர்பிப்பவர்களுக்கும் க்ஷேமத்தைப் பண்ணுகிறது. ஆதலால் இரவு பகல் என்ற காலபேதம் அற்று என்றும் எப்போதும் எங்கும் அக்னியை ஸமர்ப்பணம் மூலம் வழிபடவேண்டியது. அப்படி வழிபட்டால் தனது வாஸஸ்தானமாகிய இதயஜோதியிலே அக்னி சுடர்விட்டு வளர்ந்து கொண்டேபோகிறது. குழந்தைக்குத் தலைவலியென்றால் அன்னை மருந்து தருகிறாள். அதன் உள்நோக்கு தலைவலி அகலவேண்டும் என்பதே. ஆனால் அது சாப்பிடுவதற்கு ஹடம் பண்ணுகிறது. ஆதலால் அவ்வன்னை நீ சாப்பிட்டால் உன்னை சினிமாவிற்கு அழைத்துச் செல்லுகிறேன் என்கிறாள். கண்டிப்பாக அழைத்துச்செல்லவும் தயாராகவுள்ளாள். இருப்பினும் முக்கிய உத்தேசம் தலைவலி அகலவேண்டும் என்பதே. இவ்வாறு எந்தையார் ஓருதாரணம் காட்டுவார். வேதம் அக்னிக்கு ஸமர்பித்தால் ஸமர்பித்தவனுக்கு க்ஷேமம் உண்டென்கிறது. ஆதலால் இவன் ஸமர்பிக்கிறான். ஆனால் முக்கிய உத்தேசம் இச்சிறியச் சிறியப் பலன்கள் இல்லை. பின்பு யாதெனில் அக்னியின் வளர்ச்சியே. அக்னி ஸமர்ப்பணங்களாலேயே

வளருகிறது. அது வளருவதால் பிரயோஜனம் அது வளர வளர தேவர்கள் யாவரையும் அழைத்து அறிமுகப் படுத்துகிறது. தேவர்கள் யாவரும் நமது யக்ஞத்திற்கு வந்து யாவரும் சேர்ந்து நம் இதயப்பிரபஞ்சத்திலே பரம்பொருளை ஸாதிக்கிறார்கள். அக்னிக்கு ஸமர்பிக்கும் ஸூக்ஷ்மதர்சியை நோக்கி தந்தை பிள்ளையிடம் அன்புடன் வருவது போல் அருளுடன் வந்துவிட அவரை புரோஹிதராயும் தெய்வமாயும் கொண்டு மேலும் அந்த ஸூக்ஷ்மதரிசி தனது யக்ஞத்திற்கு மற்ற தேவர்களையும் அழைக்கிறார்.

**வாயவாயாஹி என்று துவங்கும் இரண்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

அழகியவரே! வாயுதேவனே! வாருங்கள். உங்களுக்காக இந்த ஸோமம் உள்ளது. நீங்கள் பானம் பண்ணுங்கள். நாங்கள் உங்களை அழைக்கும் ஸ்தோத்திரங்களைக் கேளுங்கள். ஸோமம் கொண்டவர்களான

ஜோதியை அறிந்தவர்களான உபாஸ்கர்கள் உங்களை நோக்கித் துதிக்கின்றனர். தேவனே! மிக விஸ்தரித்த தங்கள் நாக்கு ஸோமபானம் பண்ணுவதற்காக உபாஸகனிடம் செல்லுகிறது. இந்திரனே! வாயுவே! தங்களை ஸோமம் விரும்புகிறது. இங்கு வரவும். சித்தத்திலிருந்து உருவாக்கப்பட்ட ஸோமத்தைப் பானம் பண்ண அதிவேகமாக வருவீர். பவித்திரமான விவேகசக்தி கொண்ட மித்திரனையும் சத்ருஸம்ஹாரகரான வருணனையும் அழைக்கிறேன். ஒளிமயமான உள்நோக்கைஇருவருமே ஸாதிப்பர். அறத்தால் அறத்தைத்தொட்டுக் காப்பர். பெரிதான க்ரதுவை ஸ்தாபிப்பர். ஸூக்ஷ்மதரிசிகள். பலமுறைப் பிறப்பவர்கள். ப்ருஹத்தான ஸ்தானத்தைக் கொண்டவர்கள். பவித்திரமான விவேகசக்தியை அவர்கள் அருளட்டும்.

விளக்கம்: மானுடவாழ்க்கையின் ஒரே ஸாரமான யக்ஞத்தில் உள்ளக்னியை வளர்ப்பவனுக்கு பலனாக ஸோமம் கிடைக்கிறது. ஸோமம் என்றால் என்ன? ஸோமம் என்பது நிலவு. அதுமட்டிலும் அல்லாமல் நிலவினால் வளர்க்கப்படும் ஒருசிறப்பான மூலிகை உண்டு. அதன் ரஸம் ஸோமம். இது ஹிமாலயத்திலேயே கிடைத்தது.

இன்று கிடைப்பதில்லை. இந்த ரஸம் மிகவும் பிரஸித்திபெற்றது. இது வெறும் கள்ளோ அல்லது வேறேதோ மயக்கம் அளிக்கும் பானமோ அன்று. இது மிகவும் ஆரோக்கியமானது மட்டிலுமல்லாமல் மிகவும் சுவையானது. தீயானது எப்படி வேதத்தில் விவேகவொளியைக் குறிக்கிறதோ அவ்வாறே ஸோமம் அதனால் அடையப்படும் பலனான ரஸனையைக் குறிக்கிறது. இதற்கு ஒன்பதாம் மண்டலத்திலேயே அதிகமானப் பிரமாணம் உண்டு.

ஸோமத்தைப் பற்றி அங்கு விஸ்தாரமாய் காண்போம். ஸோமம் வாழ்வில் உள்ள பிடித்தத்தையும் ரஸனையையும் அதை அனுபவிக்கும் இதயத்தையும் குறிக்கும். வேதம் வாழ்வை எப்படி தெய்வீகமாக்கி கடவுளுக்கு அர்ப்பணிக்க வேண்டும் என்பதைக்கூறவே உள்ளது. இறைவன் எதைக்கொடுத்தான்? வாழ்வையே. அதை நிராகரிக்காமல் ஏற்று அதை தெய்வீகமாக ஒளிமயமாக ஆக்கவேண்டும். இதையே வேதம் கூறுகிறது. இப்படியாக்க முதலில் வாழ்வில் பிடித்தம் வேண்டும். அதுவே ரஸம். நமது எண்ணங்களாகிய உள்வாழ்விலும் செயல்களாகிய வெளிவாழ்விலும் இதயத்திலே தெய்வீகமாக விளங்கும் தீக்கு ஸமர்பிக்க அதை வளர்க்க ஒரு ரஸனை சிந்தைகளிலும் செயல்களிலும் தீயிலும் அவசியம் வேண்டும். இந்த ரஸமாகிய பிடித்தமாகிய ஸோமன் அற்று அக்னி இயங்காது.

இந்த ரஸனை மிகவும் உயர்ந்தது. இது தெய்வீகமானது. ஏனெனில் இது விவேகவொளியைக் குறித்து நம்மை கொண்டு செல்லும் ரஸம். ஆதலால் ஸோமனற்று அக்னியில்லை. அக்னியற்று ஸோமன் இல்லை. ஸோமன் ப்ராணபலத்தையும் ஊக்குவிக்கிறது. ஸாதகனுக்கு ப்ராணபலம் மிகவும் அவசியமானது. அந்த ப்ராணன் ஸோமத்தைப் பருகியே வளருகிறது. ஸோமன் யக்ஞத்தின் பலனாய் கிடைக்கும் ஸ்ரேயஸிலும் உள்ள ரஸனையைக் குறிக்கும். இந்த ஸ்ரேயஸை நாம் ரஸித்து அனுபவிப்பதில் தவறேதுமில்லை. ஏனெனில் இது யக்ஞத்தின் பிரஸாதமல்லவோ. இது அவசியம் ரஸித்து அனுபவிக்கப்படவேண்டும். அப்போதே அது மேலும் மேலும் யக்ஞம் செய்ய ஊக்கமளிக்கிறது. மேலும் மேலும் யக்ஞம் செய்ய ப்ராணன் மிகவும் மெருகூட்டப்பட்டு ஒளிமார்கம் வெளியாகி அதனால் ஆன்மநாட்டத்தைப் பெருகிறது. ப்ராணன்

என்றால் என்ன? இயக்கிவைக்கும் சக்தியே ப்ராணனாகும். இது பெரும்பாலும் நாடிகளிலே சஞ்சரிக்கிறது. பலவாய் பிறந்துள்ளது. விவேகவொளியாகிய தீ வளர வளர இந்தப் பிராணன் ஒருங்கிணைக்கப்பட்டு ஆன்மநாட்டத்தில் ஒடுங்கும். இவ்வித நாட்டத்தோடும் சேர்ந்து ஸோமரஸம் இயங்கி முடிவாக அது ப்ரும்ஹானந்த ரஸானுபவமாக மிளிர்கிறது. ப்ராணனின் தேவதையாக வாயுதேவன் இருக்கிறார். வாயு வெளியியற்கை ரீதியாகக் காற்றைக் குறித்தாலும் உட்பொருளால் ப்ராணனைக் குறிக்கிறார். இந்த வாயு தேவன் ஸோமபானம் செய்ய யக்ஞத்தில் அழைக்கப்படுகிறார். ஏனெனில் ப்ராணன் இயங்குவதும் விவேகநாட்டமாகிய ஸோமத்தால்தான். ப்ராணன் ஒருமுகப் படுவதும் ஆன்மநாட்டமாகிய ஸோமனால்தான்.

இப்பெரும் செயலுக்கு ஆற்றலும் பேரறிவின் சக்தியும் தன்னம்பிக்கையும் வளர்ச்சியின் வேகமும் ஊக்கமும் வேண்டும். இவையாவற்றையும் ஒட்டுமொத்தமாக மனோபலம் எனலாம். வாயு ப்ராணபலத்தின் தேவதையெனில் இந்திரன் மனோபலத்தின் தேவதை. அவரின் செயல் யக்ஞத்திலே மிகவும் பெரிது என்பதால் அவரும் யக்ஞத்தில் ஸோமபானத்தின் பொருட்டு அழைக்கப் படுகிறார். கருத்து யாதெனில் பலமும் ப்ராணனும் பிடித்தமற்று தெய்வீகமாகமுடியாது. ஆதலால் பிடித்தம் என்பது தெய்வீக மாவதற்கு மிகவும் அவசியம்.

இவ்விதமாக ஸூக்ஷ்மதரிசியானவன் தான் தெய்வீகத்தைப் பெற இந்திரனையும் வாயுவையும் அழைத்துவிட்டு பிறகு தனது க்ரதுவான அதாவது சங்கற்பமான தீயை மேலும் வளர்க்க வேறு இருதேவதைகளை யக்ஞத்தில் உதவி நாடுகிறான். வறண்ட இதயத்தில் பிரேமை என்கிற நீருற்று தாரை தாரையாகப் பிரவஹிக்க வேண்டும். அது ஒளிமயமானது. அதுவே இருளைப்போக்கி அக்னியை வளர்க்கும். அதுவற்று அக்னி இராது. பிரேமை மிகவும் முக்கியமானது. ஆனால் பிரேமை இருவிதம். விவேகமற்றக் குருட்டுப் பிரியம் தீங்கையே விளைவிக்கும். ஆனால் வேதமோ இங்கு பவித்திரமான விவேகசக்தி கொண்ட பிரியத்தைக் கூறுகிறது. இதன் தேவன் மித்திரன். வருணனோ தூய்மையின் தேவன். அவர் இதயத்திலுள்ள தீயசக்திகளாகிய தனது சத்ருக்களை ஸம்ஹரித்து

தூய்மையை ஸ்தாபிப்பவர். மித்திரனோ பவித்திரவிவேகமுடையவர். இவ்விருவரும் ஒளிமய த்யானத்தை ஸாதிக்கிறவர்கள். இவ்விருவரையும் அதற்காக யக்ஞத்திற்கு ஸாதகன் அழைக்கிறான். அன்பும் தூய்மையுமே ஒருங்கிணைந்து ஒளிமயத்யானத்தை அருளும். கவனசக்தியைத் தரும்.

மித்திரனும் வருணனும் ஒவ்வொரு யக்ஞத்திலும் ஒவ்வொரு ஸூக்ஷ்மதரிசியின் இதயத்திலும் பலமுறை அவதரிப்பதால் பல அவதாரங்கள் எடுப்பவர்கள். விவேகத்தை அவர்கள் தரித்து க்ரதுவை அபிவ்ருத்தி செய்வர்.

**அச்வினா யஜ்வரீரிஷ: என்று துவங்கும் மூன்றாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

பெரிதாய் அனுபவிக்கிற அதிவேக கதியைக் கொண்ட மங்களத்தைக் காப்போரான அச்விகளே! யக்ஞத்தை த்ருடமாக்கும் சக்திகளை புஜியுங்கள். பலம் கொண்ட தாரணையால் தரிப்போரே! வீரபுருஷர்களே! பலச்செயல்கள் செய்பவர்களே! மந்திரங்களைக் கேளுங்கள். பொய்யற்றவர்களே! இளைஞர்களே! வேககதி கொண்டவர்களே! வாருங்கள். கவனசக்திகளையே செல்வங்களாய் கொண்ட பவித்திரமான ஸரஸ்வதி எங்கள் யக்ஞத்தை விரும்பட்டும். மங்களமான ஸத்தியங்களைப் பிரேரிக்கும் நல்ல ஹ்ருதயபாவங் களைப் பிரக்ஞாமயமாக்கும் ஸரஸ்வதி யக்ஞத்தை தரிக்கிறாள். அவள் ஸமஸ்த த்யான சக்திகளையும் ஒளிமயமாக்குபவள். அவள் பெரும் ஸமுத்திரத்தை ப்ரக்ஞையாலே சைதன்யமாக்குகிறாள்

விளக்கம்: இதயஸமுத்திரத்திலே பரமாத்மஸூர்யன் உதயமாகும் வேளையிலே அப்பெருங்கடலில் கப்பலோட்டிக் கொண்டு அச்விகள் செல்லுகின்றனர். ஆனந்தமாக ஸோமபானம் பண்ணிக்கொண்டும் விளையாடிக்கொண்டும் அழகியவர்களாகவும் ரஸிகர்களாயும் உள்ளனர். இவர்கள் ஸூர்யபுத்திரர்கள். இதுவொரு பக்கமிருக்க அவர்களின் மறுபக்கம் யாதெனில் அவர்கள் வீரர்களாயும் வேகம் சக்தி ஆற்றல் நிறைந்தவர்களாயும், குதிரை வீரர்களாயும் உள்ளனர். குதிரை வேதத்தில் ப்ராணசக்தியைக் குறிக்கும். அச்விகள் எப்போதும் குதிரைகளில் வருவர். இவர்கள் இவ்வாறு மிருதுவாகவும் வேகமாகவும் விளங்குவர். இவ்விருவரும்

ப்ராணனுடையவும் ஸோமனுடையவும் வேகசக்தியையும் ம்ருதுத்தன்மையையும் குறிப்பர்.

கடல் எப்போதுமே வேதத்தில் சைதன்யதாரையாகப் பெருகும் மனதையும் அதனால் பாய்ச்சப்படும் வாழ்வையும் குறிக்கும். இக்கடலில் வந்து கலப்பவள் ஸரஸ்வதிநதி. இவள் அப்பெருங்கடலை ஆனந்தப்படுத்தி ரஸமான ஹ்ருதயபாவங்களை தெய்விக சைதன்யமாக்குபவள். ஸோமரஸத்தின் பிரவாஹத்தை வாழ்விலும் இதயத்திலும் என்றும் ஸாதகனுக்குப் பிரேரணை செய்கின்றவளான அனுபூதியையே ஸரஸ்வதிநதி குறிக்கிறாள். வேதத்தில் கங்கை யமுனை போன்றமற்ற எல்லா நதிகளுமேகூட அனுபூதியின் தேவதைகளாகவே பெரும்பாலும் வர்ணிக்கப் படுகின்றனர்.

**ஸுரூபக்ருத்னுமூதயே என்று துவங்கும் நான்காம் ஸூக்த மந்திரங்கள்:**

அழகிய ரூபங்களை உருவாக்கும் இந்திரன் நம் வளர்ச்சிக்காக பால் சுரக்கும் பசு கரப்பவனிடம் பால் நம்மிடம் வரட்டும். நாம் இந்திரனை தினந்தோறும் அழைக்கிறோம். ஸோமபானம் செய்பவரே! எங்கள் யக்ஞத்திற்கு வாரீர். ஸோம பானத்தினால் தங்களுக்கு ஹர்ஷம் வளரட்டும். நீங்கள் ஜோதியின் நாயகர். ஞான ரச்மிகளைத் தருவீர். உங்களின் அந்தராத்மாவில் புதைந்துள்ள உயர்ந்த சிந்தனைகளை நாங்கள் அறியவேண்டும். ரிஷியே! வேதத்தைக் கொண்டுள்ள ஹிம்ஸிக்கப்படாதவரான நன்கு காணக்கூடிய திறமைகொண்ட பிரக்ஞையின் தேவரான இந்திரனிடம் கேட்பீர். அவர் தன் தோழர்களுக்குச் சிறந்த வரத்தைத் தருவார்.

விளக்கம்: அக்னியின் பலத்தைக் கொண்டு பல தேவர்களை அழைக்கிற ஸூக்ஷ்மதரிசி இப்போது மறுபடியும் இந்திரனையே அழைக்கிறார். இந்திரன் பலத்திற்கான தேவன். அவர் உடல் பலத்தையும் புஜபலத்தையும் இயற்கையின் பெரும் சக்தியான மழையை இயக்கும் பலத்தையும்கூடக் குறித்தாலும் பெரும்பாலும் அவரை வேதம் மனவலிமையாயும் மனவாற்றலாயும் அக்னிக்காக

போர்புரிபவராயும் தன்னம்பிக்கையாயும் பேரறிவின் சக்தியாயும் சுருக்கமாய் சொல்லப்போனால் மனோபலமாயுமே கூறுகிறது.

ஸூக்ஷ்மதரிசிகளின் திவ்யவுலகில் ஜோதியுருவங்களைக் காட்டுபவர் இந்திரனே. இவர் ஜோதிகளைப் பெற போர் புரிகிறார், ஜோதிகள் என்றால் பரமாத்மஸூர்யன் இதயத்திற்கு அளிக்கும் தனது சைதன்யசக்திகள். இவைகளை வேதம் பசுக்களாக வர்ணிக்கும். **கௌ:** என்கிற ஸம்ஸக்ருத வார்த்தைக்கு பசு என்றும் ஒளி என்றும் பொருள். இப்பசுவை ஸாதகன் கரந்து குடிக்கிறான். அவ்வாறே இந்திரனிடமிருந்து உதவியைக்கரக்க அவரை யக்ஞத்திற்கு அழைக்கிறான். இந்திரன் வந்து தீயசக்திகளுடன் போராடுகிறார். அவர்களை வென்று அவர்கள் கொண்டு சென்ற ஆன்மஸூர்யனின் சைதன்யசக்திகளான கிரணங்களைப் பசுக்களை நமக்காக மீட்கிறார்.

**யுஞ்ஜந்தி பத்னம் என்று துவங்கும் ஆறாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

பலசாலியான இந்திரனே! பிரக்ஞையற்ற இடத்தில் பிரக்ஞையையும் பிரக்ஞைஉருவற்றவனுக்கு உருவையும் செய்வித்து பிரக்ஞாமயமான ஒளிக்கதிர்களுடன் உதித்தீர்கள். திருடமான பர்வதஸ்தானங்களைக்கூட உடைத்து இருள் சூழ்ந்த இடத்திற்குக் கூட உங்களைக் கொண்டு செல்லும் சக்திவாய்ந்த மருத்துக்களால் நீங்கள் பசுக்களை அடைந்தீர்கள்.

விளக்கம்: பரமாத்ம ஸூர்யனின் சைதன்யகிரணங்களாகிய சக்திகளைக் கொண்டே யக்ஞத்தை மேலும் வளர்க்கவேண்டும். அவை நம்முடையவை. ஆனால் சோம்பேறித்தனம் காமவெறி கோபவெறி முதலிய தீயசக்திகளான அஸுரர்களால் அச்சக்திகள் திருடப்பட்டன. அவைகளை அஸுரர்கள் மலைக்குள்ளே குஹை யில் ஒளித்தனர். வேதத்தில் பெரும்பாலும் மலை ஜட சரீரத்தையும் குஹை இதயகுஹையையும் குறிக்கும். இந்த ஜடமான சரீரத்தி னுள்ளேயுள்ள இதயகுஹையில்தான் எல்லாவிதமான பெரும் ஆற்றல்களும் புதைந்துக் கிடக்கின்றன. இந்திரன் இந்தஜடமான மலையைப் பிளந்து அதாவது சரீரத்திற்கும் அப்பால் சென்று உள்ளே புதைந்துள்ள சைதன்யசக்திகளைக் கண்டறிகிறார், இந்திர

னின் இவ்வாற்றலுக்கு பெரும் உதவியாக இருந்தோர் இந்திரனின் தம்பிகளான மருத்துக்கள். இவர்கள் சிந்தனாசக்திகளை குறிப்பர்.

## இந்த்ரமித் என்று துவங்கும் ஏழாம் ஸூக்தமந்திரங்கள்:

ஸாமகர்கள் இந்திரனை பிருஹத்ஸாமனால் பாடுகின்றனர். இந்திரனை ரிக்குகளால் ஸ்தோத்திரம் பண்ணுகின்றனர். இந்திரனை உயர்ந்த வாக்கியங்கள் துதிபாடுகின்றன. இந்திரன் அனைத்தையும் கொண்டவராய் வாக்கினால் சோதிக்கப்படும் குதிரைகளில் வருகிறார். ஜ்வலிக்கின்ற வஜ்ராயுதம் கொண்டவர். இந்திரன் தேவஸாம்ராஜ்ஜியத்தில் ஸூர்யதேவனை உதிக்கச்செய்கிறார். மஹாதனத்தை அடையப்போகும் நாங்கள் வ்ருத்திரர்கள் வருகையில் வஜ்ரம் தரித்த இந்திரனை அழைக்கிறோம்.

விளக்கம்: இந்திரன் வ்ருத்திரர்கள் என்று பெயர்கொண்ட மனதின் தீயசக்திகளை தரிக்க ஆயுதங்களை தரிக்கிறார்.இடிகள் மின்னல்கள் மேகங்கள் காற்று வானவில் இவையாவும் மனதிற்குள்ளேயே ஒளியுடன் கூட இருந்து வருகின்றன. இவை யாவும் இந்திரனின் போர்சக்திகளைக் குறிக்கின்றன. வ்ருத்திரர்களை ஸம்ஹரிக்கின்றன. வ்ருத்திரர்களைச் சம்ஹரித்து இந்திரன் ஆத்மஸூர்யனை இதயஆகாசத்தில் ஏற்றிவைத்து ஒளிமயமாக்கி விடுகிறார். இவ்வித செயல்களைச் செய்ய இந்திரனை ஸூக்ஷ்மதரிசி அழைக்கிறார்.

## காயந்தி த்வா எனத்துவங்கும் பத்தாம் ஸூக்தமந்திரங்கள்:

இந்திரனே! தங்கள் புகழ் மகிமைப்படுத்தப்படுகிறது. பசுக்கள் மறைந்துள்ள மலையை சத்ருக்களைக் கொன்றுத் தன் சொந்தமாக்கியவரே! பிரக்ஞானரச்மிகளின் வாஸஸ்தானத்தைத் திறந்து வைக்கவும். ஸித்திரூபமான தனத்தைச் செய்யுங்கள். (சம்பாதியுங்கள்). சிஜ்ஜோதியை மறைத்த விருத்திரனை வதைத்த நீங்கள் ப்ரும்ஹாண்டத்தையே தரித்துப் போஷிக்கும் ஜோதிர்வாஹினிகளான சக்திகளைப் பெற்றீர். இந்திரனே! கௌசிகனே! (இதயகோசத்திலுதித்தவரே) சந்தோஷித்து இங்கு வாருங்கள். ஸோமபானம் பண்ணுங்கள். புலன்களுக்கப்பாற்

பட்டவைகளைக் காணும்படி என்னைச் செய்வீராக.

### இந்த்ரம் விச்வா என்றுத் துவங்கும் பதிநொன்றாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:

ஸமுத்திரம்போல் அகண்டவரான மஹாரதர்களில் சிறந்தவரான ஸத்பதியான இந்திரனை எல்லா ஸ்தோத்திரங்களும் வர்தனம் பண்ணட்டும். தங்களின் நட்பால் நாங்கள் அச்சமற்று உள்ளோம். எங்கும் வெல்லமுடியாத இந்திரனைத் துதிக்கிறேன். இந்திரன் தன்னைத் துதிக்கும் ஸாதகனுக்குப் ப்ரக்ஞானகிரணங் களையும் ஸம்ருத்தியான தனத்தையும் தருகிறார். இந்திரன் வ்ருத்திரர்களாகிய தமோகுணத்தை பேதிக்கும் வஜ்ரத்தைக் கொண்டவர். ஸூக்ஷ்மதரிசி. அமிதமான பலமும் யௌவனமும் பொருந்தியவர்.

ஜடத்தைக்குறிக்கும் மலையில் ரகசியமான அந்தகாரத்தில் தீயசக்தியைக் குறிக்கும் வலன் என்ற அஸுரன் சிஜ்ஜோதிர்மய கிரணங்களாகிய பசுக்களை ஒளித்துவைத்திருக்கையில் அந்த குஹையை தங்கள் சக்தியால் திறந்தீர். உங்கள் சகாயத்துடன் பயமற்ற தேவர்கள் உங்களிடம் உள்ளனர். (அன்ன ப்ராண மனோகத ஸோமரஸத்தை வற்றடிக்கும் அஸுரர்களைக் கொன்று ) நீங்கள் அனுக்கிரஹம் பண்ணி ஸமுத்திரம் போன்ற ஸோமரஸத்தை எங்களிடம் பிரவஹிக்கச் செய்தீர்.

### ந நூனமஸ்தி எனத்துவங்கும் நூற்றி எழுபதாம் ஸூக்தமந்திரங்கள்:

இந்திரன்: இன்றைக்கோ நாளைக்கோ அது இல்லை. எண்ணங்களுக்கது எட்டவில்லை. அதை யார்தான் நன்கு அறியமுடியும். அவ்வாச்சர்யம் வேறுப் பிரக்ஞையில் சஞ்சரிக்கிறது.

ரிஷி: போரில் என்னை ஹிம்ஸிக்க வேண்டாம். தங்கள் ஸாதனையில் க்ஷேமம் காண்பீர். நீங்கள் உங்கள் தம்பிகளான மருத்துக்களால் முயலவும்.

இந்திரன்: அக்னியை ஓங்கச் செய்யவும். அது சுடர்விட்டெறியட்டும். அதுவே தங்களுக்கு அம்ருதப் பிரக்ஞையை அருளும்.

ரிஷி: தேவஸ்ரேஷ்டரே! மித்திரபதியே! உண்மைகொண்ட யக்ஞ ஹவிசுகளை மருத்துக்களுடன் புஜிக்கவும்.

விளக்கம்: இது ஸூக்ஷ்ம தரிசிக்கும் இந்திரனுக்கும் நடக்கும் ஒரு அழகிய ஸம்வாதம். இந்திரன் தன் பலத்தால் மட்டிலுமே இன்று நேற்று என்ற காலத்திற்கு உட்படாத பரம்பொருளை அடைய எண்ணுகையில் அதை அடையமுடியவில்லை. இலக்கை அடையாத இந்திரனின் இப்போரில் ஸாதகன் வீணாக ஹிம்ஸையடைய பரதத்துவம் தெய்வப்பிரக்ஞையில் சஞ்சரிப்பதால் அதை மருத்துக்களாகிய சிந்தனாசக்திகளோடு சேர்ந்து அடைய முயலும்படிக் கூறுகிறார்.

ஆனால் தெய்வப்பிரக்ஞயைக்கு அழைத்துச் செல்ல அக்னியால் மட்டிலுமே முடியும் என்பதால் இந்திரன் அக்னியை வழிபடும்படி ஸூக்ஷ்மதரிசியை ஆணையிடுகிறார். ஆதலால் அவர் அக்னியை உபாஸித்து அம்ருதப் பிரக்ஞயையை அடைந்து இந்திரனுக்கு வேண்டிய ஹவிசுகளை அளிக்கிறார்.

**ஸுஸமித்த: என்றுத் துவங்கும் பதிமூன்றாம் ஸூக்தமந்திரங்கள்:**

அக்னியே! நீங்கள் நன்கு ஜ்வலிக்கிறீர். தேவர்களை அழைத்துவாருங்கள். தனூனபாத் என்ற அக்னியே! ரஸமயமான எங்கள் யக்ஞத்தை தேவர்களிடம் எடுத்துச் செல்லுங்கள். நராசம்சன் என்ற அக்னியே! ப்ரியமான மதுரவாக்கியரான உங்களை அழைக்கிறேன். ஈளிதன் என்ற அக்னியே! மந்திரத்தால் நீங்கள் ஸ்தாபிக்கப்பட்டவர். தேவர்களை அழைப்பவர். ஸுகமான ரதத்தை தேவர்களை வைத்தழைத்து வாருங்கள். ராத்திரியே! உஷையே! உங்களை எங்கள் யக்ஞத்திற்கு அழைக்கிறோம். இங்கு வந்து இவ்வாஸனத்தில் அமரவும். இளையும் ஸரஸ்வதியும் மஹீயும் இவ்வாஸனத்தில் அமரட்டும்.

விளக்கம்: ராத்திரி என்பது மனுஷ்யப்பிரக்ஞையையும் உஷா என்பது தெய்வப்பிரக்ஞையையும் குறிப்பவர்கள். ஸூக்ஷ்மதிருஷ்டி ஸ்ருதி மஹத்துவம் இவைகளின் தேவதைகளே இளா ஸரஸ்வதி மஹீ அல்லது பாரதி ஆவர். ப்ருஹஜ்ஜோதியின் தெய்வீகமான சக்தியான மஹீ ஸாதகனுக்கு மஹத்துவத்தைத்

தருகிறாள். ஜோதியை தரிசிக்கப் பிரக்ஞாமய ஞானதிருஷ்டியை அளிக்கிறாள் இளா. திவ்யானுபூதியை ஸாதகனுக்குக் கேட்கச் செய்கிறாள் ஸரஸ்வதி. இவர்கள் ஸாதகனை வளர்க்கும் ஸூர்யதேவனின் சக்திகளே.

### அயம் தேவாய ஜன்மனே என்று துவங்கும்இருபதாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:

எந்த ருபுக்கள் மந்திரபலத்தால் தூண்டப்பட்ட இந்திரனின் குதிரைகளை சம்பாதித்துக் கொண்டனரோ அவர்கள் இந்த யக்ஞத்திற்கு வந்துள்ளனர். இந்த ருபுக்கள் எங்கும் ஒரு ஸுககரமான ரதத்தை அச்விகளுக்காகச் செய்தனர். அம்ருதத்தைக் கரக்கும் பசுவை ஸ்ருஷ்டித்தனர். இவர்கள் வயது முதிர்ந்த ஜோதியையும் ஜகத்தையும் இளமை தந்து சந்தோஷப் படுத்தினர். ருபுக்களே! தங்களின் ஸோமம் மருத்துக்களுடன்கூடிய இந்திரனுடனும் மற்றதேவர்களுடனும் சேர்ந்தது.

விளக்கம்: ருபுக்கள் ஸூர்யகிரணங்களாவர். ஸத்யமான பரப்ரும்ஹமே ஸூர்யன். பூர்ணப்பிரஜ்ஞையிலிருந்துத் தோன்றிய ஸூர்யகிரணங்களை அன்னமயமான ஜடமான ஸ்தூலசரீரத்தை நோக்கும் மனிதனை சுத்தசைதன்யத்தை நோக்கச் செய்து உயர்த்துகிறது. இதனால் மனிதன் தேவனாகிறான். ஸுதன்வம் என்றால் ஜலவசதியேயற்ற ஸ்தானம் என்று பொருள். அது ஜடமான ஸ்தூல சரீரத்தைக் குறிக்கிறது. ஸூர்யனின் விஞ்ஞான கிரணங்கள் ஸ்தூலம் வரை அவதரித்து அதையே நோக்கும் மனிதனை முன்னேற்றி தேவனாக்குகிறது.

இதனால்தான் ஸுதன்வா என்பவர்களின் புத்திரர்களாய் ருபுக்கள் பிறந்து தவத்தினால் இந்திரனின் ப்ராணபலமாகிற குதிரைகளை ஞானகிரணங்களாகிய ருபுக்கள் ஸம்பாதித்தனர். அதாவது மனோபலம் தெய்வீகமானது. வேதம் அதிதி என்ற தேவதையை பசு என்று கூறும். அதிதியின் தத்துவம் அகண்டப்பிரக்ஞையையேயாகும். சித்ரச்மிகளான ருபுக்கள் அதிதி என்ற பசுவை ஸ்ருஷ்டித்தனர். ஜ்யோதிர்லோகம் மனதையும் பூலோகம் உடலையும் குறிக்கின்றன. இவையே தாய்தந்தையர். மிகவும் ஜீர்ணமான இவர்களை (சித்ரச்மிக்கள்) புதிதாக்கி

இளமையை அளிக்கின்றனர்.

தனது யக்ஞத்தை வளர்க்க அக்னியின் பலத்தால் வாயு இந்திரன் மித்திரன் வருணன் முதலிய பல தேவர்களை அழைத்த ஸூக்ஷ்மதரிசி அவர்களின் செயல்களால் மேலும் மேலும் தெய்வீகத்தில் வளர்ந்து பரமாத்மனான விஷ்ணுவையே வழிபடுகிறான்.

**இருபத்திரண்டாம் ஸூக்தத்தின் அதோ தேவா அவந்து ந: என்று துவங்கும் மந்திரங்கள்:**

எந்த ஸ்தானத்திலிருந்து விஷ்ணு ப்ருதிவிஸம்பந்தமான ஏழுஸ்தானங்களையும் அளந்தாரோ அந்த ஸ்தானத்திலுருந்து தேவர்கள் நம்மை வளர்க்கட்டும்.

விளக்கம்: விஷ்ணு என்னும் தேவனின் தத்துவம் ஸூர்யன். விஷ்ணு என்றால் ஸர்வவ்யாபகர் என்று பொருள். ஸூர்யன் தன் கிரணங்கள் மூலமாய் பிரபஞ்சம் முழுவதும் வ்யாபித்துள்ளார். அண்டத்தின் பிரகாரம் இப்படி விளக்கம் இருந்தாலும் பிண்டத்தின்படி காண்போம்.

இதயகுஹையில் மிளிர்கிற பரமாத்மாவே விஷ்ணுவின் தத்துவம். அவ்வாத்மா எங்கும் வ்யாபித்துள்ளது. அவ்வாத்மா இல்லாத இடமே கிடையாது.

அன்னமயகோசம் என்கிற பூலோகத்திலும் ப்ராணமய கோசம் என்கிற புவர்லோகத்திலும் மனோமயகோசம் என்கின்ற ஸ்வர்கலோகத்திலும் பரமாத்மாவாகிற விஷ்ணுவின் சைதன்ய கிரணங்கள் வ்யாபித்துள்ளன.

மனோமயகோசமான ஸுவர்லோகத்தையே மேலும் மேலும் பெரியோர்கள் பிரிக்கின்றனர். மனது உணர்வுமயமானது. மிருகங்களுக்கும் அந்த மனது உண்டு. மனிதர்களுக்கும் உண்டு. ஆனால் இரண்டிற்கும் வித்தியாசம் என்ன? மனிதனிடம் விவேகவுணர்வும் சேர்ந்து உள்ளது.

அந்த விவேகவுணர்வே விஞ்ஞானமய கோசமாகிய மஹர்லோகம். இந்த மஹர்லோகத்திலிருந்துதான் மனிதன் ஸத்தியம் பரோபகாரம் ஜீவகாருண்யம் சுயநலமின்மை முதலிய எல்லா விஷயங்களையும் பெறுகிறான். இந்த மஹர்லோகம் பரிபூர்ண

தருமவுணர்வைக்கொண்டது. இதற்கு மேல் ஆன்மநாட்டம் பரிபூர்ணதருமத்தின் மூலமாய் ஆரம்பிக்கிறது. ஆனந்தநாட்டத்தால் கிடைக்கும் ஆனந்தமே ஜனலோகம். அதனால் சிச்சக்தியில் ஸ்திதியே தபோலோகம். சிச்சக்தியில் நிற்பதே மிகவும் பெரிய தவமாம். இதுவெல்லாவற்றின் பலனாக விஷ்ணுவாகிய பரமாத்மனின் தரிசனம் கிடைக்கிறது. அதுவே ஸத்யலோகம். அங்கு பரமார்த்தஸத்யம் மிளிர்கிறது. விஷ்ணு பூலோகம் துவங்கி ஸத்யலோகம் வரை ஏழுஸ்தானங்களையும் அளந்தவர்-அதாவது எங்கும் வ்யாபித்தவர்.

விஷ்ணுவின் சைதன்யகிரணங்கள் எங்கும் வ்யாபித்திருந்தபோதும் வேதம் விஷ்ணுவின் மூலஸ்தானத்தையே இங்கு நாடுகிறது. ஸாதகன் ஒவ்வொரு உலகிலும் முன்னேறி வருகையில் விஷ்ணுவின் மூலஸ்தானத்திலிருந்தே தேவர்கள் அவனுக்குச் சக்தியை அளித்து வளர்க்கட்டும் என்றே வேதம் கூறுகிறது.

மந்திரங்கள்: விஷ்ணு இந்த எல்லா உலகையும் குறித்து அடிவைப்புகளைச் செய்தார். மூன்றுவிதமாகப் பாதத்தை வைத்தார். இந்த தேவனுடைய பாததூளியிலே உலகமே ஸ்தாபிக்கப்பட்டது.

விளக்கம்: ஒருகாலத்தில் அஸுரர்களே இந்தப் பிரபஞ்சத்தை ஆக்கிரமித்திருந்தனர். தேவர்கள் அவர்களிடம் சென்று எங்களுக்குச் சிறியபாகம் நிலம் கொடுங்கள் என்று சொன்னார்கள். அஸுரர்கள் தேவர்களுக்குக் கிழக்குதிசையில் அக்னியை ஸ்தாபிக்கச் சிறிது இடம் தந்தனர். தேவர்கள் கிழக்குதிசையில் அக்னிரூபமான உதயஸூர்யனை ஸ்தாபித்தனர். அந்த உதயஸூர்யன் ஆரம்பத்தில் சிறிதாய் தெரிந்தபோதும் சிறிது சிறிதாகப் பெரிதாய் வ்யாபித்தார்.முடிவில் தேவஸாம்ராஜ்ஜியம் மட்டுமே இருந்தது. அந்த அளவிற்கு ஸூர்யன் வ்யாபித்தவரா னார்.இக்கதை ஸம்பிரதாயத்தில் தொன்றுதொட்டு வருகிறது. ப்ராம்ஹணத்திலும் கூறப்படுகிறது. மஹாபலி என்ற அஸுரனின் யக்ஞத்திற்கு விஷ்ணு சிறியரூபத்தில் வந்து சிறியவிடத்தைக் கேட்டுப் பிறகு எங்கும் வ்யாபித்தவரானார். இக்கதை புராணத்திலுள்ளது.

வேதத்தில் ராத்திரி இருவிதம். வேதத்தால் போற்றப்படும் ராத்திரி. வேதத்தால் இகழப்படும் ராத்திரி. இவ்விரண்டில் முதலாவது மனுஷ்யப்பிரக்ஞையையும் இரண்டாவது அஸுரப்பிரக்ஞையையும் குறிக்கின்றன. அஸுரப்பிரக்ஞையாகிற இரவு இதயப்பிரபஞ்சத்தைச் சூழ்ந்திருக்கையில் தரும நெறிகள் நிறைந்த பகலின் தத்துவமாகிய தெய்வப்பிரக்ஞை சிறிதுசிறிதாய் இதயப்பிரபஞ்சத்தில் வ்யாபிக்கிறது .ஸாதகனால் ஆரம்பநிலையில் தமோகுணம் நிறைந்த இதயப்பிரபஞ்சத்தில் சிறிதே தெய்வப்பிரக்ஞைக்கு இடம்தர முடிந்தாலும் நாளடைவில் அப்யாஸத்தாலும் அருளாலும் மேலும் மேலும் அவனால் அறநெறிகள் நிறைந்த தெய்வப்பிரக்ஞைக்கு இடம் கொடுக்க முடிகிறது. பரிபூர்ண தெய்வப்பிரக்ஞையைப் பெற்றபின் விஷ்ணுவை நேருக்கு நேர் தரிசிக்கிறான்.

கடவுளாகிய ஸூர்யனின் சைதன்யகிரணங்கள் பூர்புவ:ஸுவர்லோகங்களில் நிரம்பியுள்ளன. இதையே விஷ்ணு மூவடி எடுத்து வைத்ததாய் வேதம் கூறும்.

**அக்னியிலிருந்து ஆதித்யன்வரை:**

*ஆவியினுள்ளும் அறிவினிடையிலும்*
*அன்பை வளர்த்திடுவோம்- விண்ணின்*
*ஆசை வளர்த்திடுவோம்- களி*
*யாவல் வளர்த்திடுவோம் - ஒரு*
*தேவிமகனைத் திறமைக் கடவுளைச்*
*செங்கதிர் வானவனை - விண்ணோர் தமைத்*
*தேனுக்கழைப்பவனைப்- பெருந்திரள்*
*சேர்ந்து பணிந்திடுவோம் - வாரீர்*
*தீ வளர்த்திடுவோம் - பெருந்*
*தீ வளர்த்திடுவோம்.*

- பாரதியார்.

இதுவரை நாம் கண்டது ரிக்வேதத்தின் முதல் மண்டலத்தில் இருக்கும் சில மந்திரங்கள். இனி இரண்டாம் மண்டலத்திலிருந்து சில மந்திரங்களைக் காணவுள்ளோம்.

யக்ஞத்திற்கு எல்லா தேவர்களும் அழைக்கப் பெற்றனர். யக்ஞத்திலே அவர்களின் ஆற்றலும் செயலும் வெளியாகிறது.

அவைகளை மேலும் புகழ்ந்து ஸௌக்ஷ்மதரிசி ஸ்துதிபாடுகிறான்.

**த்வமக்னே என்று துவங்கும் முதல் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

அக்னிதேவனே! நீங்கள் உங்கள் தேஜஸுடன் ஒளிமயமாய் ஜ்வலிக்கிறீர். நீங்கள் ஜலங்களிலிருந்தும் ஓஷதிகளிலிருந்தும் தெய்வப்ரஞ்ஞையிலிருந்தும் வெளிப்பட்டவர். நீங்கள் ரக்ஷகர். ஆள்பவர். தார்மிகர்களுக்கு நீங்கள் சகோதரன். உங்களை வழிபடுபவர்களுக்கு(ஸாதகர்களுக்கு) நீங்கள் புத்திரர். அவர்களை ஒவ்வொரு ஆபத்திலிருந்தும் ஒரு நண்பனைப் போலிருந்துக் காக்கிறீர்கள். நீரே யக்ஞங்களின் பரமபிதாவாய் உள்ளீர். நீரே நீதிவ்ரதம்பூண்ட வருணனாயும் போற்றத்தகுந்த மித்திரனாயும் வ்ருத்திரனை வதைத்த இந்திரனாயும் மந்திரத்தால் வளரும் பாரதியாயும் ஸரஸ்வதியாயும் இளையாயும் உள்ளீர்.

விளக்கம்: வேதத்தில் மறுபடியும் மறுபடியும் ஒளியைப் பற்றி வருகிறது. இது ப்ரும்ஹதேஜஸையும் ஆத்மஜ்ஜோதியையும் தெள்ளறிவையும் இருளைப்போக்கும் அருளையும் விவேகத்தையும் சந்தேகமின்மையையும் குறிக்கும். ஒளிக்கு மற்றும் பல பொருட்கள் உள்ளன. சக்தியையும் ஒளி என்பர். இவ்வொளிகொண்டே தேவர்களும் அவர்களின் வாஸஸ்தானமும் விளங்குவன. இஜ்ஜோதியாய் அக்னிதேவன் விளங்குகிறார். இவர் ஸாதகனின் இதயத்திலே கர்பத்திலே குழந்தை இருப்பதுபோல் இருக்கிறார். குழந்தையை கர்பிணியானவள் மிகஜாக்கிரதையாக ரக்ஷிப்பது போலவே ஸௌக்ஷ்மதர்சியால் தினந்தோறும் காக்கப்பட்டு கர்பத்தில் உள்ளக் குழந்தை வளருவதுபோல் வளர்ந்து வருவதால் இவர் ஸாதகனின் புத்திரனாகிறார். கர்ப இவ ஸுப்ருதோ கர்பிணீபி: என்று இதைக் கடோபநிடதம் விளக்குகிறது. தமையன் தம்பிக்கு வழி காட்டுவது போலே தந்தை மைந்தனுக்கு வழிகாட்டுவதுபோலே இவர் ஸாதகனுக்கு வழிகாட்டியருள்வதால் இவர் சகோதரனாயும் தந்தையாயும் ஆகிறார். யக்ஞத்திலே தவறேதும் வராமல் தன்னை உள்நோக்கிக்காண்பவரைக் காத்து அருள்கிறார். முதல் மண்டலத்தில் குருவாயும் தெய்வமாயும் புகழப்பட்ட அக்னி இங்கு குழந்தையாயும் சகோதரனாயும் ஆபத்தில் உதவும் நண்பனாயும் புகழப் படுகிறார்.

வாழ்வில் பிடித்தமும் அதைப்பிரேரணை செய்யும் அனுபூதிகளும் அற்று அக்னி வளர்ச்சிபெறவில்லை. அது ஈசனால் மனித மனத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருந்த போதும் அதை வளர்ப்பது அனுபூதியாகிய ஜலங்களும் ரஸமான ஸோம ஒஷதிகளுமே என்பதால் ஈசனுக்கு மட்டிலுமல்லாமல் ஒஷதிகளுக்கும் ஜலங்களுக்கும்கூட அவர் குழந்தையாகிறார். இதுவே புராணங் களில் ஈசனிடமிருந்து வெளிப்பட்ட ஜோதி ஒஷதிகள்நிறைந்த ஹிமாலயத்தில் படர்ந்து கங்கையிலும் சரவணப்பொய்கையிலும் பரவி அதனால் கர்பமாய் அங்கேயே வளர்ந்து பிறகு குழந்தையாய் வெளிப்பட்டு அதனால் கந்தன் என்ற பெயரையும் காங்கேயன் என்றபெயரையும் பெற்று ரஸனையின் தேவதையான ஸோமனாகிய நிலவின் மனைவிகளான அதாவது ஸூக்ஷ்மசக்திகளான க்ருத்திகைகளிடமிருந்து பாலைப் பெற்று அதனால் கார்த்திகேயன் என்ற பெயரையும் பெற்றது என்று கூறப்படுவதாய் சான்றோர்கள் கூறுவர். இது தொன்றுதொட்டு வழங்கப்படும் ரஸமான கதை. புராணங்களிலும் தென்படுகிறது. இவ்வாறு அக்னிகுழந்தை ஒஷதிகளிலிருந்தும் ஜலத்திலிருந்தும் பிறக்கிறது. அக்னிதேவன் ஈசனின் புத்திரனாயும் சக்தியின் புதல்வனாயும்கூட குமரன் என்றபெயரில் வேதத்தில் வழங்கப்படுகிறார்.

அக்னியே மற்ற எல்லா தேவதைகளாயும் இருக்கிறார். தாத்பர்யம் என்னவென்றால் மற்ற எல்லா தேவர்களையும் அக்னியே வளர்க்கப்பட்டவராய் காட்டியருள்கிறார். வேதத்தில் கடவுளரின் ஸ்தூல வடிவங்களை மட்டிலும்கொண்டு சண்டைபோடும் விஷயம் கிடையாது. எல்லா தேவர்களும் ஒரேதேவனே. ஒரே தேவனே எல்லா தேவர்களும். எல்லா தேவர்களும் எல்லாதேவர்களுமாயும் இருப்பர். அதாவது வாயுவிடமே இந்திரன் வருணன் அக்னி எல்லாம் உண்டு. அவ்வாறே எல்லாதேவர்களும் எல்லா தேவர்களுமாயிருத்தலால் வேதம் ஒவ்வொரு தேவனையுமே எல்லா தேவர்களாயும் பாடும். இக்கருத்தை ஆழ்ந்து நோக்கினால் புரியும். இங்கும் அக்னியை எல்லா தேவர்களாயும் புகழுகிறது.

**வாஜயன்னிவ எனத்துவங்கும் எட்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

**ஹவிர்பாகம் அளிக்கையிலே அக்னி ஜ்வலிக்கிறார்.**

அவர் வழிபடுபவர்களின் ரக்ஷகர். சத்ருக்களை அழிப்பவர். எவர் எங்கள் வீடுகளில் மகிமைப்படுத்தப்படுகிறாரோ எவர் ஸூர்யகாந்தி உடையவரோ எவரின் ஜ்வாலைகள் தேஜோமய மானதோ எவர் அழியாத பொலிவு கொண்டவரோ அவரை எங்கள் மந்திரங்கள் வளர்க்கின்றன. இப்போது அவர் ஜ்வலிக்கி றார். நாங்கள் அக்னியினுடையவும் இந்திரனுடையவும் (மனோபலம்) ஸோமனுடையவும்(ஆனந்தம்) உதவியால் கேடற்று வாழவேண்டும். எங்களுடன் போர் செய்பவர்களை (தீயசக்திகளை) அழிக்கவேண்டும்.

### யோஜாத ஏவ என்று துவங்கும் பன்னிரெண்டாம் ஸூக்த மந்திரங்கள்:

எவர் பிறப்பிலேயே தேவர்களின் தலைவரோ அவர் தன் பலத்தால் தேவர்களின் ரக்ஷகர். அவரே இந்திரன். அவர் ஆடுகிற புவியை ஸ்திரப்படுத்தியவர். புவர்லோகத்தை அளந்து ஸுவர் லோகத்தை ஸ்தாபித்தவர். அவரே இந்திரன்.

ஏழுநதிகளை எவர் வெளியிட்டாரோ அஸுரர்களால் குஹையில் ஒளிக்கப்பட்ட பசுக்களை எவர் வெளிப்படுத்தினாரோ அவரே இந்திரன். பலர் அவரை அறியவிரும்பி அவர் எங்கு உள்ளார் என்கின்றனர். சிலர் அவர் இல்லை என்கின்றனர். அவரிடம் நம்பிக்கை வையுங்கள். அவரே இந்திரன். எவர் யாவரையும் ரமிக்கச் செய்கிறாரோ யாவரையும் வேலைசெய்யத் தூண்டுகிறாரோ ஸாதகனையும் வழிபடத்தூண்டுகிறாரோ எவர் ஸோமரஸத்தை வெளிப்படுத்தினாரோ அந்த அக்னிபோன்ற முகம் கொண்டவரே இந்திரன்.

எவருக்கடங்கியதாய் குதிரைகளும் பசுக்களும் உள்ளனவோ எவரின் சக்தியால் ஸூர்யனும் உஷாவும் பிறந்தனரோ எவர் வர்ஷிக்கிறாரோ அவரே இந்திரன். எவர் தன் திருடமான ரதத்தில் இருந்தவாறே போர்களத்தில் பலமற்றோர்களான பலம் கொண்ட சத்ருக்களை அச்சுறுத்தி ஓடச்செய்தாரோ அவரே இந்திரன். எவரின் அனுக்ரஹபலமற்று ஒருவன் போர்களத்தில் வெல்லமுடியாதோ எவரை வீரர்கள் எப்போதும் உதவிக்கு நாடுகின்றனரோ எவர் அசைக்கமுடியாததையும் அசைக்கிறாரோ

அவரே இந்திரன். எவர் தன் கூர்மையான அம்புகளால் சத்ருஜயம் செய்தாரோ எவர் தீயோர்களை மன்னிப்பதில்லையோ எவர் அஸுரர்களை (தீயசக்தி களை) வதைத்தாரோ அவரே இந்திரன். எவர் ஏழுஜலங்களையும் வெளிப்படுத்தி பிரவஹிக்கச் செய்தாரோ ஸ்வர்கத்திற்குத் தீங்குசெய்யும் ரௌஹிணனை எவர் வஜ்ரத்தால் வீழ்த்தினாரோ அவரே இந்திரன். எவரை ஜோதியும் ஜகத்தும் வணங்குகின்றனவோ எவரால் மலைகளும் நடுங்குகின்றனவோ அந்த ஸோமப்ரியரான வஜ்ரபாணியே இந்திரன். ஸோமபானத்திற்காக முயற்சி எடுப்பவர்களுக்கு எவர் உதவி செய்கிறாரோ எவரை நோக்கி நமது வழிபாடுகள் செல்கின்றனவோ அவரே இந்திரன். இந்திரனே! நீங்கள் ஸோமபானம் பண்ணுவதற்காக ஸாதனை செய்யும் மனிதர் களுக்கு வரங்களை யளிக்கிறீர். நாங்கள் உங்களின் நெருங்கிய நண்பர்களாய் அனவரதமும் இருந்து வீரர்களுள் வீரகர்ஜனை செய்யவேண்டும். வெற்றியை முழுமையாய் அடைபவர் எவரோ குதிரைகளுக்கும் பசுக்களுக்கும் ஸத்தியத்திற்கும் செல்வத்திற்கும் எவர் அதிபதியோ ஜலங்களுக்கும் மற்றவைகளுக்கும் எவர் அதிபதியோ அவரே இந்திரன். அவருக்கு இந்த ஸோமம் இருக்கட்டும். சத்ருஜயம் செய்து வெற்றியைநாட்டும் ரக்ஷகரான இந்திரனுக்குப் புகழ் பாடுவாயாக. இந்திரனே! ஸம்ருத்தியான தனத்தையும் மதுரமான வாக்கையும் ஆனந்தமான நாட்களையும் அளிப்பீர். இந்திரன் விஷ்ணுவுடன் ஸோமபானம் பண்ணி தீயோர்களை வென்று ஜோதியிலும் ஜகத்திலும் வ்யாபித்துள்ளார்.

விளக்கம்: மனிதமனதில் பற்பல ஸூக்ஷ்மசக்திகள் புதைந்து கிடக்கின்றன. அவையாவும் அவனறியாமலேயே கவனிக்காத படியாகி சிதைந்து விடுகின்றன. அவனிடம் குடிகொண்டுள்ள தீய சக்திகள் அவனின் சக்திகளை விழுங்குகின்றன. நமது பேராற்ற லால் அத்தீயசக்திகளைச் சின்னாபின்னமாய்க் கிழித்தெறிய வேண்டும். அடியோடு தீயசக்திகளை அருத்தெறிந்து நமது பெரும் ஒளிசக்திகளை மீட்கவேண்டும். இப்பெரும் ஆற்றலின் மனோபலத்தின் தேவதையாக இந்திரன் உள்ளதால் அவரை ரிஷி உதவி நாடுகிறார் .மனிதனுக்குள் புதைந்திருக்கும் சக்திகள் கணக்கிடமுடியாதவை. அபாரமானவை. அவைகளை மீட்க

இந்திரன் எழவேண்டும்.

மக்களை ரக்ஷித்தலும் அதன் பொருட்டுப் போராடுவதும் உழைப்பதும் வேந்தனின் சீரிய லக்ஷணம். இதயப்பிரபஞ்சமாகிய தேவலோகத்திலே விளங்கும் அக்னியையும் வருணனையும் வாயுவையும் வருணனையும் ரக்ஷிக்கக் காக்க ஒரு வீரபுருஷன் எழுகிறான். இவன் மனம் முழுவதும் வ்யாபித்தவன். இவர்களைக்காப்பதாலேயே இவன் இவர்களின் வேந்தனாகிறான். இவனின் உழைப்பையும் பேராற்றலையும் இங்கு காண்போம்.

அண்டவிஷயமாய் காண்கையிலே பூலோகம் இப்புவியைக் குறிக்கும். ஸுவர்லோகம் ஸூர்யன் சந்திரன் நக்ஷத்திரங்கள் கொண்ட ஆகாயத்தைக் குறிக்கும். இவ்விரண்டிற்கும் நடுவேயுள்ள இடைவெளியே புவர்லோகம். ஸூக்ஷ்மவிஷயமாய் காண்கையிலே பூலோகம் இவ்வுடலேயாம். இது ஜடமானது. புவர்லோகமானப் பிராணனாலும் ஸுவர்லோகமான மனதாலும் வலுப்படுகிறது. ஜடவுடல் வலுப்பெற மனோபலம் அவசியம் தேவை. மனோ பலமான இந்திரனே இவ்வுடலையும் த்ருடப்படுத்தி புவர்லோகத்தில் வாயுவுடன் இருந்து புவர்லோகத்தையும் புஷ்டிப்படுத்தி முடிவாக ஸுவர்லோகத்தில் ஆத்மஸூர்யனை வ்யாபிக்கச் செய்து தேவஸாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்கிறார்.

ஜடசரீரத்திற்குள்ளே சைதன்ய அனுபூதி புதைந்துக் கிடக்கிறது. மலை ஜடசரீரத்தைக் குறிக்கும். அந்த ஜடமலையை தனது ஆற்றலான வஜ்ராயுதத்தால் இந்திரன் பேதிக்கையிலே அதாவது தூலநிலையைக் கடக்கையிலே உள்ளிருந்து திவ்ய அனுபூதிகளின் தாரை அதிவேகமாய்ப் பிரவஹித்து வந்தன. தூலத்தினுள் ஒளிந்திருக்கும் ஸூக்ஷ்மமான ஜோதிர்மயமான கங்கை ஸிந்து ஸரஸ்வதி முதலிய ஏழு ரஸமான அனுபூதிகளை இந்திரன் பிரவஹிக்கச் செய்கிறார். பூர் புவ:ஸுவராதி ஸப்தவ்யாஹ்ருதிகளின் அனுபூதிகளையே ஏழு நதிதாரைகள் குறிக்கின்றன. ப்ரும்ஹவித்யா ஸ்வரூபிணியான அனுபூதியாகிய

பார்வதி மலைமகளாய் பிறந்து ஈசனைத் தவத்தால் அடைந்தாள் என்பது தொன்றுதொட்டு வழங்கப்படும் புராணக்கதை. மலைமகள் அவதரித்தது தவம் புரிந்தது ஈசனிடம் மையல் கொண்டு ஈசனை அடைந்தது. ஈசன் ஜோதியை

வெளிப்படுத்தியது அது கங்கையிலும் மலையிலும் பரவியது அது குழந்தையாய் பிறந்தது நக்ஷத்திரங்கள் தந்தப்பாலைப் பருகியது முதலிய எல்லா புராணக்கதைகளுமே தொன்றுதொட்டு வழங்கப்பட்டே பிற்காலத்தில் புராணங்களிலும் எழுதிவைக்கப் பட்டன. இக்கதைகள் யாவுமே வேதஸம்பந்தமுடையவை. இந்திரன் தூலத்தைப் பிளந்து உள்ளே இதயகுஹையில் மிளிரும் அகண்ட ஜோதியின் புதல்வர்களான பசுக்களைக் கண்டு அறிகிறார். இவை சைதன்யசக்திகளே. தன்னம்பிக்கையையும் மனோபலத்தையும் இழந்தவர்கள் கவலைகொள்ள அவர்களிடம் வேதம் கூறுகிறது. நீங்கள் கவலைப்படவேண்டாம். இல்லை என்று சொல்லாதீர். விடாமல் மனவாற்றலான இந்திரனைப் பிடியுங்கள். அவர் நலம் புரிவார். அவரில்லாமல் வாழாதீர்.

ப்ராணசக்தியாகிய குதிரைகளும் சிச்சக்திகளாகிய பசுக்களும் இந்திரன் வசம் உள்ளன. ஸோமனைப் பிரவஹிக்கச் செய்து ஸூர்யனை உதிக்கச் செய்து சத்துருக்களை ஓடச் செய்கிறார். இவை அவரின் லீலைகள்.

**இதம் கவேராதித்யஸ்ய எனத்துவங்கும்**
**இருபத்தெட்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

வருணக்கடவுளுக்கு என் நமஸ்காரம். அவர் வழிபடுபவர்களை ஆசீர்வதிப்பவர். நாங்கள் வருணனின் நீதியில் என்றும் இருக்கிறோம். வருணக்கடவுளை ஸ்ரத்தையுடன் ஸ்தோத்திரம் பண்ணுவதால் ஸம்ருத்தியான தனத்தை அடைவோம். தேவனே! உங்கள் ரக்ஷிப்பில் எப்போதும் நாங்கள் இருப்போம். வருணன் நதிகளை பிரவஹிக்கச் செய்தார். அவரின் ஆணையால் அவை பிரவஹிக்கின்றன. பறவைகள் பறப்பதுபோல் அவை நிற்காமல் சோம்பலற்று ஓடுகின்றன. உங்களின் தருமமாகிய நீதியில் எங்கள் வாழ்வு இருக்கட்டும். எல்லா ஆபத்துகளும் எங்களை விட்டு நீங்கட்டும். வருணனே! என்னை ஏற்றுக் கொள்ளுங்கள். என்னை அடிமைப் படுத்தும் தீங்கிலிருந்து வெளிப்படுத்துங்கள். தீயோர்களுக்குத் தீங்கு செய்யும் தங்கள் ஆயுதங்கள் எங்களுக்குத் தீங்கு செய்யவேண்டாம். நாங்கள் ஒளியிலிருந்து இருளில் மீண்டும் புகக்கூடாது. எங்களை அழிக்கவரும் தீங்கினை அழியுங்கள்.

### த்ருதவ்ரதா: என்று துவங்கும் இருபத்தி ஒன்பதாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:

தேவர்களே! நீங்கள் உண்மையாகவே எங்கள் உறவினர்கள். எமக்கு அருள் புரியுங்கள். எங்களின் வழிபாட்டிற்கு உங்கள் ரதம் மெதுவாக வரவேண்டாம். எங்களை விழுங்கவரும் நரிகளிலிருந்து (தீயசக்திகளிலிருந்து) எங்களை ரக்ஷியுங்கள்.

### உதுஷ்ய தேவ: என்று துவங்கும் முப்பத்தெட்டாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:

உலகுக்கு ஒளியூட்டும் தேவஸவிதா உதித்துள்ளார். ஸாதகனை ஸாதனை செய்யத் தூண்டுகிறார். அவர் தேவர்களுக்கும் தேவர்களை நம் பொருட்டு வரவேற்கும் மனிதர்களுக்கும் நன்மை பயக்குகிறார். ஜகத்தின் நன்மைக்காக உதித்த ஸூர்யன் வ்யாபிக்கிறார். அவருக்கடிபணிந்தே நீர் பிரவஹிக்கிறது. காற்று வீசுகிறது.

ஸூர்யதேவனே! நீர் உயிரினங்களுக்கு நல்ல வசிப்பிடங்களைக் தருவீர். எவரின் நீதியை இந்திரன் மித்திரன் வருணன் முதலிய தேவர்களும் பேதிப்பதில்லையோ அந்த தேவனை நன்மைக்காக அழைக்கிறேன். அவர் எங்களை ரக்ஷிக்கிறார். .எங்களுக்கு ஜோதியிலிருந்தும் ஜகத்திலிருந்தும் ஜலத்திலிருந்தும் தேவனின் அருள்மயமான தனம் வரட்டும்.

விளக்கம்: இது ஸூர்யதேவனின் மஹிமை. அவரின் சைதன்ய கிரணங்களே அருள். அவை பலவிதம். அவை பல அனுபூதி களாகிய ஜலத்திலும் இதயஸ்தானமாகிய ஜோதியிலும் உடலாகிய ஜகத்திலும் வ்யாபித்துள்ளன. அவை ஸாதகனுக்குப் பயன்படுவதால் அவர் ஸாதகனைத் தூண்டும் ஆத்மவொளியாய் ஆகிறார். மேலே ஆகாயத்தில் உள்ள கதிரவனைவிட அதையும் கண்டறியும் நேத்திரத்தில் உள்ள ஜோதி பெரியது. இஜ்ஜோதி கண்ணில் குடிகொண்ட கதிரவன். ஸூர்யன் த்ருஷ்டியின் தேவனாகிறார். இந்த நேத்திரஜ்ஜோதியைவிட அதற்கும் ஸூக்ஷ்மகாரணமான ஆன்மஸூர்யன் மிகப்பெரியது. ஒளிமயமான

ஸூர்யன் ஜகஜ்ஜோதியாய் இதயத்திலே வ்யாபித்து விளங்குகிறது. இது இதயத்தின் குழந்தை. இதை அக்னியால் உணரமுடியும். இவ்விதய ஸூர்யனையே ஆஸ்ரயித்து தேவர்கள் உள்ளனர். இதய ஸூர்யனின் நீதி அக்னியே. அக்னி இதயஸூர்யனின் அம்சமே. இது ஸூர்யனுக்கும் உந்துதலாகவுள்ளது. சகல தேவர்களும் இதய ஸூர்யனின் நீதியை அக்னியை அடிபணிகையில் யக்ஞம் வளர்கிறது. ஸூர்யனாலேயே அனுபூதிமயமாகிய நீர் பிரவஹிக்கிறது. ப்ராணசக்தி இயங்குகிறது. உயிரினங்களுக்கு நல்ல வசிப்பிடம் அவரே. பரமாத்மனிடமே ஜனங்கள் வசிக்கலாம். அவர் பரிபூர்ணமாய் ஆசீர்வதிக்கிறார்.

பரமாத்ம ஸூர்யனிடம் நாட்டம் என்கிற மொழியால் விளக்கமுடியாத உபாஸனையே விசேஷதருமமாகும். இதைப் பெறும் பொருட்டு அதற்கு ஸாதனமாய் ஸாமான்ய தருமத்தை அனுஷ்டிக்கின்றனர். ஸாமான்ய தருமம் என்பது நல்லோர்கட்கும் சாமானியர்கட்கும் நன்மை செய்தலும் தீயோர்களைத் திருத்த முயலுதலும் இயலாவிடில் அடக்குவதுமேயாகும். இதைப்பற்றி ஆரம்பக்கட்டுரையில் விஸ்தாரமாகக் கூறப்படுகிறது. இவ்வுருவில் அமைந்த தருமம் மனிதர்களுக்குப் புலப்படுகிறது. இது தெய்வீகம். ஆனால் மனிதனுக்குப் புலப்படும் தெய்வீகம். இது மனுஷ்யப்பிரக்ஞையிலும் உள்ளது. மனுஷ்யப்பிரக்ஞை என்னும் இரவில் ரஸனை என்கிற ஸோமன் தனது ஸூக்ஷ்ம சக்திகளான நக்ஷத்திரங்களுடன் உதிக்கிறான். இவன் உதிப்பதால் ஆகாயம் முழுவதும் ரஸமயமாய் ஆகிறது. உண்மையில் இவன் ஸூர்யனிடமிருந்தே ஒளியைப் பெருகிறான். ஸோமம் என்பது தார்மிக ரஸனை. அது தெய்வீகம். மனுஷ்யப்பிரஞையில் விளங்கும் ஸூர்யனின் ஒளியே அது. இவ்வித ரஸனை ஸாதனையை வளர்க்கும். இவ்வித இரவு மிகவும் ஹிதமானதாதலால் இதிலும் தேவர்கள் உள்ளனர். நமக்குதவ வந்த இந்த தெய்வீகமான ஸூர்யவொளியையே கொண்ட தெய்வீக நிலவையே நாம் பயன் படுத்துவோமாகில் இந்த மனுஷ்யப்பிரக்ஞையான மனதின் மிகரம்யமான இரவு ரஸமயமாகும். இதனால் கதிரவனே தனது கிரணங்களை எங்கும் வ்யாபிக்கச் செய்துகொண்டு உதித்து மலருகிறான். இவன் தெய்வப்பிரக்ஞையாகிய பகலை மனதில்

ஸ்தாபிக்கிறான். தேவர்களின் வாஸஸ்தானம் இந்த இதய ஸூர்யனின் ஸாம்ராஜ்ஜியமே. இவ்வாறு பகலுக்கும் இரவிற்கும் இரு நாயகர்களாய் அமைந்தவர்கள் நிலவும் கதிரவனும். மனுஷ்யப் பிரக்ஞையின் தார்மிகரஸானுபவம் ஸோமஸாம்ரஜ்ஜியத்தில் உள்ளது. இவ்விரவின் இருளே ரஸமயமானது. இதுவே பின்பு உபநிடதங்களில் தூம்ராதிமார்கமாயும் பித்ருக்களின் ஸ்தானமாயும் ஸோமலோகமாயும் ஜன்மமரணாதி கதாகதிகளைக் கொண்டதாயும் கூறப்படுகிறது. இவ்வித தார்மிக ரஸானுபவத்தினடிப்படையிலேயே வாழ்ந்து ஜன்மமரணாதிகளில் இவ்வித இரவிலேயே உயர்ந்தவிதத்தில் வாழ்பவன் நாளடைவில் விசேஷ தருமத்தைப் பெருகிறான். இதனால் ஒளிமார்கம் இவனுக்குத் திறக்கப்படுகிறது. தெய்வப்பிரக்ஞையான ஸூர்யஸாம்ராஜ்ஜியத்தில் சாமானியனுக் கெட்டாத பரமாத்மோபாஸனம் என்கிற விசேஷ தருமத்துடன் கூடி தார்மிக ரஸனை விளங்கும். இது உபாஸனையுடன் கூடிய தருமமாகிறது. இதுவே உபநிடதங்களில் அர்ச்சிராதிமார்கமாயும் தேவர்களின் ஸ்தானமாயும் ஸூர்யலோகமாயும் ஜன்மமரணாதி கதாகதிகள் அற்றதாயும் விளக்கப்படுகிறது.

விஷ்ணுவின் சக்தியாகவே தார்மிகரஸனை என்கிற ஸோமம் இருப்பதால்தான் விஷ்ணு ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் முதலிய காரியங்களையும் இவைகள் மூலம் சிஷ்டபரிபாலனத்தை யும் துஷ்டஸம்ஹாரத்தையும் 'லோகக்ஷேமத்திற்காக ரஸித்தே செய்கிறார். இதனால் ஸோமன் விஷ்ணுவின் சக்தி. இவர் விஷ்ணுவின் இதயத்திலிருந்து தோன்றியதாய் வேதம் கூறும். இந்த ஸோமனே விஷ்ணுவின் இதயத்தில் ஸ்ரீவத்ஸமாயிருப்பதாய் ராமாயணம் கூறுகிறது. ஸோம: ஸ்ரீவத்ஸலக்ஷண: புராணங்கள் பாற்கடலைக் கடக்கையில் ஸோமனும் லக்ஷ்மியும் மற்றும் பல மங்கள த்ரவ்யங்களும் வந்ததாய் கூறுகிறது. லக்ஷ்மியை விஷ்ணுபத்னியாயும் ஸோமசகோதரியாயும் கூறுவர். லக்ஷ்மியே ஸ்ரீவத்ஸம் என்று புராணங்கள் கூறுகின்றன. லக்ஷ்மியை விஷ்ணுவின் மங்களசக்தியாகவே கூறுகின்றன. வேதம் ஸோமனை விஷ்ணுவின் மங்களசக்தியாய் கூறுகிறது. அச்சக்தி உபாஸகர் களிடமும் இருக்கவேண்டும் என்கிறது வேதம். இம்மங்கள சக்தியைக் கொண்டே விஷ்ணு லோகக்ஷேமத்தை நிர்வகிக்கிறார்.

சாஸ்திரங்கள் ஸோமனைப்பெண்ணாயும் ஸூர்யனின் மனைவியாயும் கூறுகிறது. வேதமோ ஸோமனை ஆணாகவே கூறி ஸூர்யனின் சக்தியாய் கூறும். ஸோமனிடம் மென்மை அழகு குளிர்ச்சி ஈர்ப்புத்தன்மை முதலிய பெண்சக்திகள் உள்ளதால் ஸோமனை ஜோதிடம் பெண் என்கிறது.

இவ்வாறு ஜோதிஜகத்திற்கு இருநாயகர்களாக விளங்கும் பித்ருக்களின் தேவனாகிய ஸோமனையும் தேவர்களின் தேவனான ஸூர்யனையும் இங்கு வேதம் சேர்த்து துதிபாடும் மந்திரங்கள் இவை.

**ஸோமபூஷணா என்றுத்துவங்கும் நாற்பதாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

சாச்வதமான வாழ்விற்கு முக்கியமான ஸூர்யனும் சந்திரனும் உலகைக் காக்கிறார்கள். அவர்கள் பிறக்கையிலேயே இருளை நீக்குகின்றனர். எல்லா தேவர்களும் ஆனந்திக்கிறார்கள். (ஸூக்ஷ்மதரிசியின் இதயத்திலே இவ்விரு இரவு சக்தியான தூமாதிமார்கமும் பகல் சக்தியான அர்ச்சிராதிமார்கமும் வ்யாபிக்கையில் இந்திரியாபிமானி தேவதைகள் ஆனந்திக்கிறார்கள்) எவ்விடமும் செல்லத் திறமை வாய்ந்த ஜோதிர்ய ரதத்தில் நீங்கள் இருவரும் வாருங்கள் . எங்களுக்கு நீங்கள் தனத்தையும் அன்னத்தையும் ஆனந்தத்தையும் அளிப்பவர்கள். நீங்கள் எங்கள் யக்ஞத்தை ரக்ஷிக்கவும். உங்கள் உதவியால் சத்ருக்களை (இடையூறுகளை) வெல்ல வேண்டும். ஸூர்யன் எங்கள் எண்ணங்களைத் தூண்டட்டும். ஸோமன் தனத்தை அளிக்கட்டும். அகண்டமான அதிதி காக்கட்டும். நாங்கள் யக்ஞத்தில் அகண்டத்தை மகிமைப்படுத்துகிறோம்.

*வேதம் பாடிய சோதியைக் கண்டு*
*வேள்விப்பாடல்கள் பாடுதற்குற்றேன்*
*நாத வார்கட லின்னொலியோடு*
*நற்ற மிழ்ச்சொ லிசையையுஞ் சேர்ப்பேன்*
*காதமாயிரம் ஓர்கணத்துள்ளே கடுகியோடும் கதிரிநம் பாடி*
*ஆதவா நினை வாழ்த்திட வந்தேன் அணிகொள் வாண்முகம் காட்டுதிசற்றே.* - பாரதியார்




விச்வாமித்திரர்-

*எங்கள் வேள்விக் கூட மீதில்*
*ஏறுதே தீ தீ - இந்நேரம்*
*பங்கமுற்றே பேய்களோடப்*
*பாயுதே தீ தீ - இந்நேரம்.*

- பாரதியார்.

**இனி ரிக்வேதத்தின் மூன்றாம் மண்டலம் துவங்குகிறது.**

இது அக்னிக்கான ஸ்தோத்திரம். அக்னிதேவனின் பிறப்பு மிகவும் விசேஷமானது. அதனால் தேவர்களும் மனிதர்களும் பாக்கியவான்களாகிறார்கள். அக்னிதேவன் ஆத்மஸூர்யனுக்குப் பிறந்தவர். அனுபூதிகளைத் தூண்டும் ஸூக்ஷ்மசக்திகளின் கர்பத்திலே இருந்து வெளிப்பட்டு அவர்களாலேயே வளர்க்கப்பட்டு தேவதைகளுக்குதவி பலநலம் புரிந்து அதனால் மேலும் சக்திபெற்று இருக்கையான மூலத்தை நாடி தன் தந்தையாகிற பரமாத்மனை அடைந்து அங்கும் இழக்கப்படாமல் இருக்கிறார். இப்படி அக்னி பிறந்து வளரும் கதைகள் இங்கு விஸ்தாரமாய் கூறப்படுகின்றது.

**ஸோமஸ்ய மா தவஸம் என்று துவங்கும் முதல் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

உயர்ந்ததை நோக்கி நாங்கள் யக்ஞம் செய்கிறோம். எங்கள் மந்திரங்கள் வளரட்டும். தேவர்கள் அக்னியை வணக்கத்துடன் அவரின் செயல்களின் நிமித்தம் தூண்டி விட்டனர். ஸூக்ஷ்மதரிசிகளின் ஞானங்களுக்கு அவர்கள் தேவஸாம்ரஜ்ஜியத்திலே ஒரு வளிப்பாட்டை அளித்தனர். அக்னியின் சக்தியிலே அக்னியின் மந்திரஇச்சையிலே ஒரு வழியை விரும்பினர். அறிவுப்பிழம்பான பவித்திர விவேகியான ஜோதிக்கும் ஜகத்திற்கும் நல்ல பந்துவான அக்னி ஸுகமளிக்கிறார். அவரை தேவர்கள் சகோதரிகளாகிய ஜலங்களிலேயே கண்டறிந்தனர். மங்களகரமான அக்னிக்கு தேவர்கள் உருகொடுத்தனர். ஏழு ஜலதேவதைகள் வாத்ஸல்யத்துடன் வளர்த்தனர். இப்படிப் பிறந்தக் குழந்தையை இயக்கி

வைத்தனர். அக்குழந்தை க்ரதுவைப் பரமபவித்திரமாக்கிக் கொண்டு தன் ஒளிமயஅங்கங்களால் ஜோதியுலகில் வளர்ந்து ஸூக்ஷ்ம தர்சிகளுடன்கூட வ்யாபித்தது. ஜலங்களின் ஜீவசக்தியை நோக்கி ஒளியை தரித்துத் தடையேதுமற்று பெரிதான மங்களங்களைப் பெற்றது. இவ்வேழு ஜலங்கள் அக்குழந்தையை ஒரே கர்பமாய் தரித்து வெளியாக்கினர், இக்குழந்தை எந்த அளவிற்கு வளர்ந்தாலும் இதை தேவர்கள் ஹிம்ஸிப்பதில்லை. சக்தியின் புதல்வனே! நீ பிறந்து அதிவேகமாக ஒளிமய உருவங்களால் ஒளியை வெளிப்படுத்துகிறாய். எங்கு ஸூக்ஷ்மதரிசனத்தால் காளை வளர்கிறதோ அங்கு தெளிவுடையவும் மாதுர்யத்தினுடையவும் தாரைகளை வெளிப்படுத்துகிறாய். தனது நண்பர்களாலும் தேவர்களாலும் இருக்கையின் ரஹஸ்யஸ்தானங்களிலே தான் சஞ்சரிப்பதைக் கண்டறிந்து அங்கும் நீ உன்னை இழக்காமல் உள்ளாய். ஸத்தியத்தையே உனது வீடாய் நீ பெற்றாய். உன் தந்தையாகிற உனது பிறப்பிடத்தைப் பெரிதென்றறிந்தாய். உந்துதலாகி இயக்கும் அக்னி மஹாத்மாக்களின் ஸன்னிதியில் ஸூக்ஷ்மதர்சனத்தை நாடி ஸோமத்தை உருவாக்க ஒளிமயமாகி அவர்களுக்கு உயர்வையும் அளித்தார். செயலும் சக்தியும் நிறைந்து இவ்விதமாய் பிறந்திருக்கும் தேவனிடம் தேவர்கள் மனதால் ஒருங்கிணைகின்றனர். ஒளிமயதேவர்கள் அவரையே அடைந்து தனது ரகசியஸ்தானமாகிய மூலஸ்தானமாகிய இருக்கையிலே மிளிரும் அக்னியிடமிருந்து அம்ருதத்தைக் கரந்தனர்.

அக்னியின் பிறப்பு இவ்விதம் இருக்க அவர் செய்யும் செயல்களைப் பற்றிய மந்திரங்கள் தென்படுகின்றன. அவர் வேகமானவர். தீவிரம் கொண்டவர். இயங்குபவர். சங்கல்பமாயும் உந்துதலாயும் க்ரதுவாயும் அவர் இருப்பதால் வேகம் பலம் தேஜஸ் ஆற்றல் எல்லாம் இவர் குணங்களாகிறது. இதனால் வாயுதேவனுக் கொத்தவனாகிறார். வாயுவிற்குள்ள எல்லா அடைமொழிகளும் இவருக்குக் கூறப்படுகிறது. ப்ராணமயகோசமாகிய புவர்லோகத்தில் வாயுவுடன் சஞ்சரிக்கும் இவர் வேகத்தாலும் பலத்தாலும் வீரத்தாலும் ஆற்றலாலும் உந்துதலாலும் குதிரையுடன் ஒப்பிடப் படுகிறார். இவரே ப்ராணசக்தியான வாயுதேவனாயும் உள்ளார். தேவதூதனாய் மனிதர்களுள் விவேகவெளிச்சமாயும் தார்மிக

வுந்துதலாயும் இருப்பதால் அவரிடம் மனிதர்கள் செயல்களையும் சிந்தைகளையும் ஸமர்ப்பிக்க அதனால் வளர்ந்து புஷ்டியாகி தேவலோகம் சென்று மனிதர்களால் ஸமர்ப்பிக்கப்பட்டவைகளை தேவர்களுக்களித்து அவர்களையும் புஷ்டிபடுத்துகிறார். இச்செயல்கள் கீழேயுள்ள மந்திரங்களில் விவரிக்கப் படுகின்றன. மந்திரங்கள்:

அக்னிதேவன் ஜோதியையும் (மனதையும்) ஜகத்தையும் (உடலையும்) தன் பிறப்பாலேயே ஜ்வலிக்கச் செய்தார். ஜோதிக்கும் ஜகத்திற்கும் பிறந்தவர். ஹவிர்பாகத்தை தேவர்களிடம் கோண்டு செல்பவர். ஸம்ருத்தியான அன்னமளிப்பவர். இளைஞன். ஸர்வவியாபி. சக்திகொண்ட அறிஞர்களான தேவர்கள் அக்னியைத் தூண்டியுள்ளார்கள். சக்தி பெறவேண்டிய நான் குதிரை போல் ஜ்வலிக்கும் அக்னியைத்தூண்டியுள்ளேன். ஆனந்தத்திற்கும் சக்திக்கும் நண்பரான அக்னியை நாங்கள் வழிபடுகிறோம். ஸாதகர்கள் தர்பையை (ஆஸனத்தை) போட்டு ஆனந்தத்திற்காக அக்னியை ஸ்தாபிக்கின்றனர். தேவலோகக் காதலரான அவர் எல்லா யக்ஞங்களிலும் ஸான்னித்யம் கொண்டுள்ளார்.

அக்னி பிறப்பினால் எல்லா தேவர்களுக்கும் சந்தோஷமளிப்பவராய் பொலிவால் ஜோதியையும் ஜகத்தையும் பூரிக்கச் செய்கிறார். குதிரைபோல் யக்ஞத்தில் உள்ளார். சக்திபெற ஞானிகள் அவரை வழிபடுகின்றனர். ஞானிகளே! அக்னியை வணங்கி ஸேவை செய்யுங்கள். அவர் குதிரையின் (பலத்தின்) தேவன். ஹவிர்பாகத்தை ஏற்பவர். க்ருஹபதி. ஸத்யஜீவி. நண்பன். ஞானமளிப்பவர். தருமத்தைக் காப்பவர். தாங்கள் விரும்பியவை நிறைவேற மக்கள் அவரை வழிபடுகின்றனர். ஹிரண்மய கேசங்களுடன் ஜ்வலிக்கும் அக்னி ஸாதகர்களுக்கு ஸம்ருத்தியான தனத்தை அளிக்கிறார். அவர் எங்களை சந்தோஷமாக க்ருஹங்களில் வசிக்கச் செய்கிறார்.

ஜோதிக்கும் ஜகத்திற்கும் நடுவே சஞ்சரிக்கும் அக்னி ஹோதாவாயுள்ளார். தன் பொலிவால் எங்கும் வ்யாபிக்கிறார். தேவர்களால் அனுப்பப்பட்டவர். மந்திரங்களால் ஸ்திரமானவர். யக்ஞதேவதையான அவரை நாங்கள் மந்திரங்களால் ஸ்தாபித்துள்ளோம். அவராலேயே ஸாதகர்கள் ஆனந்தம் பெறுகின்றனர்.

யக்ஞரக்ஷகர் ஞானிகளின் தேவன். பிரபஞ்சத்தை இயக்குபவர். பலவிதமாய் வழிபடுபவர்களுக்கு ஸந்தோஷமளித்து ஜோதியிலும் ஜகத்திலும் வ்யாபித்துள்ளார். யக்ஞங்களை நடத்தித் தருபவராய் தன் ஹிரண்மயமான ரதத்தில் ஜோதிக்கும் ஜகத்திற்கும் நடுவே சஞ்சரிக்கிறார். க்ருஹபதியான அவர் சாபக்கேடுகளை நீக்குகிறார். தீர்க்கமான ஆயுளுக்காகவும் ஸத்ஸந்தானத்திற்காகவும் அக்னியைப் போற்றுவோம். எல்லா வ்யாதிகளையும் நீக்கி யக்ஞத்தையும் அவர் பலிக்கச்செய்கிறார். தேவனே! அன்னஸம்ருத்தியை ஆசிர்வதியுங்கள்.

அக்னிமூலமே தேவர்களோடு மனிதர்கள் தொடர்பு கொள்ளமுடியும். விவேகவொளியாகிய அக்னிக்கு ஸமர்ப்பிக்கும் செயல்களும் சிந்தைகளுமே அவருக்கு ஆஹாரமாகிறது. அதை அவர் புஜித்துப் புஷ்டியாவதோடு மட்டுமல்லாமல் தேவர்களுக்கு அவரே கொண்டு செல்லுகிறார். அவர்களும் அதையுண்டு புஷ்டியாகி எந்த ஸாதகன் அவைகளை ஸமர்பிக்கிறானோ அச்சாதகனை—நோக்கி வருகிறார்கள். அக்னியை இவ்விதம் அழைத்துவர ஸாதகனின் யக்ஞத்திறகு வந்து அவன் ஸமர்பிப்பவைகளை உண்டு அவனுக்குள்ளேயே வளர்ச்சி பெறுகிறார்கள். தேவதைகள் யக்ஞத்திற்கு வந்தருள்வதைக் கூறும் மந்திரங்கள்:

யக்ஞத்திற்காக தேவர்களுக்கு ஹவிர்பாகங்களை எடுத்துச் செல்லும் அக்னியை வளர்க்கிறோம். யக்ஞம் மூலமாகவே ஹவிர்பாகங்கள் தேவர்களை அடைகின்றன. மத்தியஸ்தானத்தில் அக்னிக்கடவுள் அமர்ந்துள்ளார். சுற்றி மற்ற தேவர்களுக்காக தர்பைகள் (ஆஸனங்கள்) போடப்பட்டுள்ளன. மந்தஹாஸத்துடன் ராத்திரிதேவியும் (மநுஷ்யப் பிரக்ஞையும்) உஷையும் (தெய்வப் பிரக்ஞையும்) இங்கு வரட்டும். வருணனும் (தூய்மை) மித்திரனும் (அன்பு) இந்திரனும்(மனம்) மருத்கணங்களுடன்(சிந்தனாசக்திகள்) எங்களை சந்தோஷிக்கட்டும். ஹவிர்பாகங்களை அக்னிக்கும் (ஞானம்) வருணனுக்கும்(தூய்மை) அளிக்கிறேன். அவர்கள் தேவலோகத்தின் ஸத்யஜீவிகள். தேவபதிகள். வனங்களின் பதியே! ஹவிர்பாகங்களால் ஸந்தோஷப்பட்ட நீங்கள் ஸம்ருத்தியான தனத்தை அளியுங்கள். ஜகத்தின் உச்சஸ்தானத்தில் நில்லுங்கள். ஏழ்மையை நீக்குங்கள். ஸாதகனை ஆசீர்வதியுங்கள். தீவிரமான

தவம் செய்பவர்கள் உங்களைப் போற்றுகின்றனர். பகலில் இந்த தேவன் மனிதசமூகத்திலே வளர்க்கப்படுகிற ஞானிகளின் மந்திரங்களால் இவரை த்யானிக்கின்றனர்.

ஆதித்யர்களும் ருத்திரர்களும் வஸுக்களும் ஜோதியும் ஜகத்தும் எங்களின் யக்ஞத்தை ஆசீர்வதிக்கட்டும். அக்னியே! மனுஷ்யர்களான நாங்கள் உங்களை த்யானிக்கிறோம். உங்களுடன் தொடர்பு கொள்ளுகிறோம். ஞானிகள் யக்ஞத்திலே உங்களைத் தூண்டியுள்ளனர். மனிதர்களுக்கும் மற்றோர்களுக்கும் நீங்கள் தலைவர். அவர்கள் யக்ஞத்தில் உங்களை யக்ஞரக்ஷகராய் வழிபடுகின்றனர். உங்களை வழிபடுபவன் ஞானத்தை அடைகிறான். சக்தியை அடைகிறான். மந்திரங்களைச் சொல்லி யாவரையும் புனிதமாக்கும் அக்னிக்கு நாங்கள் அன்பளிப்புகளை அளிக்கிறோம். எங்களிடம் எப்போதும் ஜ்வலியுங்கலள். உங்கள் பொலிவால் தீயோர்கள் ஓடிவிடுகிறார்கள். அழியாதவரே! விழித்திருப்பவரே! ஹவிர்பாகங்களை ஏந்துபவரே! உங்க்ளை ஞானிகள் வழிபடுகின்றனர்.

சிந்தைகளையும் செயல்களையும் அக்னிக்கும் தேவர்களுக் கும் அளிக்கையில் தீயசக்திகள் தங்களுக்குப் பங்குகேட்டுக் கட்டாயப்படுத்துகின்றன. அவைகளை ஒழிக்கும் பொருட்டு

**பவானோ அக்னே என்று துவங்கும் பதினெட்டாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

அக்னியே! உங்களை நாங்கள் நண்ப்னிடம் நண்பனைப் போலும் குழந்தைகளிடம் பெற்றோர்களைப் போலும் அணுகுகையில் நீங்கள் அன்பு செலுத்துங்கள். எங்களை எதிர்க்கும் தீயோர்களான பகைவர்களை பொசுக்குங்கள். எங்கள் அருகேயே உள்ள சத்ருக்களையும் அவர்களின் சாபங்களையும் பொசுக்குங்கள். சக்தியையும் வெற்றியையும்வேண்டி நாங்கள் உங்களுக்கு காணிக்கை செலுத்துகிறோம். தங்கள் ஆசீர்வாதங்களைப் பெறுகி றேன். பலத்தின் புதல்வரே! தங்களின் ஸேவகர்களுக்குத் தாங்கள் சக்தியைத் தர வேண்டும்.

அக்னியை வழிபடுவது எப்படி? அவர் எங்கு உள்ளார்? அவரை வழிபடவேண்டிய ஸாமக்ரிகள் என்ன?அவரை

வழிபட்டால் பலன்கள் என்ன? அக்னியை தேசகாலபேதமின்றி வழிபடலாம். எக்காலத்திலும் எத்தேசத்திலும் தருமவுந்துதலுக்கு விவேகவொளிக்கு தெய்வீக க்ரதுவிற்கு நமது செயல்களையும் சிந்தைகளையும் ஸமர்பிக்க வேண்டும். இதுவே அக்னி வழிபாடு. அவர் இதயத்தில் வழிகாட்டும் குருவாய் விவேக வொளியாய் மிளிர்கிறார். வழிபடவேண்டிய ஸாமக்ரிகள் சிந்தைகளும் செயல்களுமே. லோகக்ஷேமமும் தன்க்ஷேமமும் ஈச்வரப்ரீதியும் இதன் பலன்கள். தேசகாலபேதமின்றி எங்கும் எப்போதும் எதிலும் பகலில் சிந்திக்கையிலும் மதியத்தில் உழைக்கையிலும் இரவில் ஸுகானுபூதியிலும் உறங்குகையிலும் கூட அவரை வழிபடமுடியும். காலை மதியம் என்கிறபோது அறத்தையும் பொருளையும் அவர்மயமாக்கி இரவில் இன்பத்தை அவர்மயமாக்கி அவரை வழிபடலாம்.

**அக்னே ஜு॰ஷஸ்வ என்று துவங்கும் இருபத்தெட்டாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

ஜாதவேதஸ அக்னியே! இந்தப் புரோடாசத்தை யக்ஞத்தில் காலைவேளையில் ஏற்றுக் கொள்ளுங்கள். இதை மதியத்திலும் ஏற்றுக் கொள்ளுங்கள். இது அன்புடன் தங்களுக்காக தயாரிக்கப்பட்டது. பலத்தின் புதல்வனே! மூன்றாம் முறை இந்தப் புரோடாசத்தை ஏற்று சந்தோஷியுங்கள். தேவர்களிடம் எடுத்துச் செல்லுங்கள். நீங்கள் அழியாதவர். எப்போதும் விழித்திருப்பவர். எல்லாமறிந்தவர். இப்புரோடாசத்தை ஏற்கவும்.

இவ்விதமாக அக்னியின் கதைகளும் லீலைகளும் புகழப்பட்டன. இவ்வக்னியைக் காக்கப் போராடும் இந்திரன் ஸோமபானத்திற்காக அழைக்கப்படுகிறார்.

**இச்சந்தி த்வா என்று துவங்கும் முப்பதாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

உங்களை விரும்புபவர்களும் உங்களுக்கு ஸோமனை அளிக்கின்றனர். இந்திரனே! அவர்களை ரக்ஷியுங்கள். உங்களை விடப் பெரியவீரன் எவனும் இல்லை. குதிரைகளின் தேவனே! இங்கு வாருங்கள். இவ்விடம் வெகுதூரமில்லை. ஹவிர்பாகம்

வைக்கப்பட்டுள்ளது. அக்னி வளர்க்கப்படுகிறது. சோகத்தைப் போக்கி ஆச்சர்யமான காரியங்களைச் செய்யும் உங்கள் சக்தி எங்கே? லக்ஷியங்களை ஸாதிப்பவரே! தார்மிக வழியில் யாத்திரிகர்களின் தேவனே! நீங்களே வ்ருத்திரனை (தீயசக்தியை) ஒழித்தவர். உங்களின் தருமங்களை அனுஷ்டிப்பவனுக்கு ஜோதியும் ஜகத்தும் ஸ்திரமாய் நிற்கின்றன.

பலத்தின் தேவனாகிய இந்திரன் அக்னியை தீயசக்திகளான வ்ருத்திரர்களிடமிருந்துக் காத்து சுடர்விட்டெரியச் செய்ததால் அது ஓங்கி வளர்ந்து பரிணாம வளர்ச்சியைப் பெருகிறது. அதாவது ஸோமலோகமாகிய ரஸமய இரவிலிருந்து தெய்விகப்பிரக்ஞை யாகிற ஸூர்யலோகத்திற்கு அக்னி பரிணாம வளர்ச்சி பெற வேண்டும். அதாவது நல்லோர்கட்கும் ஸாமானியர்கட்கும் நன்மைபுரிந்து தீயோர்களை முடிந்தால் திருத்தி இயலாவிடில் அடக்குகிறதைச் சுபாவமாகக் கொண்ட மிதமனதிற்குட்பட்ட தார்மிகரஸனை மிதவாக்கிற்கும் மிதமனதிற்கும் எட்டாது அப்பாலே உள்ள தெய்வப்பிரக்ஞையானப் பகலிலுள்ள எல்லாவற்றையும் விடப் பெரும் நன்மையான உண்மை நன்மையான பரமாத்ம லாபத்தை அடையவேண்டும். இது எப்படி ஸாத்தியமாகுமெனில் மனுஷ்யப் பிரக்ஞையிலேயே மிதவாக்கிற்கும் மிதமனதிற்கும் எட்டும் தெய்வீகமான அக்னியை உள்நோக்கிக் கண்டறிந்து அதை இந்திரனால் காத்து வளர்த்தால் அதனால் உண்மை நன்மையாகிய பரமாத்மனிடம் நாட்டம் என்கிற உந்துதலாக அக்னி பரிணமிக்கும்.

எங்கும் இருள்சூழ்ந்துள்ளது. அதுவொரு பயங்கர இரவு. எங்குமே எதுவுமே தெரியவில்லை. ஓநாய்களும் ஆந்தைகளும் ஊளையிடுகின்றன. காமவெறி க்ரோதவெறி முதலிய அஸுரர்கள் உலவுகின்றன. நரமாமிசம் தின்று ஹிம்ஸிப்பவர்கள் உள்ளனர். கதியேது? வழியேது? தப்பிக்கமுடியுமா? திசைதடுமாற்றம் ஏற்படுகிறதே! ஐயோ! என்ன செய்வேன்? என்று சிந்திக்கையிலே அதோ அங்கு ஏதோ சிறுவொளி தெரிகிறது. அதுவென்ன என்று கவனிக்கிறேன். அதை நாடி அதை அடையவிரும்புகிறேன். அதனிடம் செயல்களையும் சிந்தைகளையும் ஸமர்ப்பிக்க அதனால் வலுப்பட்ட அது சுடர்விட்டெறியத் துவங்கியது. அது விவேகவெளிச்சம். அதைக் கண்டு அஸுரர்களும் ஓநாய்களும்

அதையழிக்க ஓடிவருகின்றன. அப்போது இந்திரன் எழுந்து அவைகளை அழிக்கத் தொடங்குகிறான். அவை பயந்து ஓடுகின்றன. சுடர்விட்டெறியும் அக்னி பெருகி இந்திரனையும் ஹவிசுகளால் புஷ்டிப்படுத்துகிறது. அப்போதுதான் அங்கு ஸோமன் வருகிறார். அவர் தார்மிக ரஸனையின் ப்ரதீகம். அவர் தனது ஸூக்ஷ்மசக்திகளான நக்ஷத்திரங்களுடன் அங்கு உதிக்கையிலே அஸூரப்பிரக்ஞை மனுஷ்யப்பிரக்ஞையாக பரிணாம வளர்ச்சிபெருகிறது. ஸோமனை பானம் பண்ண விரும்பி அங்கு பல தேவர்கள் அக்னியால் அழைக்கப்பட்டு வருகின்றனர். இதுவொரு ரம்யமான இரவு. ஸோமனே இதன் நாயகன். இங்கும் தேவர்கள் உள்ளனர். விவேகவொளி வளர்ந்துகொண்டே போகிறது. இதைப்பொறுக்க முடியாமல் மீண்டும் மீண்டும் அஸுரர்கள் தொந்திரவு செய்கின்றனர். அப்போதெல்லாம் அவர்களை இந்திரன் துரத்துகிறார்.

ஆம். இப்போது இரவே பகலாக மாறும் காலம் வந்து விட்டது. மனுஷ்யப்பிரக்ஞை தெய்வப்பிரக்ஞையாகப் பரிணாம வளர்ச்சியை அடையப்போகிறது. எல்லா தேவர்களும் இப்போது தெய்வப்பிரக்ஞையின் ஒளிகளாகப் போகிறார்கள். ஸாமான்ய விவேகவுந்துதலான அக்னி விசேஷ விவேகவுந்துதலாக அதாவது உண்மை நலமான பரமாத்மனின் நாட்டமாகவும் ஸாமானிய விவேகப்பிரியரான மித்திரன் விசேஷ விவேகமான பரமாத்ம பிரியராகவும் தார்மிகரஸமான ஸோமன் ப்ரும்ஹானந்தரஸமாயும் ஸாமானிய விவேகத்திற்குப் பயன்பட்ட ப்ராணசக்தியான வாயு ஆன்மநாட்டத்தில் ஒருங்கிணைபவராயும் இவ்வாறு எல்லா தேவர்களுமே தெய்வப்பிரக்ஞையாகப் பரிணாமவளர்ச்சியடையப்போகும் காலகட்டத்திலே மீண்டும் பொறுக்கமுடியாமல் அஸுரர்கள் போருக்கு வர அப்போது இந்திரன் ஜோதியை ஸ்தாபிப்பதற்காக அதற்குத் தடையான தீயசக்திகளை ஒழிக்கக் கிளம்புகிறான். இந்த யுத்தம் ஆத்மஸூர்யனின் சக்தியான உஷையின் உதயத்தின் பொருட்டே. இதற்காக இந்திரன் மந்த்ரஸித்திகளாலும் தனது மற்றசக்திகளாலும் உஷையை உதிக்கச்செய்யப் போர் பண்ணும்படி அழைக்கப்படுகிறார்.

மந்திரங்கள்:

இந்திரனே! நீங்கள் ஜகத்தை அதன் ஆதாரஸ்தானத்திலே வைத்துள்ளீர்கள். உங்களால் கிளப்பிவிடப்பட்ட ஜலம் பிரவஹிக்கட்டும். பசுக்களை ஒளித்துவைத்த அஸுரன் உங்கள் சக்தியால் ஒழிந்தவுடன் நீங்கள் பசுக்களை மீண்டும் அடைவீர். யாத்திரீகர்களின் (ஸாதகர்களின்) பாதையை (ஸாதனையை) நல்லபடியமைத்து அவர்களுடன் நீங்களும் யாத்திரை பண்ணுகிறீர்கள். காதலுடன் சேர்ந்திருக்கும் ஜோதியையும் ஜகத்தையும் அஸுரர்களை வதைத்து திருப்தியடையச் செய்கிறீர். இங்கு வாருங்கள். அன்னஸம்ருத்திகொண்ட தங்களது ரதம் இங்கு வரட்டும். யாவரும் இரவின் முடிவில் அகண்டமான பொலிவுடைய உஷையை தரிசித்துவிட்டு இந்திரனின் ஆச்சர்யமான செயல்களை(ஸாதனைகளை) அறிகின்றனர்.

பரமாத்மநாட்டம் வாக்குக்கெட்டாதது. அதை வாக்கினால் ஓரளவிற்கு விளக்கவேண்டுமானால் அதை மூலத்தை பூர்ணப்ரக்ஞையை பரமார்த்தசைதன்யத்தைக் குறித்த அகணட நாட்டம் எனலாம். இப்பிரபஞ்சத்திற்கு ஸாக்ஷி மனது. இம்மனதின் எண்ணங்கள் எங்கிருந்தோ எழுந்து பிரபஞ்சத்தை நோக்குகின்றன. அவை நோக்குகையிலே அவைகளை எதிர்நோக்கி அவை எதையாதாரமாய்க்கொண்டு எங்கிருந்து எழுகின்றன என்று ஆழ்ந்து கவனிக்கையிலே இங்கு எல்லா மனச்சக்திகளும் சேர்ந்து ஒருங்கிணைந்து தங்கள் ஆதாரத்தை நோக்கும். இச்சக்திகள் யாவற்றிற்கும் காரணமாய் விளங்குவது அஸ்மிதை என்று யோகசாத்திரங்களிலே கூறப்படும். ஜீவன் என்று வேதாந்த சாத்திரங்களிலே கூறப்படும் ஸூக்ஷ்மமான நான் நான் நான் என்கிற வார்த்தையின் பொருளான அகந்தையேயாம். இதைக்கண்டறிந்து இதையாழ்ந்து கவனிக்கையில் அகண்ட பரமார்த்த சைதன்ய நாட்டத்தால் எழுகிற எண்ணங்கள் யாவற்றையும் எங்கிருந்து எழுகின்றன என்று ஆழ்ந்து நோக்கி அஸ்மிதையிலடக்கி காரியங்களை இவ்வாறு காரணத்தில் அடக்கி நிற்கையிலே அஷ்மிதையின் மூலத்தை நாடுகையிலே அது அகண்டாகாரமான ஆத்ம ஸூர்யனிடம் ஒடுங்கும். இவ்வளவே உபாஸனையை வாக்கால் விளக்க முடியும். இந்நாட்டத்தைவிளக்கும் மந்திரம் ஒன்று அறுபத்திரண்டாம் ஸூக்தத்திலே உள்ளது. அது ஸவிதாவான

ஸூர்யனின் பெண். ஆதலால் ஸாவித்ரி என்று பெயர்கொண்டது. அம்மந்திரமே காயத்ரிமந்திரம். ஸாதகன் அஸுரப்ரக்ஞையில் ஒளியைக்கண்டு அதைப்பிடித்து வளர்த்து ஸோமனைக் கொண்டு வந்து மனுஷ்யப்பிரக்ஞையாய் அவ்விரவை மாற்றி அங்கு அக்னி அதிவேகமாய் வளருகையிலே் மனம் தெய்வப்பிரக்ஞை யானப் பகலாகப் பரிணாம வளர்ச்சி பெற முயலுகிறது. அதற்கு ஸாதனம் இவ்வித ஆத்மோபாஸனமாகிய சிந்தைகளைச் சோதிக்கும் மூலத்தை நாடி கவனிப்பதே. மனுஷ்யப்பிரக்ஞையாகிய இருளின் முடிவே ப்ராம்ஹமுஹூர்த்தம். அப்போதே பகலின் பொருட்டு ஸூர்யோதயத்தின் பொருட்டு மனதையும் ப்ராணன்களையும் அடக்கி சிந்தைகளைச் சோதிக்கும் மூலத்தை ஸாதகன் நாடி த்யானிக்கிறான்.

**காயத்ரி மந்திரத்தின் பொருள்:**

**எது அறிவைத் தூண்டிவிடுகிறதோ அப்படிப்பட்ட தேவ ஸவிதாவான ஸூர்யனின் அழகிய ஜோதியை த்யானிக்கிறோம்.**

இவ்வித த்யானம் செய்து உபாஸிக்கையிலே ஆத்ம ஸூர்யனையே விழுங்க முயற்சித்தெழும் தீயசக்திகள் வதைக்கப் பட்டு இதயத்தில் அருளான. ஒளியான அழுக்கற்ற அகண்ட ஸச்சிதானந்த ஸூர்யஜோதி உதிக்கிறது.

**உஷோ வாஜேன என்று துவங்கும் அறுபத்தி ஒன்றாம் ஸூக்தத்தின் ஸூர்யோதயத்தைப்பற்றிய மந்திரங்கள்:**

மிகவும் சிறப்பான சைதன்ய சக்தியைக் கொண்ட தேவதையே! புராதனமான யுவதியே! மந்திரத்தை ஏற்பீர்கள். உதயதேவதையே! ஸத்தியத்தில் அழகிய மந்திரங்களைச் செலுத்துப வளாய் ஆனந்தமான ஒளிமயமான தங்கள் ரதத்தில் அழியாத் தன்மைக் கொண்டு ஜ்வலிப்பீர். நன்கு கட்டுப்படுத்தப்பட்ட ஒளிமயமான தங்கவர்ணம்கொண்ட மஹாபலம் பொருந்தியக் குதிரைகள் உங்களை இங்கு அழைத்து வரட்டும். எல்லாவுலகங் களையும் இயக்குபவளான தாங்கள் உச்சத்திலே அம்ருதத்தின் ப்ரக்ஞையாய் திகழ்கிறீர். புதியதினமே! சக்கரம்போல் மண்டல மானவளே! சக்திகளை தரிக்கச் செய்வீர். நீங்கள் நற்செயல் கொண்டு

நன்கு ஆனந்திப்பவள். ஸ்வர்கத்தை உருவாக்கியவள். ஸ்வர்கத்தின் உச்சியிலிருந்து புவிவரைவிரிகிறீர். ஸூக்ஷ்மதர்சிகளே! நீங்கள் உங்களைக் குறித்துப் பரவிய ஒளிமயமான உதயதேவதையைச் சந்தியுங்கள். வணக்கத்துடன் உங்களின் பூர்ணமானப் ப்ராண சக்தியை அவளுக்காக தரியுங்கள். தேவஸாம்ராஜ்ஜியத்தின் உச்ச கட்டத்திலேயுள்ள சக்தியைக் குறித்து மாதுர்யத்தை ஸ்தாபித்துக் கொண்டு எழுகிறாள். ஜோதியுலகங்களை ஒளிமயமாக்குபவள். தேவலோகத்து ஒளியால் ஒருவன் ஸத்தியத்தை தரிக்கும் உஷையை உணருகிறான். அனேகம் ஒளியைக்கொண்டு இருவுலகங்களுக்கும் அவள் வருகிறாள். ஒளியுடன் உம்மையணுகும் தேவதை யிடமிருந்து அக்னியே! நீங்கள் ஆனந்தம் பெறுவீர். தெய்வ சக்திகளின் தூண்டுதல்களை ஸத்தியத்திலும் உதயங்களிலும் ஸ்தாபித்துக் கொண்டு இருவுலகங்களிலும் அவைகளின் தேவன் உட்புகுறுகிறார். வருணனுடையவும் மித்திரனுடையவும் பிரக்ஞையுணர்வு மஹத்தானது. அது ஆனந்தஜ்ஜோதியில் ஒளியை தரிக்கிறது.

விளக்கம்: இம்மந்திரங்கள் ஸாவித்ரி தேவதை அல்லது உஷா என்று பெயர்கொண்ட ஸூர்யனின் உதயசக்தியைப் போற்றும் மந்திரங்கள். இந்ததேவதையை ஒருப் பெண்ணாக வேதம் பாடுகிறது. இவள் என்றென்றைக்கும் புதியவளான புராதன யுவதி யாவாள். இவள் தெய்வப்பிரக்ஞையைக் கொண்டுவருபவள். ஜோதியுலகின் நாயகி. ஸூர்யதேவனின் செல்லக்குழந்தை. யாவருக்கும் அன்னை. இவள் தெய்வப்பிரக்ஞையாகிற காலையில் சிந்தைகளைச்சோதிக்கும் ஜோதியை ஆழ்ந்து நோக்கும் உபாஸனையால் தர்சனம் தந்தவள். இவ்விதமாக மனுஷ்யப்ரக்ஞை யாகிய இருளின் முடிவில் ப்ராம்ஹமுஹூர்தத்தில் விழித்தெழுந்து தன்னைத் தூய்மைப்படுத்திக்கொண்டு பவித்திரனாகி ப்ராண சக்திகளை ஒருமுகப்படுத்தி சிந்தைகள் சோதிக்கப்படும் ஸ்தானத்தை உத்து கவனிக்கையாகிற வழிபாடு நடத்தி மனதையடக்கி ப்ராணசக்திகளையும் மனச்சக்திகளையும் மூலத்திற்கொப்புவித்து ஆத்மஸமர்பணம் பண்ணுகையில் தெய்வப்ரக்ஞை மெல்ல மெல்லப் படரத்துவங்கி ஸந்த்யாகாலத்தைத் தோற்றுவிக்கிறது.

இதுவே உஷையின் உதயகாலம். மனுஷ்யப்ரக்ஞையால் உதித்த ஸந்த்யாகாலத்து அகண்டஉபாஸனையால் ஸூர்யதேவன் எங்கும் நிரம்பி உதித்துவிடுகிறார். இதுவே பசுக்கள் பால் கரக்கும் காலம். காளைகள் வயலுக்குச் செல்லும் காலம். உழவர்கள் தங்கள் கர்ம யோகத்தைச்செய்ய வயல்வெளிக்கு செல்லும் காலம். தேவன் கிரணங்களால் நதியிலும் கடலிலும் வயல்வெளிகளிலும் காடுகளிலும் எங்கும் எதிலும் வ்யாபிக்கும் காலம். யாவற்றிற்கும் ஸாக்ஷியாக எங்கும் வ்யாபித்து எல்லோரையும் அவரவர் வேலைகளில் தூண்டி ஒளியைத் தந்து இருள்நீக்கி தெய்வீக நண்பனாய் இருந்து வழிகாட்டும் தேவனைக் கண்டு ஸூக்ஷ்மதரிசி வணங்கிப் புகழ்பாடுகிறான்.

**மித்ரோ ஜனான் யாதயதி என்றுத் துவங்கும் ஐம்பத்தி ஒன்பதாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

தெய்வீக நண்பர் ஸூர்யன் மனிதர்களை ஒன்றுசேர்க்கிறார். ஜோதியையும் ஜகத்தையும் இயக்குகிறார். கண்களை மூடாமல் மனிதர்களை கவனிக்கிறார். அந்த ஸத்தியஸ்வரூபிக்கு இந்தத் தெளிவான ஒளிநிறைந்த ஹவிர்பாகம். ஆதித்யனே! எவர்கள் உங்கள் அறத்தில் வாழ்கின்றனரோ அவர்களுக்கு தூரத்திலிருந்தோ அருகிலிருந்தோ எந்த ஹிம்ஸையும் வரக்கூடாது.

**அசுரர்கள்:** *இந்திராதி தேவர் தம்மை*
*ஏசி வாழ்ந்தோமே - ஐயோ நாம்*
*வந்து போக மானிடர்க்கோர்*
*வேதமுண்டாமே - அம்மாவோ*

**ரிஷிகள்:** *வானை நோக்கிக் கைகள் தூக்கி*
*வளருதே தீ தீ- இந்நேரம்*
*ஞானமேனி உதய கன்னி*
*நண்ணி விட்டாளே- இந்நேரம்*

-பாரதியார்.

வாமதேவர்:

*கேள்வியந்தணர் கடவும்*
*வேள்வி யாவினுயிர்க்குமென்னெஞ்சே*

- கலித்தொகை.

**இங்கிருந்து ரிக்வேதத்தின் நான்காம் மண்டலத்தின் மந்திரங்கள் துவங்குகின்றன.**

**த்வம் ஹ்யக்நே எனத் துவங்கும் முதல் ஸூக்த மந்திரங்கள்:**

அக்னிக்கு ஸ்தோத்திரம். அக்னிதேவன் நம் நன்மையின் பொருட்டு ஜோதியிலிருந்து இங்கு அனுப்பப்பட்டவர். மர்த்யர்களில் அமரனான ஞானஸ்வரூபியான அக்னியே! உங்களை இவர்கள் வளர்த்துள்ளனர். இங்கு உங்கள் சகோதரன் வருணனை (தூய்மையை) அழைத்துவாருங்கள். மனிதரக்ஷகரான அரசனான நீதியை ஆள்பவரான பொலிவுகொண்ட அதிதிமைந்தனை இங்கு அழைத்து வாருங்கள். வருணனுடன் மருத்கணங்களுடன் அக்னி தேவன் நமக்கு நன்மை பயக்கிறார். ஜகத்தை இயக்கிவைக்கிறார். அஞ்ஞானத்தைப் போக்குபவரே! வருணனை அறிந்தவரே! தேவர்களின் கஷ்டங்களை எங்களிடமிருந்து போக்குவீர்கள். உஷா உதிக்கையிலே நீங்கள் எங்கள் அருகாமயிலேயே இருக்கிறீர்கள்.

இம்மந்திரங்கள் தெய்வீகசக்திகளையும் தேவர்களையும் அக்னி அன்போடு அழைத்து வரும் விஷயத்தைக் கூறுகிறது. அடுத்தது அஸுரசக்திகளை அடித்து நொறுக்கும் கோர அக்னியை ரக்ஷோக்ன அக்னியைப் புகழ்கிறது.

**க்ருணுஷ்வபாஜ எனத்துவங்கும் நான்காம் ஸூக்தமந்திரங்கள்:**

உங்களின் பயங்கரமான ஆயுதங்களால் அஸுரர்களைத் துரத்துங்கள். பறக்கும் பொறிகளைத் தங்கள் நாக்குகளிலிருந்து வெளிப்படுத்தவும். அருகிலும் தூரத்திலும் இருக்கும் யாருமே எங்களுக்குத் தீமை செய்யவேண்டாம். அக்னியே! எழுந்திருங்கள். உங்களின் ஜ்வாலைகளைப் பரப்புங்கள். தீயோர்களை பஸ்ம மாக்குங்கள். தீயோர்களை எங்களைவிட்டு அப்புறப்படுத்துங்கள்.

எவன் தங்களின் வழிபாட்டுப் பாதையிலே நடக்கிறானோ அவனுக்கு நன்மை பயக்குங்கள். அவனிடம் ஜ்வலியுங்கள்.

**ப்ரத்யக்னி எனத்துவங்கும் பதிமூன்றாம் ஸூக்த மந்திரங்கள்:**

அச்விகளே! தங்களை வழிபடுபவர்களின் இருப்பிடங்களுக்கு வாருங்கள். ஸூர்யதேவன் தன் கிரணங்களை எங்கும் வ்யாபிக்கச் செய்தார். வருணனும் மித்திரனும் ஸூர்யனை அனுப்புகிறார்கள். ஸூர்யன் இருளை நீக்குகிறார். எல்லாவற்றையும் காண்கிறார். தன் குதிரைகளால் கிளம்பி கிரணங்களால் பரவி வருகிறார். ஸூர்யகிரணங்கள் காரிருளை மறைத்து விடுகின்றன. என்ன விந்தை! இந்த தேவன் அகண்டமாய் கீழே விழாமல் அப்படியே நிற்கிறார் பார்!

**ப்ரத்யக்னி எனத்துவங்கும் பதிநான்காம் ஸூக்த மந்திரங்கள்:**

அக்னிதேவன் உஷைக்காக பொலிவுடன் ஸ்தாபிக்கப் பட்டவர். அச்விகளே! ரதத்துடன் நீங்கள் யக்ஞத்திற்கு வாரீர். பிரபஞ்சத்திற்கே ஜோதியான தேவஸவிதா எழுந்துவிட்டார். அவர் ஜோதியையும் ஜகத்தையும் தன் பொலிவால் நிரப்பி தன் இருக்கையை மகிமைப்படுத்தினார். மனிதர்களைத் தட்டி எழுப்பி ஆனந்தத்தை அளிப்பவளாய் உஷா வருகிறாள். அச்விகளே! இங்கு வாருங்கள். இங்கு உள்ளது ஸோமம். அது தங்களுக்கு ஆனந்தமளிக்கட்டும்.

விளக்கம்: அச்விகள் ஆனந்தரஸதாரையில் மிதக்கும் கப்பலோட்டும் ப்ராணசக்திகள். ஸூர்யனின் பிள்ளைகள். அவர்கள் ஆனந்தரஸமான ஸோமனைப் பானம் பண்ண அழைக்கப் படுகிறார் கள். அவர்களே ஸூர்யனை காட்டிவைப்பர். ப்ராணசக்திகள் ரஸனையின் ஆதாரத்திலே வலுவடைந்து பரமாத்மஸூர்யனை நோக்கவைக்கின்றனர். பரமாத்மஸூர்யன் நம்மிடம் இடைவிடாமல் அகண்டமாய் விழுந்துவிடாமலும் மறைந்துவிடாமலும் இருந்து கொண்டே இருக்கிறார். ஆத்மஸாக்ஷாத்காரத்தை அச்விகள் மிகவும் ஸ்திரப்படுத்தியுள்ளனர். மேலும் அந்த ப்ருஹஜ்ஜோதியான ஸூர்யனைப் பற்றியே ஸ்தோத்திரங்கள்.

### ஏஷ ஸ்ய எனத்துவங்கும் நாற்பத்தி ஐந்தாம் ஸூக்தத்தினுடையவும் அக்ரம் பிப எனத்துவங்கும் நாற்பத்தி ஆறாம் ஸூக்தத்தினுடையவும் மந்திரங்கள்:

ஜோதியிலே ரதம் தூண்டிவிடப்பட்டுள்ளது. இம்மதுரமான ஸோமத்தைப் பானம் பண்ணி ரதத்தைக் கிளப்புங்கள். தங்கள் வழியையும் யாத்திரையையும் ஸோமத்தால் புனிதமாக்குங்கள். அச்விகளே! தங்களை அன்னப்பறவைகள்போல் விளங்கும் நீங்கள் உஷையில் எழுகிறீர்கள். நீங்கள் தங்கபக்ஷங்களுடன் மதுரமாயும் த்ருடமாயும் உள்ளீர்கள். உஷையில் எழும் நீங்கள் ஜலத்தை வர்ஷிக்கின்றீர். ஸோமபானத்திற்காக வருகிறீர். மதுரமான அக்னிகள் யக்ஞத்தில் உஷையின் காலத்திலே அச்விகளைத் துதிக்கின்றனர். ஸோமபானம் பண்ணுகையில் கிரணங்கள் வந்து எங்கும் பரவுகின்றன. ஸூர்யன் செல்லும் பாதைகளை யக்ஞபலத்தால் அறியப்படுத்துங்கள். அச்விகளே! எங்களிடம் அன்பு செலுத்தி அழிவற்ற உயர்ந்த குதிரைகளுடைய ரதத்தில் அதிவேகமாய் வழிபடுபவனிடம் வருகிறீர்கள். வாயுவே! (ப்ராணன்) ஒளிகொண்ட ரதத்தில் ஸோமபானம் பண்ண வாரீர். பலம் கொண்ட குதிரைகள் பூட்டிய ரதத்தில் இந்திரனுடன் இங்கு வாருங்கள்.

விளக்கம்: ஒளிமயமான பரமாத்மஸூர்யன் உள்ளே ரஸனையைப்பருகி ஆனந்தித்து ரதத்தில் வருவதின் அழகிய வர்ணனை இது. இவர் வருவதாலேயே தெய்வீக காரியங்கள் நடக்கிறது. ப்ராணசக்திகளையே ரதத்தில் பூட்டி ஒளியை படரச்செய்துகொண்டு சைதன்ய ஸூர்யன் வருவது மிக அழகான காட்சி.

### கர்பேனுஸன் எனத்துவங்கும் இருபத்தேழாம் ஸூக்தமந்திரம்:

ஸ்வஸ்வரூபமான மூலஸ்தானமான கர்பக்ருஹத்தில் இருந்தவாறே நான் தேவர்களின் பிறப்புகளை அறிந்தேன். என்னை சிறைக்காத்த நூற்றுக்கணக்கான கோட்டைகளிலிருந்து நான் அதிவேகமாய் வெளிப்பட்டேன்.

விளக்கம்: ஆத்மஸ்வரூபமே ஸகலதேவர்களுடையவும்

ஜன்மஸ்தானம். தெளிவான நிறைவான ஆத்மஞானம் பெற்ற ஞானி இதற்கு முதல் மந்திரத்திலேயே தன்னை ஸூர்யனென்றும் ரிஷியென்றும் ஸூக்ஷ்மதரிசி என்றும் மழையளிக்கும் தேவனென்றும் ஸகலமாயும் பாவிக்கிறார். ஐதரேய உபநிடதம் கர்பே னு ஸன் என்னும் மந்திரத்தின் பொருளை விளக்குகையில் முதலில் கர்மாக்களால் ஏற்படும் கதாகதிகளை ஸூக்ஷ்மதரிசி அறிந்ததாய் கூறுகிறது. அதன் பிறகு எதனால் பார்க்கிறோமோ எதனால் கேட்கிறோமோ எதனால் முகருகிறோமோ அப்படிப்பட்ட பூர்ணப்ரக்ஞையான ஆத்மசைதன்யமே ஸம்ஞானம் ப்ரக்ஞானம் விஞ்ஞானம் இதயம் மனம் மேதை த்ருஷ்டி மதி த்ருதி மனீஷை ஸ்ம்ருதி ஸங்கல்பம் விருப்பம்முதலிய ஸூக்ஷ்மசைதன்ய சக்திகளாயும் தாவரஜங்கமங் கள் மிருகபக்ஷிகள் ஐம்பூதங்கள் மனிதர்கள் யாவருக்கும் ஆதாரமாயும் கண்ணாயும் ப்ரதிஷ்டையாயும் உள்ளது என உணருதலையும் அறிதலையும் கூறுகிறது.

**விஹ்ரி ஹோத்ரா எனத்துவங்கும் நாற்பத்தி எட்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

வாயுவே! ஒளிகொண்ட ரதத்தில் ஸோமபானம்பண்ண வாரீர். பலம்கொண்ட குதிரைகள் பூட்டிய ரதத்தில் இந்திரனின் ஸாரதியான நீர் வாரீர். தங்களின் ஸங்கல்பமாத்திரத்தில் தங்களை தரிக்கும் மனோவேகம்மிக்க குதிரைகள் (ப்ராணபலம்) தூண்டிவிடப் படுகின்றன. வாயுவே! ஒளிகொண்ட ரதத்தில் ஸோமபானம் பண்ண வாரீர். தேவனே! ஆயிரம் குதிரைகளைக் கிளப்புங்கள். அவைகள் உங்களை தரித்துவரட்டும். வாயுவே! ஒளிகொண்ட ரதத்தில் ஸோமபானம் பண்ண வாரீர்!

விளக்கம்: வாயு ப்ராணனைக் குறிக்கிறார். அவரே குதிரை ரூபத்தில் இந்திரனின் தேரில் பூட்டப்பட்டு ஓட்டப்படுகிறார். புத்தி பலமான இந்திரனை ரதத்தில் அமர்த்தி ஓட்டி வரும் ஸாரதியாகவும் ப்ராணதேவதையாகவும் வாயுவே உள்ளார்.

**தத் தேவஸ்ய எனத்துவங்கும் ஐம்பத்தி மூன்றாம் ஸூக்த மந்திரங்கள்:**

ஸர்வஸ்ரேஷ்டரான தேவஸவிதாவிடமிருந்து மிகச்சிறந்த வரத்தைப் பெறுகிறோம். அவர் வணங்குபவரின் ரக்ஷகன். அவரின் ஞானரச்மிகள் எங்களுக்கு வரத்தையருளட்டும். ஜோதியை இயக்குபவர். எல்லாவற்றிற்கும் நாயகர். ஸர்வவ்யாபி. ஜோதியில் வ்யாபித்தவர். அவர் ஜோதியையும் ஜகத்தையும் பூரித்து தன் தருமத்தின்பொருட்டு கானம் பண்ணுகிறார். அவர் எல்லா உயிரினங்களுக்கும் ஒளியளிப்பவர். சராசரங்களின் நாயகரவர். மூவுலகிலும் வ்யாபித்தவர். வாழ்வை ஸ்திரப்படுத்துகிறார். அவர் நமக்கு ரக்ஷிப்பையும் இருப்பிடத்தையும் அளிப்பார். அவர் நம் அன்னத்தையும் புதல்வர்களையும் வளர்க்கட்டும். நமக்கு இரவுகளாலும் (மனுஷ்யப்பிரக்ஞையாலும்) பகல்களாலும் (தெய்வப்பிரக்ஞையாலும்) நன்மையளிக்கட்டும்.

**க்ஷேத்ரஸ்ய பதினா எனத்துவங்கும் ஐம்பத்தி ஏழாம் ஸூக்த மந்திரங்கள்:**

வயல்களின் தெய்வத்திடமிருந்து உதவியாளரிடமிருந்தும் நண்பனிடமிருந்தும் போல் எங்கள் பசுக்களுக்கும் (ஞானரச்மி களுக்கும்) குதிரைகளுக்கும்(பலத்திற்கும்) ஸம்ருத்தியான அன்னத்தையடைவோம். பசு பாலைத்தருவதுபோல் தாங்கள் மதுரமான ஜலத்தையளிப்பீர். ஓஷதிகள் மதுரமாயிருக்கட்டும். ஸ்வர்கம் மதுரமாயிருக்கட்டும். ஜலம் மதுரமாயிருக்கட்டும். காற்று மதுரமாயிருக்கட்டும். வயலின் தேவன் பூர்ணமாதுர்யம் கொண்டு இருக்கட்டும். அவரை ஹிம்ஸையற்றுப் பின்பற்றுவோம். ஸந்தோஷமாய் உழவன் நிலத்தை உழட்டும். நாங்கள் கலப்பையை ஸ்வாகதம் பண்ணுகிறோம். அது ஸ்வர்கத்தில் பண்ணப்பட்ட க்ஷீரத்தைப் புவியிலே வர்ஷிக்கட்டும். வயலில் விளைந்தவை அதிகமாயிருக்கட்டும். வயல்வெளி மங்களமாயிருக்கட்டும். ஸீதையே! அன்னையே! உங்களை நாங்கள் வணங்குகிறோம். நீங்கள் மங்களமானவள். எங்களுடன் இருங்கள். இந்திரன் உங்களை ஏற்கட்டும். ஸூர்யன் உங்களைப் பயக்கட்டும். நீங்கள் எமக்கு நற்பயன்களை அளிப்பீர். புவியை கலப்பைகள் சுபமாய் உழட்டும். சுபமாய் உழவர்கள் ஸாதனை புரியட்டும். தேனைப்பொழியும் இந்திரன் சுபமாய் இருக்கட்டும். நம்மிடம் உள்ள

சுபத்தை தரிக்கட்டும்.

விளக்கம்: ஒவ்வொரு மனிதனிடமும் குடிகொண்டுள்ள சக்திகள் எண்ணிலடங்காதவை. இவ்வளவு அபாரமான ஸூக்ஷ்மசக்திகளையும் தனது சைதன்யத்திலேயே கொண்ட மனிதன் தன்னை அச்சைதன்யமாய் உணராமல் தன்னை அற்பமாகவே எண்ணி தனது உட்சக்திகளையும் உள்ளனவாய் உணராமல் வாழ்வில் சோம்பேரியாகப் பாழாகிறான். உட்சக்திகளை உணர்ந்து அவைகளை சீரானமுறையில் தனது இதயநிலத்தில் பண்படுத்தி விதைத்து உருவாக்கி அறுவடை செய்து பக்குவப்படுத்துபவனான உழவனே உண்மையான ஸாதகனாயும் யோகியாயும் ஆகிறான். இவ்வதிக சக்தி வாய்ந்த நிலத்தை தனது கடினமான உழைப்பால் சீராகப் பண்படுத்தினால் அது தெய்வீகமாகிறது. இந்த தெய்வீகமான பண்படுத்தப்பட்ட இதயநிலமே ஸீதை என்கிற ப்ரக்ருதியன்னை. உழைப்பினாலேயே தெய்வீகத்தைப் பெறமுடியும். சோம்பேறிகள் அதை அடைய முடியாது. நாம் ஒவ்வொருவரும் உழவர்களாக வேண்டும். இதயநிலத்தை உழவேண்டும். இவ்வித உழவு மிகவும் ரஸமானது. இதன் பலனும் மிகவும் ரஸமானது. நமக்குதவ பலமான இந்திரன் இதயநிலத்திலே சைதன்யசக்திகளை வர்ஷிப்பான். இதனால் நம் நிலம் தெய்வப்பிரக்ஞையான ஸீதையன்னையாகிவிடும். நமது வாழ்வே ஸீதையாகிவிடும். ஏனெனில் வாழ்வே இதயநிலத்தை அடிப்படையாய் கொண்டது. நமக்குள் விளங்கும் ஸீதையின் தூண்டுதலாலேயே நாம் எல்லா காரியங்களையும் செய்யத் துவங்குவோம். இவளே வேதம்முழுவதும் புகழப்படும் தேவதை. வெவ்வேறு தேவதைகளாய் வேதம் இதயநிலமாகிய ஸீதையையே பாடுகிறது. ஜரதுஷ்ட்ரர்களின் ஜந்தாவஸ்தாவும், இந்த நிலம், உழவு, அதனால் அடையும் ஒளி எல்லாவற்றையும் அதிவிஸ்தாரமாகப் பேசுகிறது.

இவள் ப்ரக்ருதியன்னை. இவள் உண்மையில் இறைவனின் இதயநிலம். யாவருக்கும் அன்னையாயும் இறைவனின் சக்தியாயும் அருள்பரிபாலிக்கிறவள். அப்படியிருக்கும் இந்த ஸீதை எல்லா உண்மைச்சாதகர்களுடையவும் இதயநிலங்களாக பலரூபங்களில் ஸாதகர்களுக்குள்ளேயே அவதரிக்கிறாள். ஸாதகர்கள் உழுவதின் பலனாக அவதரிக்கும் தெய்வப்பிரக்ஞை இவள். இவளே ப்ரக்ருதி.

இவள் புருஷனான விஷ்ணுவினுடையவள். இவளே இந்த பூமிக்ரஹத்தில் விஷ்ணு அவதரிக்கையில் ஜனகனின் யக்ஞத்தில் உழுகையில் வெளிப்பட்டவள். இவளைப்பற்றி விவேகானந்தர் கூறுவதாவது - **சீதை பல்லாயிரக்கணக்கான வருடங்களாக பாரதநாட்டில் முதியோர்களுடையவும் குழந்தைகளுடையவும் பெண்களுடையவும் பூஜையைப் பரம்பரை பரம்பரையாக ஏற்று வருகிறாள். பாரதநாட்டுதெய்வமாக சீதையை நாம் வணங்கவேண்டும். பாரதநாட்டின் இலக்கு சீதாராமர்களாக இருக்கவேண்டும். எந்த புராணங்களிலும் எந்த இலக்கியங்களிலும் இரண்டாவது சீதையை என்னால் காணமுடியவில்லை. நம் புராணங்கள் அழியலாம். இலக்கியங்கள் அழியலாம். ஆனால் நாட்டுப்புறப் பாடலிலாவது இந்த சீதையின் கதையை மக்கள் பாடிவருவார்கள் என உறுதி கூறுகிறேன்.தன் வாழ்வில் வந்த கஷ்டங்கள் எல்லாவற்றையும் தாங்குபவள். இவள் தூய்மையிலும் தூய்மையானவள். பொறுமையே உருவானவள். துயரத்தைப் பொறுத்தவள். சீதை நம் இனத்தாருடைய உயிர்நிலைக்குள் இரண்டறக்கலந்தவள். ஒவ்வொரு ஆண் பெண்ணினுடைய உதிரத்திலும் சீதை இருக்க வேண்டும்.**

**நாம் யாவரும் சீதையின் குழந்தைகளேயாவோம். நமது அன்பு அன்னை சீதை. இந்தியப்பெண்கள் சீதையின் அடிச்சுவடுகளின் வழியைப் பின்பற்றியே வளர்ந்து முன்னேற்றமடைய வேண்டும். அதுவொன்றே அவர்களுக்கு உள்ள ஒரேயொரு வழியாகும். உண்மையான இந்தியப் பெண்மையின் பரிபூரணமாதிரியாவாள். சீதை என்னும் மாதரசியை என்றென்றைக்குமாக மக்கள் முன்பு நிறுத்திவிட்டார் கவி. அவரின் நடையைக் காட்டிலும் அழகான எளிதான தூய்மையான நடையை வேறெங்கும் காணமுடியாது.**
இவை விவேகானந்தரின் வாக்கியங்கள்.

> இப்படி தெய்வீகவாழ்வையும் தெய்வீக மனதையும் ஒருங்கிணைத்து ஒரு வயலாக வர்ணித்த வேதம் ஸமுத்ராதூர்மிர்மதுமான் எனத்துவங்கும் அடுத்த ஸூக்தத்திலேயே ஸமுத்திரமாய் வர்ணிக்கிறது.

இதயஸமுத்திரத்தில் தேன் அலைகள் எழுகின்றன. அது அம்ருதத்தின் நாபி. தேவர்களின் நாக்கு. ஒளியின் ரகசியமந்திரம் அங்கேயே உள்ளது. இவ்வித தெய்வீகஸமுத்திரமாகிய இதயவாழ்வை அடைவதும் அதில் முழுகி வாழ்வதும் எங்ஙனம்? அதை அடைவது எங்ஙனம்? எனில் அதை அடைவிக்க

அதிலேயே ஒரு ரகசியம் ஒளிந்திருக்கிறது. ஔபாஸனமே அதை அடைய வழி. ஔபாஸனம் என்றால் என்ன?சாமானியர்கள் எச்செயல்கள் புரிந்தாலும் தன்பொருட்டே தன்னலம் கருதியே செய்வர். அச்சுபாவம் ஸாதகர்களுக்கு இருக்கக்கூடாது. ஸாதகன் செயல்களை விவேகவொளி வளரும் பொருட்டு செய்வான். தனது செயல்களை ஸாதகன் விவேகவொளிக்கே ஸமர்பிப்பான். அது அளிக்கும் பலன்களையே உண்பான். அதுவளிக்காத அதார்மிக பலன்களை வெறும் சுயநலத்தின் பொருட்டு உண்பதில்லை. அவன் செயல்களாகிய ஸமித்துகளையும் எண்ணவொளிகளாகிய நெய்யையும் விவேகவொளிக்கே ஸமர்ப்பணம் பண்ணுவான். அது அவனது யோகமும் யக்ஞமும் ஆகும். இதனால் விவேகவொளி வளர்ந்து நிலைபெருகிறது. இது எனக்கில்லை. இது அக்னிக்கு. *(அக்னயே இதம் ந மம)* என்று செயல்களும் எண்ணவொளிகளு மான ஸமித்துக்களையும் நெய்யையும் ஸமர்பிக்கும் த்யாகபுத்தியால் உள்ளேயுள்ள விவேகவொளி பொலிவடைகிறது. அதுவொரு காளையாகவுள்ளது. அவ்வக்னிக்கு கனவு நினைவு உறக்கம் ஈச்வரதரிசனம் என்கிற ஸமாதி இவ்வித நான்கு கொம்புகள் உள்ளன. உடல் உயிர் உளம் என்கிற மூன்று பாதங்கள் உள்ளன. மனுஷ்யப்ரக்ஞை தெய்வப்ரக்ஞை என்கிற இருதலைகள் உள்ளன. பூர்புவஸ்ஸுவர்மஹர் ஜனதபோஸத்யங்களாகிற ஏழு கைகள் உள்ளன. அக்காளை மஹத்தான விவேகவொளியை சப்திக்கிறது. அதனிடம் ஸாதகன் தனது செயல்களையும் சிந்தைகளையும் தினந்தோறும் ஒப்புவித்துவிட்டு அதுவளிப்ப தையே பலனாய் ப்ரஸாதமாய் அனுபவித்து அதைக்கொண்டு தனது இதயகர்பத்தில் மூலஸ்தானத்தில் குடிகொண்ட கடவுளை தரிசிக்கிறான். ஒளிமயநதிகள் அந்த இதயஸமுத்திரத்தில் தேனலைக ளுடன் வந்து சேருகின்றன. இவ்விடத்தின் மூலஸ்தானத்திலே காளையின் உதவிகொண்டு உள்ளேயே தெய்வப்ரக்ஞையாகிய ஜலங்கள் அகண்டமாக ப்ரவஹிக்கும் இடத்தில் ரகசியஸ்தானத்தில் பரமாத்மதரிசனம் பெறுகிறான். இவ்விதமாய் காளையைப்பற்றியும் இதயஸமுத்திரத்தைப்பற்றியும் ப்ரும்ஹானுபூதியைப்பற்றியும் வேதம் நான்காம் மண்டலம் முடிவில் கூறுகிறது.

அக்னிவழிபாட்டைப்பற்றி கீதையில் க்ருஷ்ணன் கூறுவது

யாதெனில் யக்ஞத்துடன் ப்ரஜாபதி ப்ரஜைகளைப் படைத்து அவர்களிடம், 'இதிலிருந்தே நற்பயன்கள் பெறுவீர்' என்றார். தேவர்களை நாம் வளர்ப்போம். தேவர்கள் நம்மை வளர்க்கட்டும். ஒருவருக்கொருவர் வளர்ந்து ஸ்ரேயஸை அடைவோம். நமக்கு நற்பயன்கள் அருளும் தேவர்களுக்கு அளிக்காமல் உண்பவன் திருடன். யக்ஞத்தின் நற்பயன்களையே பிரஸாதமாக அனுபவிக்கும் சான்றோர்கள் சோகங்களிலிருந்து விடுபடுவர். யக்ஞம் வேதத்திலிருந்து வந்தது. வேதம் கடவுளிடமிருந்து வந்தது.

ஆதலால் கடவுளும் வேதமும் யக்ஞத்தில் குடிகொண்டவர்கள். யக்ஞம் செய்யாது இருப்பவன் பாவியாக மோசமாகிவிடுவான். யோகிகள் தெய்வீக யக்ஞம் செய்வர். இந்திரியங்களை ஸம்யமம் என்னும் அக்னியில் ஹோமம் செய்வர். புலன்களின் செயல்களை ப்ராணனில் ஹோமம் செய்வர். தவம் என்கிற யக்ஞம் சடங்கு யக்ஞம் யோகயக்ஞம் ஸ்வாத்தயாய யக்ஞம் என்று யக்ஞம் பல. ப்ராணாயாமம் ஒரு யக்ஞம். இவைகளுள் ஞானயக்ஞம் சாலச் சிறந்தது. எல்லா ஸாதனைகளும் ஞானத்தில் முடியும். ஸமித்துக்களை தீ பொசுக்குவதுபோல் ஞானாக்னி கர்மபந்தங்களைக் கொளுத்துகிறது.

**அத்ரிகுடும்பம் -**

*அச்சத்தைச் சுட்டங்கு சாம்பருமின்றி*
*அவித்திடும் வானவனைச் - செய்கை*
*ஆற்றுமதிச் சுடரை- தடை*
*யற்ற பெருந்திறளை - எம்முள்*
*இச்சையும் வேட்கையும் ஆசையும் காதலும்*
*ஏற்றதோர் நல்லறமும் - கலந்தொளி*
*ஏறந் தவக்கனலைப் - பெருந்திரள்*
*எய்தின்பமீந்திடுவோம் - வாரீர்*

-பாரதியார்

**இனி ரிக்வேதத்தின் ஐந்தாம் மண்டலத்தின் மந்திரங்களின் ஆரம்பம்.**

புராதனமான அக்னியை புராதன ருஷிகள் உதவிநாடி

வளர்த்துள்ளனர். ஒளி மிகுந்தவர். ஆச்ரயிக்கத் தகுந்தவர். மனுஷ்யர்களுக்கு அளிப்பவர். வணங்கப்பட வேண்டியவர். அவரை அதிதியாகவும் க்ருஹபதியாகவும் உதவி செய்பவராகவும் புராதனமானவர்கள் ஸ்தாபித்துள்ளனர். நாங்கள் அவரை மரியாதையுடன் அணுகியுள்ளோம். ஆகையால் எங்கள் யக்ஞத்தில் சந்தோஷித்து ஜ்வாலைகள் அதிகரிக்க வளர்ந்துள்ளார். பலரூபங்கள் கொண்ட அக்னியே எல்லோருக்கும் ஏராளமாய் அளிக்கிறார். தேவர்களுக்கு ஹவிர்பாகங்களை எடுத்துச்செல்பவரான அவரையே தேவர்கள் தங்களது ஜ்வலிக்கும் கண்களாய் ஆக்கியுள்ளனர். அவர் பலம் பொருந்தியவராய் ஜகத்தின் எல்லாஸ்தானங்களிலும் வ்யாபித்துள்ளார். ரிஷிகளின் குலதெய்வம். ரிஷிகுடும்பங்களின் அதிபதி. க்ருஹபதி. ஐந்தாம் மண்டலம் அத்ரிமுனிவரின் குடும்பத்தவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட மந்திரங்களையே கொண்டது. அக்குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் தன்னைக் காட்டியருளி அவர்களை ஆசீர்வதித்து அவர்களை வழிநடத்தும் குருவாயும், அணைக்கும் அன்னையாயும், தாங்கும் தந்தையாயும், உற்ற தோழனாயும், செல்லக் குழந்தையாயும், உயிர்மூச்சாயும், ஆண்டவராயும் இருந்து வந்தவர் அக்னிதேவன். அவரின் அனுக்ரஹத்தினால் வாழ்வையும், தெய்வீகத்தையும், ஒளியையும் கசடற அறிந்த திவ்யஞானிகளான அத்ரிகுடும்பத்தவர்கள் அவரைப்பற்றிய உண்மைகளைக் கண்டறிந்து நமக்கு அருளினர். இம்மண்டலத்தின் முதல் இருபத்தேழு ஸூக்தங்கள் அக்னியை மிகவும் தெளிவுபடுத்தக்கூடியவை. அவையாவற்றுடையவும் ஸாராம்சத்தை இங்கு காணவுள்ளோம். முக்கியமாக முதல் ஐந்துஸூக்தங்கள் விரிவாக இங்கு விளக்கப்படுகின்றன.

### அபோத்யக்னி: என்று துவங்கும் முதல் ஸூக்தமந்திரங்கள்:

அக்னி தன்னை நோக்கி ஒளியாய் விளங்கும் உஷையை நோக்கி உள்ளார். மக்களின் தூண்டுதலால் அவர் எழுந்தார். கிரணங்களுடன் ஸூக்ஷ்மசக்திகள் ஸ்வர்கம்வரைப் படருவதுபோல் அக்னி மிளிர்கிறார். இருளிலிருந்து இப்பெரிய கடவுள் வெளிப்பட்டார். தேவர்களை அழைப்பவரான அவர் தேவர்களுக்

கான யக்ஞத்திற்காக எழுந்துள்ளார். நன்மனதுடன் காலை வேளையில் விளங்குகிறார். தக்ஷிணா என்கிற தூய விவேகதேவதை ஒளிகளுடன் அக்னி பரவுகையில் வளர்க்கப்பட்டு தன் ஸாதனைகளில் தூண்டிவிடப்பட்டு அக்னியின் சைதன்ய ஒளிகளால் ப்ரகாசிக்கிறாள். உஷையின் காலத்திலே வெண்குதிரையாகப் பிறந்த அக்னியை நோக்கி நன்மனதுகள் ஸூக்ஷ்மதரிசிகளின் த்ருஷ்டிகள் ஸூர்யனை நோக்கி ஓடுவதுபோல் ஓடுகின்றன. உஷைகளின் காலத்திலே பிறந்து ஆனந்தஸ்தானங்களிலே ஹிதராய் அவர் ஸ்தாபிக்கப் படுகிறார். ஒவ்வொரு வீட்டிலும் ஏழு அனுபூதிகளை யும் தரிப்பவராய் தேவர்களை அழைப்பவராய் மிளிர்கிறார். அக்னி யக்ஞதேவராய் தேவர்களை அழைப்பவராய் ஹவ்யங்களை இவ்வுலகுக்கும் மேலுலகுக்குமாய் தரிப்பவராய் தன் அன்னையின் மடியிலும் மற்றுமோர் உலகிலும் இளைஞனாக ஸூக்ஷ்மதரிசியாக ஸாதனைகளை தரிப்பவராக ஸத்யாத்மகராக மிளிர்கிறார். ஸாதகர்கள் அக்னியை யக்ஞத்தில் வழிபடுவர். அவர் சீரான திருத்தங்களைச் செய்துவைப்பவர். பூலோகத்தையும் ஸுவர்லோகத்தையும் உடலையும் மனதையும் அறநெறிகளைக் கொண்டு பண்படுத்துபவர் அவர். எங்களுக்கு மங்களமான அதிதி நீர். எங்கள் சக்தி வாய்ந்த குதிரை நீர். எங்கள் ஆயிரம் கொம்புகள் கொண்ட ஓஜஸ் கொண்ட அதிபலம் பொருந்தியக் காளை நீர். ஸூக்ஷ்மதரிசிகளால் மகிமைப்படுத்தப்பட்ட ஒளி நீர். நீர் எல்லோரையும் அதிக்ரமித்து நிற்கிறீர். காதலராயும் அழகே உருவெடுத்தவராயும் ப்ரியராயும் ஒளிமயராயும் இதயத்தில் விளங்குகிறீர். எல்லா உலகத்தவர்களும் உங்களுக்கு ஹவ்யங்களைக் கொண்டு வருகின்றனர். பேரானந்தத்தை நன்மனதிற்குப் பயக்கவும். வளர்க்கப்பட்ட நீர் புவர்லோகமான ப்ராணசக்தியை அறிந்தவராய் ஒளிமயரதமாய் விளங்கி தேவர்களை ஹவ்யங்களை ஏற்க அழைத்துவாரீர்.

**குமாரம் மாதா என்று துவங்கும் இரண்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

அந்த இளைஞியான அன்னை குமரனை தனக்குள் தரிக்கிறாள். தந்தைக்கு அளிக்க மறுக்கிறாள். இருப்பினும் அவனின் பொலிவால் அவன் குறைவற்று சக்திவாய்ந்து விளங்குகிறான்.

அவனை மக்கள் மேல்நோக்கிய ஸாதனைகளுக்காக தங்கள்முன் காண்கின்றனர். இளஞியே! யார் அக்குழந்தை? யாரை நீ தரித்தாய்? வெகுகாலம் உனது கர்பத்தில் இருந்த அக்குமரன் வளர்ந்தான். அவன் வெளிப்பட்டதையும் பிறந்ததையும் நான் கண்டேன். தங்கமயமான தந்தம்கொண்ட அக்குமரன் போருக்காக ஆயுதங்களை உருவாக்குவதைக் கண்டுகொண்டேன். அவனுக்கு அம்ருதத்தை அளித்தேன். இனி என்னை இந்திரனையும் மந்திரத்தையும் கொள்ளாத திருடர்கள் என்ன செய்துவிடமுடியும்? அப்பிறந்த காளை பலஅழகிய உருவங்களில் சஞ்சரிப்பதை நான் கண்டுகொண்டேன். பிறந்துவிட்ட அவனை யாருமே ஹிம்ஸிக்க முடியாது. அவ்வரசனான குமாரன் எல்லா உயிரினங்களுக் குள்ளேயும் உள்ளான். எல்லாம் அவனுக்குள்ளேயும் உள்ளன. அவன் மர்த்யர்களுள் உள்ள அம்ருதன். பசு கட்டுப்பட்டிருக்கையில் அதன் பாசத்திலிருந்து விடுபடுத்தும் பதி நீயேயாம் . நீ எங்களது பாசங்களை நீக்க இங்கு வாரீர். குழந்தாய்! நீ என்னை விட்டுச் செல்லாதே. இந்திரனே உன்னை அறிந்துதான் ஞானியானார். ஆதலால் நான் உன்னை அடைந்துள்ளேன். குழந்தாய்! உனது கூர்மையான கொம்புகள் தீயசக்திகளைக் குத்தி எரிய உள்ளன. உன் உண்மைஒளியால் நீ மாயைகளை விலக்குபவனாய் விளங்குகிறாய். மனதால் ஒளிமயமான உண்மையுணர்வுடன் தூயஸாதனைகொண்ட உனக்கு இம்மந்திரங்கள் ரதம்போல் விளங்கட்டும். தேவலோகஜலங்களை நாங்கள் அடைவோமாக. உமது ஒளி அஸுரர்களைப் பொசுக்க இருக்கட்டும். உறுதியான கழுத்தைக்கொண்ட காளை எங்கள் இதயத்தில் வளருகிறது. அது மனிதர்களின் சாந்திக்காக செயல்புரிகிறது. அதை அழிக்கமுடியாது. அது ஞானச்செல்வத்தை நம்மை நோக்கச்செய்கிறது.

விளக்கம்: காலைவேளையில் அக்னிவளர்ச்சிக்காகத் துதிபாடும் மந்திரங்கள் இவை. காலைவேளை என்பது தெய்வப் பிரக்ஞையாகும். பூலோகம் என்பது உடலையும், ஸுவர்லோகம் என்பது மனதையும் குறிக்கும். எப்போதும் ஜடசரீரத்தையே நோக்கியதாய் அதன் ஸுகத்தையே நாடுவதாய் இச்சைத்தீ இருந்து வருகிறது. அது ஜடசரீரத்தின் வசத்தில் இருக்கையில் அதை ஜடசரீரமாகிய அன்னை தெய்வீகசைதன்யசக்திகளைக் கொண்ட

தந்தையான ஸுவர்லோகத்திற்கு தர மறுத்து தன் கர்பத்திலிருந்து வெளிவிடாமல் அடக்கியிருக்கிறது. ஆனால் அக்னியோ தனது வேகத்தால் தனது தந்தையைக்காண இப்புவியிலிருந்து எப்படியோ வெளிப்பட்டது. வெளிவர முயற்சிக்கும் தன்னை அடக்கும் பூலோகத்தை தன் சக்தியால் தாக்கி அடக்கி பூலோகத்தை பேதித்து இச்சைத்தீ சுடர்விட்டு அடக்கமுடியாமல் வெளிக்கிளம்பியது. இந்த இச்சைத்தீ இப்போது சைதன்யசக்திவாய்ந்த ஸுவர்லோகத்தை நோக்கி பூலோகத்திலிருந்து கிளம்பியது. இப்படிக் கிளம்புகை யிலேயே பூலோகத்திலுள்ள அஸுரசக்திகள் அதை அடக்க எண்ண அவர்களை பொசுக்கி சாம்பலாக்கியது. அவர்களையும் மாய்த்துக் கொண்டும், உதறிக்கொண்டும், கிளம்பும் அத்தீ புவர்லோகமாகிற ப்ராணசக்தி முழுவதுமாய் வ்யாபித்து அந்த இச்சைத்தீ ஸுவர்லோகத்தை நோக்கி எழும்பியது. வீருகொண்டு அச்சமின்றி அஸுரர்களைப் பொசுக்கிக்கொண்டு அதிவேகமாய் ஸுவர்லோகம் வீரை சுடர்விட்டு எழுந்து ஸுவர்லோகம் முழுமையாய் வ்யாபிக்கத் துவங்கியது. ஸுவர்லோகத்திலுள்ள தேவதையான விவேகசக்தி யாயும், தெய்வப்பிரக்ஞையாயும் விளங்கும் தக்ஷிணா என்று பெயர் கொண்ட உஷாதேவதையாகிய தெய்வீக அன்னை தன்னை நோக்கி ஓடிவரும் இக்குழந்தையை ஆனந்தத்துடன் வரவேற்று அணைத்து ஆசீர்வதிக்கிறாள். இவ்வக்னி ஒருகுதிரை. குதிரை என்பது ப்ராணவேகத்தைக் குறிக்கும். இக்குதிரை பூலோகத்திலிருந்து ஸுவர்லோகத்திற்கு அதிவேகமாய் தாவுகிறது. தனது இரு பாதங்களை உயர்த்தி சைதன்யகிரணங்களின் கூட்டான ஸூர்யமண்டலத்தில் வைக்கிறது. அப்படி தன்னை எதிர்நோக்கி ஓடிவரும் குழந்தையை தெய்வீக அன்னை உஷை அன்போடு வாத்ஸல்யம் நிறைந்தகண்களால் கண்டு அழைக்கிறாள். இந்தத்தீ ஒரு காளை. காளை தருமத்தைக் குறிக்கும். இது தங்கக் கொம்புகள் கொண்டுள்ளது. இதுதான் சைவாகமங்களில் அதிகாரநந்தியாக ஈசன்முன் அமர்ந்திருக்கிறது. இதைக்கொண்டே நாம் ஈசனைக் காணவேண்டும் என்பது சைவாகமங்களின் கூற்று. இக்காளையே ஈசனை ஏந்திக்கொண்டு வருகிறது. இக்காளை மஹர்லோகத்தின் ப்ரதீகமாக இதயத்திலேயே அமர்ந்துள்ளது.

தன் தங்கக் கொம்புகளால் தீயசக்திகளைக் குத்திக்

கொல்லுகிறது. ஜீவன் மாயாபந்தத்தில் சிறைப்பட்ட பசு. அவனை விடுபடச்செய்யும் விவேகவொளியாக அக்னி இருக்கிறார் என்பதை வேதம் விளக்குகிறது. இப்படி பசுவை பாசத்திலிருந்து விடுபடுத்தி ஈசனிடம் கொண்டுசெல்லும் குருவாக இருப்பது அக்னியே. இக்கருத்தே சைவஸித்தாந்தத்தில் பாசுபதக் கொள்கையாக உள்ளது.

### த்வமக்னே எனத்துவங்கும் மூன்றாம் ஸூக்தமந்திரங்கள்:

அக்னியே! நீர் தூய்மையான வருணன். நீரே அன்பான மித்திரன். நீரே ஸகல தேவர்களும். நீர் ஆத்மஸமர்ப்பணம் செய்பவர்களுக்கு மனச்சக்தியான இந்திரன். ரகசியமான ஸூர்யகிரணங்களை தரிக்கையிலே நீர் செயலின் செல்வனான அர்யமன். மருத்துக்கள் என்கிற சிந்தனாசக்திகள் உங்களின் ஜன்மஸ்தானத்தை ஒளிமயமாக்குகின்றன. நீர் ஸூர்யனின் சைதன்ய கிரணங்களை ஸ்தாபிக்கப்பட்ட விஷ்ணுவின் ஸ்தானமான பரமபதத்தால் காக்கிறீர். தீயே! போரிலே எங்களை மரணவலையில் சிக்கியுள்ள மானுடத்தை வெல்லும்படியும் மரணமற்ற தெய்வீகத்தைப் பெறும்படியும் செய்யுங்கள். செல்வங்களின் சந்திப்பில் சஞ்சரிக்கும் தீயே உம்மை புராதன ரிஷிகள் தேவர்களை சென்றடையும் தூதனாகக் கண்டறிந்தனர். கண்டப் பிரக்ஞைக்குட் பட்ட மதிமழுங்கிய தீயோர்களை நீர் இருளில் தள்ளி உம்மை ஆச்ரயிப்பவனை தீமையிலிருந்து வெளிப்படுத்துகிறீர். எங்கள் யாத்திரைகளாகிய ஸாதனைகள் அக்னியை நோக்கியுள. அவரை நாங்கள் ஏமாற்றமாட்டோம். அவரும் எங்களை தீயசக்திகளுக்கு ஆட்படுத்தமாட்டார்.

### த்வமக்னே வஸூபதிம் எனத் துவங்கும் நான்காம் ஸூக்த மந்திரங்கள்:

அக்னியே! செல்வங்களின் தேவனே! யக்ஞங்களில் நான் உம்மை நோக்கியுள்ளேன். மரணசக்திகளை நாங்கள் வென்று தங்கள் அருளால் தெய்வீகசெல்வங்களைப் பெறுவோமாக. ஹவ்யங்களை தரிக்கிற அழியாத அக்னியே எமது பரமபிதா. எங்கும் ஒளியால் வ்யாபித்தவர். ஸூக்ஷ்மதரிசி. க்ருஹபதியான

அக்னியின் பொருட்டு உமது சக்திகளைத் திரட்ட ஓங்கச் செய். ப்ராணிகளின் ஸூக்ஷ்மங்களைக் காண்பவராயும் ப்ராணிகளின் தலைவராயும் தூய்மையானவராயும் தூய்மைப்படுத்துபவராயும் உள்ளார் அக்னி. ஸர்வக்ஞராயும் ஸர்வஸாக்ஷியாயும் வரங்களை அளிப்பவராயும் இதயத்தின் புரோஹிதராயும் இருப்பவர் அவர். தெய்வீகத்ருஷ்டியோடு ஒன்றான நீர் ஸூர்யனின் சைதன்ய கிரணங்களால் ஸாதனைகளைச் செய்து தேவதைகளை எமது யக்ஞத்திற்கு அழைத்து வாரீர். எங்கள் வீடுவரை வந்து நிற்கும் தெய்வீக அதிதியே! ஞானஸ்வரூபியே! யக்ஞத்திற்கு வாரீர். தீயசக்திகள் எங்களுக்கு ஆசைகாட்டி மோசம்செய்ய முயற்சிக்கையில் அவைகளை நாசமாக்கி எங்களை மூன்று ஸ்தானங்களிலும் காத்தருள்வீராக. உங்களை மந்திரங்களாலும் ஹவ்யங்ளாலும் வலுப்படுத்துகையிலே நீர் எமக்கு வரங்களை அளித்து ஆசீர்வதிக்கிறீர். தேவர்களை இலக்கிற்கழைத்துச் செல்கிறீர். மூவுலகங்களிலும் ஜ்வலிப்பவரே! எங்கள் இதயத்தை யக்ஞத்துடன் சேர்த்துவைக்கவும். நாங்கள் தெய்வீகஸாதனைகளை தவறற்று தூய்மையாய் செய்யும்படி ஆசீர்வதிக்கவும். எங்களுக்குள் எழுந்தருளி கடலில் செல்லும் கப்பல் நல்லபடி கடலைக் கடப்பது போல் எம்மை ஸாதனையாகிய யாத்திரையில் உள்ள கஷ்டங்களைக் கடக்கச் செய்யுங்கள். தெய்வீகஸாதனைபுரிகிற இதயத்தால் தெய்வமான உம்மை மனிதனான நான் த்யானிக்கிறேன். எமது ஸாதனைகளின் விளைவுகள் லோகக்ஷேமம். ஆதலால் நாங்கள் அவைகளால் அம்ருதத்தைப்பருகுவோமாக. எந்த நற்செயல் செய்தவனுக்காக நீர் தேவஸாம்ராஜ்ஜியத்தை அருளுகிறீரோ அவன் நற்பயன்களும் ப்ராணசக்திகளும் உயர்ந்த ஆன்மீகச் செல்வங்களும் கொண்டு விளங்குவான்.

**ஸுஸமித்தாய ஸோசிஷே என்று துவங்கும் ஐந்தாம் ஸூக்தத்தின் மந்திரங்கள்:**

தெளிவான சிந்தையொளி ஜாதவேதஸரான மிளிரும் அக்னிக்காக. யக்ஞத்தை வேகப்படுத்தும் தேவசக்திகளை வெளிப்டுத்தும் ஸோமரஸத்தை ஏந்தி வரும் தேவன் இவர். ஸுகமான ரதத்தில் ப்ரியனான இந்திரனை இங்கு கொண்டு வாரீர்.

ம்ருதுவாயும் உறுதியாயும் எங்கும் வ்யாபியுங்கள்.

உம்மை நோக்கி அகண்டஜோதிக்காக நாங்கள் மந்திரங்களை ஒளிமயமாக்குகிறோம். செல்வங்களைப் பெற ஒளிமயமாகுங்கள். புகழ்பெற்ற புராதனமான தேவனுக்கு நான் புகழ் பாடுகிறேன். ஆனந்தமளிப்பவர். யக்ஞத்தின் சக்தியால் ஸர்வோத்தமமான ஸ்வர்கத்தை ஸ்தாபியுங்கள். பித்ருக்கள் மனிதர் களாயிருப்பினும் அழியாத ஸ்தானங்களை ஸ்வர்கத்திலே பெற்றுள்ளனர். எங்கள் ஸ்தோத்திரத்தை கேட்டு பாவிகளிடமிருந்து எங்களைக் காத்தருளுங்கள். எங்கள் நண்பர்களையும் ஆசீர்வதியுங்கள். யக்ஞத்தைப் பூர்த்தி செய்யவும். எங்களுக்கு வழியைக் காட்டியருளவும். தேவஸாம்ராஜ்ஜியத்தின் த்வாரங்களே! திறந்துவிடுங்கள். விவேகத்தைக்காத்தருள என் முன்னே மனுஷ்யப்ரக்ஞையான நிசாதேவியும் தெய்வப்பிரக்ஞையான உஷாதேவியும் விளங்குகின்றனர். ஆனந்தத்தின் பிறப்பிடமான அனுபூதி தேவதைகளான தெய்வீக த்ருஷ்டியும் தெய்வீகஸ்ருதியும் என் முன் விளங்கட்டும். ஸூக்ஷ்மமந்திரங்களை அறிந்த ஆனந்தத்தின் அதிதேவதையான தெய்வீக வனஸ்பதியே! நீங்கள் ரகசிய மந்திரங்களை அறிந்தவர். எமது யக்ஞத்தில் அளிக்கப்படும் ஹவ்யங்களை அங்கு கொண்டு செல்லவும்.

அக்னியின் சரிதம் இங்கு விவரமாகக் கூறப்படுகிறது. இது புவிக்குப்பிறந்ததும் ஜலத்திற்குப் பிறந்ததும் ஒரு அவதாரம் போன்றதேயன்றி பிறப்பாகாது. உண்மையில் அதன் வாஸஸ்தானம் அகண்டசைதன்யமான ஸச்சிதானந்தக் கடவுள். அக்கடவுளின் இதயம் அதன் வீடு. அகண்டசைதன்யத்தில் ஒடுங்கிக்கிடந்த இவ்வக்னி திடீரென்று உந்துதலாக சங்கற்பவடிவில் க்ரது என்ற பெயரில் எழுந்தது. அதை அடிப்படையாகக் கொண்டே அகண்ட ஸச்சிதானந்தக்கடவுள் இப்பிரபஞ்சத்தை உருவாக்கினார். இப்பிரபஞ்சத்தை தரித்திருப்பதும் காப்பதும் கடவுளின் சங்கல்ப மாகிய அக்னியே. இப்படி பூமியை தரித்து நிற்கும் அக்னியை ஒருவராஹமாய் புராணமும் ப்ராம்ஹணமும் உருவகப்படுத்துகிறது. அதுவே விஷ்ணுவின் வராஹாவதாரம்.

இவ்வக்னி தங்கக்கொம்புகொண்ட காளையாகவும் ஸூர்யலோகத்திற்குப் பாயும் குதிரையாகவும் இப்புவியிலிருந்து

வெளிப்பட்டக் குழந்தையாயும் ஜலங்களிலிருந்தும் மூலிகைகளிலிருந்தும் வெளிப்பட்ட குமரனாயும் அஸுரர்களோடு யுத்தம் செய்யும் வீரனாயும் ஜீவர்களின் உள் குடிகொண்ட குழந்தையாயும் ஸூக்ஷ்மதரிசிகளால் வளர்க்கப்படும் குமரனாயும் யாத்திரையில் வழிகாட்டும் ஒளியாயும் மனச்சக்தியான தேவயுகத்தின் காதலராயும் தேவயுகத்தின் நாயகராயும் இந்திரனின் ஆயுதமான வஜ்ராயுதமாயும் ஸுவர்லோகத்தின் ஸூர்யனாயும் வழியாயும் வாழ்வாயும் முடிவாயும் பலனாயும் எல்லாமாயும் உள்ளது.

**ருதேன ருதம் எனத்துவங்கும் அறுபத்தி இரண்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

மித்திரனுக்கும் வருணனுக்கும் ஸ்தோத்திரம். நீங்கள் ஜோதியையும் ஜகத்தையும் தங்கள் ப்ராணசக்திகளால் தரிக்கிறீர்கள். பசுக்களையும் க்ஷீரத்தையும் அதிகரிக்கிறீர்கள். ஓஷதிகளை வளர்க்கிறீர்கள், மழையை வர்ஷிக்கிறீர்கள். தங்கள் குதிரைகள் நன்கு தூண்டப்பட்டு உங்களை எங்களிடம் அழைத்து வரட்டும். தங்கள் ராஜ்ஜியம் ஸ்வர்கத்திலே ஜ்வலிக்கின்றது. ஆயிரம் தூண்கள் கொண்டது. ஹிரண்மயமானது. அந்த ராஜ்ஜியத்திலே உள்ள க்ஷேமத்தை ஸாதகர்கள் அடைய நீங்கள் அதை தரியுங்கள். மித்திரனே! வருணனே! தங்கள் ரக்ஷிப்பு மிகவும் ஸ்திரமானது. தவறற்து. எங்களுக்கு உதவி செய்யுங்கள். வெற்றியும் சாந்தியையும் வெற்றியையும் எங்களுக்கு தாரீர்.

**ருதஸ்ய கோபா எனத்துவங்கும் அறுபத்தி மூன்றாம் ஸூக்த மந்திரங்கள்:**

நீதிரக்ஷகர்களே! தருமத்தை ஸத்தியமாய் கொண்டவர்களே நீங்கள் ரதத்தை ஸ்வர்கத்தின் உச்சியிலே இதயகுஹையிலே செலுத்துகிறீர்கள். உங்களால் ஆசீர்வதிக்கப்பட்டவன் சாந்தி பெறுகிறான்.அவனுக்கு மதுரமாய் வர்ஷியுங்கள். அரசர்களே! இவ்வுலகை ஆள்பவர்களே! நீங்கள் ஜோதியைக் கண்டறிந்தவர்கள். மழைக்காகவும் தனத்திற்காகவும் அழியாத்தன்மைக்காகவும் உங்களை வழிபடுகிறோம்.

**வருணம் வோ ரிசாதஸம் எனத்துவங்கும் அறுபத்தி**

## நான்காம் ஸூக்த மந்திரங்கள்:

வருணனே! மித்திரனே! உங்களை இந்த மந்திரங்களால் அழைக்கிறோம். சத்ருஸம்ஹாரகர்களே! உங்களின் நற்ப்ரக்ஞை கொண்ட புஜங்களை உங்களை வழிபடுபவனான என் க்ஷேமத்திற்காக நீட்டுங்கள். நான் மித்திரனின் பாதையில் செல்லுகிறேன். அதனால் இந்த யாத்திரையின் (ஸாதனையின்) இலக்கை அடையக்கடவேன். இவ்வழியே செல்லும் மனுஷர் களை அவர் காக்கிறார். உங்களிடமுள்ளதை நாங்கள் அடைவோம். மித்திரனே! எங்களிடம் வாருங்கள். வருணனே! வாருங்கள். அதனால் உங்களின் நண்பர்களான ஸாதகர்கள் வளர்ச்சி பெறுவார்கள். உஷா உதிக்கும் காலத்தில் ஸூர்யகிரணங்கள் பரவும் காலத்தில் யக்ஞதேவதைகளான நீங்கள் அதிவேகமாய் இங்கு வந்து ஸோமபானம் பண்ணவேண்டும்.

## யஸ்சிகேத எனத்துவங்கும் அறுபத்தி ஐந்தாம் ஸூக்த மந்திரங்கள்:

ஞானம் கொண்ட மனிதன் நற்சங்கற்பம் கொண்டுள்ளான். அவன் நமக்காக தேவர்களுடன் பேசட்டும். வருணனும் மித்திரனும் அந்த மனிதன் பேசுவதால் ஆனந்திக்கிறார்கள். அவர்கள் சிறந்த அரசர்கள். புகழ் பெற்றவர்கள். நல்லோர்களின் தலைவர்கள். அவர்கள் நம்மிடம் தருமத்தையே வளர்க்கட்டும். அந்த தருமமும் அவர்களுடையதே. நான் அறமுள்ள குதிரைகளில் பயணம் பண்ணும் இவ்விருவர்களையும் உதவிநாடி அழைக்கிறேன். நாங்கள் மித்திரனின் ரக்ஷிப்பைப் பெற்றுள்ளோம். வருணன் பிள்ளைகளைப் போல் எங்களை ரக்ஷிக்கிறார். அதனால் நாம் பாபங்களிலிருந்தும் தீங்குகளிலிருந்தும் விடுபடுவோம். தேவர்களே! எங்களை வழி நடத்தவும். நாங்கள் ஞானிகளுடையவர்கள். எங்களை அவமதிக்கவேண்டாம். எங்களை ரக்ஷியுங்கள்.

இவ்வளவு மந்திரங்களும் மித்திரனையும் வருணனையும் போற்றுகின்றன. இருவரும் நீதியின் தெய்வங்கள். தூய்மையும் அன்பும் சேர்ந்தல்லவோ நீதியாகிறது. வருணன் தூய்மை. மித்திரன் அன்பு. எவன் நீதிக்கு அடிபணியவில்லையோ அவனை வருணன்

பாசங்களால் வீழ்த்துகிறார். வருணபாசங்களிலிருந்து தப்பிக்க ஒரே வழி நீதியை அடிபணிவதேயாம். இவ்விருதேவதைகளையும் ஸாதகன் யக்ஞத்தில் வெற்றிக்காக அணுகும் மந்திரங்களை நாம் மேலே கண்டோம். இவ்விருதேவர்களை வழிபட்டதின் பலனாக ஞானோதயத்தைப் பெறுகிறான் மனிதன். அவன் ஞானோதயத்தின் தேவதையான தனது அன்னையை வணங்குகிறான். தான் செல்லும் மார்கத்தை ஆத்மசைதன்யத்தைக் கொண்டுவந்து பரப்பி ஒளிமயமாக்கும்படி ப்ரார்த்திக்கிறான்.

### ப்ரவோ மித்ராய எனத்துவங்கும் அறுபத்தெட்டாம் ஸூக்த மந்திரங்கள்:

மித்திரனையும் வருணனையும் போற்றுங்கள். சக்தி வாய்ந்தவர்கள். அவர்கள் ஆசீர்வதிப்பார்கள். தேவாதிதேவர்கள். மழைகளாலும் ஜலங்களாலும் நீங்கள் ஆசீர்வதிக்கிறீர்கள். வளர்ச்சிபெறுகிறீர்கள். அகண்டமாய் உங்கள் அனுக்ரஹம் விரிந்திருக்கட்டும். உங்கள் ஞானத்தை நாங்கள் கொண்டிருப்போம். நீங்கள் முழுமையான ரக்ஷிப்பை அளிப்பவர்கள்.

### மஹே நோ எனத்துவங்கும் எழுபத்தி ஒன்பதாம் ஸூக்த மந்திரங்கள்:

ஒளிமயஉஷையே! (தெய்வீக உதயமே!) இங்கு வந்து எங்களை எழுப்புங்கள். குதிரைகளுக்காக (ப்ராணசக்திகளுக்காக) போற்றப்படுபவள் நீங்கள். உங்களை வழிபடும் ஞானிகளை நீங்கள் அனுக்ரஹியுங்கள். அவர்கள் உங்களுக்கு அன்பளிப்புகளை ஸமர்ப்பிக்கிறார்கள். அவர்களை ஆனந்தியுங்கள். உஷையே! உயர்ந்த புகழைக்கொண்டு வாருங்கள். எங்களுக்கு தெய்வீகச் செல்வங்களை எடுத்து வாருங்கள். ஒளிவாய்ந்த ஸூர்யகிரணங் களை எடுத்துவரவும்.

### த்யுதத்யாமானம் எனத்துவங்கும் எண்பதாம் ஸூக்த மந்திரங்கள்:

ஜோதியைக் கொண்டுவரும் உஷா ரிஷிகளால் வணங்கப் படுகிறாள். மனிதர்களை எழுப்புகிறாள். பாதையை ஒளிமயமாக்குகி றாள். முன்பே செல்கிறாள். அவளின் ரதம் மிகவும் ஸ்திரமானது.

சந்தோஷத்திற்கான வழியை படைத்துள்ளாள். வரத்தை அளிக்கிறாள். அவள் சரியான பாதைகளிலேயே செல்பவள். மிகவும் ஒளிமயமாயுள்ளாள் அவள். இருளையும் தீயோர்களையும் விரட்டி விடுகிறாள். தேவர்களைச் சந்திக்கச் செல்லுகிறாள். ஒளியைக் கொண்டுவருகிறாள்.

**யுஞ்ஜதே என்று துவங்கும் எண்பத்தி ஒன்றாம் ஸூக்தத்தின் துவக்கம்:**

ஞானிகள் அவர்களின் மனதையும் எண்ணங்களையும் ஞானியான ஸூர்யனுக்காக தூண்டுகிறார்கள். விச்வரூபங்களைத் தனக்குள் கொண்ட இந்த தேவன் இருகால் நான்குகால் ஜீவிகளுக்கும் க்ஷேமத்தைப் பயக்குகிறார். தேவச்ரேஷ்டரான அவர் ஸ்வர்கங்களை ஒளிமயமாக்கி உஷை வருகையில் ஜ்வலிக்கிறார். எவர் ப்ரயாணம் செய்கையில் மற்ற எல்லா தேவர்களும் மகிமை படுத்தப்பட்டனரோ அவர் தன் சக்திகளால் புவியையே அளந்தவர். நீங்கள் ஸ்ருஷ்டிக்கும் புஷ்டிக்கும் தேவன். நீதிஸ்தாபகர்.

**தத்ஸவிதுர்வ்ருணீமஹே எனத்துவங்கும் எண்பத்தி இரண்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

ஸூர்யனின் ச்ரேஷ்டமான ஆனந்தத்தை நாங்கள் த்யானத்தால் அடைகிறோம். அவரே அளிப்பவர்களுக்கு ஆனந்தமளிப்பவர். அவ்வானந்தத்தை நாங்கள் ப்ரார்த்திக்கிறோம். இன்று நற்பயன் கொண்டசெல்வத்தை எமக்கு அருள்வீர். எமது தீமையை நீக்கவும். நாங்கள் தங்கள் ஆனந்தத்தை ஆழ்ந்து த்யானிப்போம். ப்ரபஞ்சத்தின் ஆண்டவரான அறத்தின் நாயகரான உம்மை மந்திரத்தால் தரிக்கிறோம். ஸத்தியத்தைப் பயக்குபவர் நீர். மனுஷ்யப்ரக்ஞைக்கும் தெய்வப்ரக்ஞைக்கும் முன்பு ஸாக்ஷியாக சஞ்சரிக்கும் நீர் தனது ஸ்வரூபத்தில் ப்ரதிஷ்டையானவர்.

முடிவுரை: அக்னி எவருடைய ஸங்கல்பமோ அந்த ஆதிகவியே அதாவது ஆதிமூலமான ஸூக்ஷ்மதரிசியான பரமாத்மாவே ஸூர்யன். இவரே தேவயுகத்தில் உலகம் முழுதும் இருந்த நிரந்தர இலக்கு.

இவர்தான் எகிப்தியர்களின் ரா என்றகடவுளாகவும்,

கிரேக்கர்களின் அனுபூதிஸ்வரூபரான அப்போலோ என்ற கடவுளாகவும், ஜந்தாவஸ்தாவின் அஹுர்மஜ்தாவாகவும் வணங்கப்படுபவர். இவர் பூர்வகாலத்து ஜரதுஷ்ட்ரர்களாலும் வணங்கப்பட்டவர். இவரின் ஸங்கல்பமாக வேதத்தில் எந்த அக்னி சொல்லப்பட்டதோ அது ஜரதுஷ்ட்ரமதத்தின் ப்ரகாரம் கடவுளின் மைந்தன். கடவுளின் குழந்தையாகிய இவ்வக்னியே யூதமதத்தில் இருப்பாய் இருந்து மோசெஸிற்கு நீதிகளை உபதேசித்த ஜிஹோவா என்றக் கடவுளாக வழிபடப்படுகின்றார். மித்திரன் மித்திரனென்ற பெயரிலேயே ஜரதுஷ்ட்ரமதத்தில் போற்றப்படுகிறார். வருணன் க்ரேக்கர்களின் யுரேனஸாகவும் நெப்ட்யூனாகவும் உள்ளார்.

ஸூர்யன் ப்ரபஞ்சம்முழுவதும் வ்யாபித்த ஒரே ஆத்மா. அதுவே உன்னுடையவும் என்னுடையவும் மற்ற எல்லாருடையவும் அந்தர்யாமியாக உள்ளது. கடந்தும் உள்ளுமாயும் உள்ளது. இவ்வெல்லாவற்றிற்கும் அப்பாலாயும், இவ்வெல்லாமாயும் உள்ளது. இவ்வாத்மா ஒரு மதசார்பற்றக் கடவுள். இதுவே உபநிடதங்களில் ப்ரும்ஹஸ்வரூபமாயும், ப்ராம்ஹணத்தில் நாரர்யணனாயும், புராணங்களில் க்ருஷ்ணனாயும் போற்றப்படுகிறது.

இதை நாம் நமது இதயத்தில் கர்பமாய் தரித்திருக்கிறோம். ஒரன்னை தன் கருவிலுள்ள குழந்தையை கவனத்துடன் வளர்ப்பதுபோல் இந்த பரமாத்மசைதன்யத்தை இதயத்தில் மிளிரும் ஆத்மஸ்வரூபத்தை ஸ்ரத்தையுடன் பார்த்துக்கொள்ளவேண்டும். இதயத்தில் ஒரு ஸூர்யமண்டலம் உண்டு. அது ஸாதனையால் வளருகிறது. அதுவே தேவர்களின் இருப்பிடம். தான் கொண்ட தேவர்களால் மனிதர்களை வளர்ச்சிபெறச் செய்கிறது. அது ஸாதகனின் மனம் முழுவதையும் ஒளியால் நிரப்புகிறது. அதை ஸாதகன் அறிந்தால் வாழ்வின் தாத்பரியம் நிறைவேறுகிறது. கேள்விகள் அறுந்துவிடுகின்றன். பூர்ணத்துவம் பெறப்படுகிறது.

*எண்ணிய முடிதல் வேண்டும்*
*நல்லவே யெண்ணல் வேண்டும்*
*திண்ணிய நெஞ்சம் வேண்டும்*
*தெளிந்தநல் லறிவு வேண்டும்*

–பாரதி

*திருவளர் வாழ்க்கை, கீர்த்தி , தீரம், நல்லறிவு, வீரம்*

*மருவுபல் கலையின் சோதி, வல்லமை யென்ப வெல்லாம்*
*வருவது ஞானத் தாலே வையக முழுது மெங்கள்*
*பெருமைதா னிலவி நிற்கப் பிறந்தது ஞாநபாநு.* - பாரதி

பரத்வாஜர் -

**இனி ஆறாம்மண்டலத்து மந்திரங்களின் ஆரம்பம். அஹஸ்ச க்ருஷ்ணம் எனத்துவங்கும் ஒன்பதாம் ஸூக்த மந்திரங்கள்:**

*ஆதிபரம்பொருளாகிய ஜோதி*
*அகண்ட பூரணானந்த ஜோதி*
*நிர்மலரூப நீல ஜோதி*
*நித்யானந்த மருளும் ஜோதி*
- எந்தையார்

பிரபஞ்சத்தின் நாயகரான அக்னி இருளை அகற்றியுள்ளார். யக்ஞத்தை எல்லோருக்கும் முன்பேயே செய்த ஹோதாவை ஆஸ்ரயுங்கள். மரிப்பவர்களுள் அவரே அமரஒளி. அவர் பிறந்து நமக்குள் ஸ்திரமாயிருப்பவர். காண்பதற்காக மனுஷ்யர்களுக்கு ஒரு ஒளி ஸ்தாபிக்கப் பட்டுள்ளது. எல்லா தேவர்களும் (இந்திரியங்களும்) ஒரே எண்ணத்துடன் ஒரே இலக்குடன் ஒரே இடத்திற்குச் செல்லு கிறார்கள், என் காதுகள் ஒருமுகப்படுகின்றன, கண்களும் அப்படியே. எனக்குள் உள்ள ஒளி பொலிவுடன் துலங்குகிறது. நான் என்ன கூறுவேன்? என்ன எண்ணுவேன்? எல்லா தேவர்களும் உங்களிடம். அக்னியே! நீங்கள் இருளிலும் ஒளிமயமாயுள்ளீர். எங்களை ஆசீர்வதியுங்கள்.

இந்தஸூக்தம் அந்தர்யாமியான பரமாத்மசைதன்யத்தைப் போற்றுகிறது. பரமாத்மசைதன்யமான அகண்டத்திலே ஸகல இந்திரியங்களும் இந்திரியாபிமானிதேவதைகளும் ஒடுங்கி சைதன்ய ஸ்வரூபமாய் அவ்வக்னி ஏகமாய் மிளிர்கிறது.

ஹவிர்பாகத்தாலும் மந்திரங்களாலும் வளர்க்கப்படும் அக்னி அஸூரர்களை த்வம்ஸம் பண்ணட்டும்.

பித்ருக்களுக்கும் பிதாவான அக்னி எல்லா அக்ஞானத்தையும் போக்கி வேதஞானத்தை அருளட்டும்.

எல்லா உண்மை அறிவுக்கும் அவரே ஆதாரம். ஜோதிர்மயமான ஜாதவேதஸனே! ஸர்வஸாக்ஷியே! எங்களுக்கு பக்தி ச்ரத்தையை அருள்வீர். வீரத்தின் புதல்வனே! ஸுந்தரனே! உங்களை வழிபடும் நாங்கள் ஹவிர்பாகம் அளிக்கிறோம். ஹிரண்ய ஜ்வாலையைக்கொண்ட அக்னியே! வாஸஸ்தானங்களை நாடி உங்களிடம் வந்துள்ளோம். கூர்மையான கொம்புகொண்ட காளைகள்போல் நீங்கள் கூர்மையான அம்புகளால் அஸுரர்களை வதைக்கிறீர்கள். நீங்கள் அதிவேகமாய் வருவதற்காக குதிரைகளைத் தூண்டுகிறீர்கள். இங்கு வந்து உங்களை எங்களுக்கு முழுமையாய் காட்டுவீர். மற்ற தேவர்களையும் ஸோமபானம் பண்ண அழைத்துவாரீர். பிரபஞ்சத்தை இயக்கிவைப்பவபரே! ஜகத்தை ஜோதியாக்குங்கள்.

### ஆகாவோ அக்மன் எனத்துவங்கும் இருபத்தெட்டாம் ஸூக்த மந்திரங்கள்:

பசுக்கள் வந்துள்ளன. மங்களத்தைக் கொண்டுவந்துள்ளன. அவை இங்கு வசித்து சந்தோஷமாயிருக்கட்டும். இந்திரனுக்கு க்ஷீரத்தை சுரக்கட்டும். இப்பசுக்கள் தொலைவதில்லை. எந்தத் திருடனும் இவைகளுக்கு தீங்கு விளைவிப்பதில்லை. எந்த துஷ்டனும் இவைகளை தவறான பாதைகளில் அழைத்துச் செல்லுவதில்லை.

பசுக்களே பகன். பசுக்களே இந்திரன். பசுக்களே ஸோமனுக்கான அன்பளிப்பு. நான் என் இதயத்தால் எவரை நாடுகிறேனோ அந்த என் சகோதரன் இந்திரன் பசுக்களாவார். பசுக்களே! புஷ்டியற்றதைப் புஷ்டிபடுத்தி அழகற்றதை அழகுபடுத்துவீர்கள். என் க்ருஹத்தை விளங்கச் செய்யுங்கள், பரிசுத்த நீரைப் பருகுங்கள். நீங்கள் திருடர்களால் திருடப்படக் கூடாது. இந்திரனே! இப்பசுக்களுக்கு மங்களமளியுங்கள்,

விளக்கம்: வேதத்தில் பலவிடங்களில் பசுக்கள் இதயத்தின் ஸூக்ஷ்மசக்திகளின் உருவகமாகவே உள்ளன. தீயசக்திகளை அழிக்கும் மனோபலமாகிய இந்திரனே அவைகளின் தலைவன்.

அவைகளை இந்திரனே தீயசக்திகளானத் திருடர்களிடம் பிடிபடவிடாமல் காக்கிறார்.

**இந்த்ரம் வோ நர: எனத்துவங்கும் இருபத்தொன்பதாம் ஸூக்தம் துவங்கி நாற்பத்தி ஆறாம் ஸூக்தம் வரையுள்ள இந்திரஸ்துதியான மந்திரங்களின் ஸாராம்சம்:**

ஸோமரஸம் பருகுகையில் இளங்காளையான இந்திரனைப் புகழுங்கள். ஸர்வவ்யாபியான அவரே நமக்கு அவரின் சக்தியால் பசுக்களையும் க்ஷீரத்தையும் அளிப்பார். இந்தத் துதிபாடல்கள் அஸுரஸம்ஹாரகரான செல்வங்களின் தலைவரான உங்களை வந்து சேரட்டும். கோபதிகளுக்கு நீங்கள் காளையாக உள்ளீர். உங்களின் சந்தோஷத்திற்காக அளிக்கப்பட்ட ஸோமத்தைப் பருகுங்கள்.

குதிரைவீரர்கள் போர் களத்திலே உதவிக்காக உங்களை அழைக்கிறார்கள். வஜ்ரபாணியே! வீரனே! ஆச்ரயிக்கத்தக்கவரே! குதிரைகளையும்(பலத்தையும்) பசுக்களையும்(ஞானரச்மியையும்) எங்கள் மேல் வர்ஷியுங்கள். நாங்கள் சத்ருஸம்ஹாரகனை அழைக்கிறோம். உங்களின் சக்திகளால் எங்களை ரக்ஷியுங்கள். இந்திரனே! என்ன என்ன மனிதசக்திகள் உண்டோ அவை யாவுமே எங்களுக்குத் தாரீர். நாங்கள் தீயோர்களை வெல்லுவோம்.

எவரை நாம் ஆச்ரயித்துள்ளோமோ அந்த ரக்ஷகரான இந்திரன் எங்களுக்கு க்ஷேமத்தை அளிப்பார். சத்ருக்களிடமிருந்து ரக்ஷிப்பையளிப்பார். நாங்கள் வீரசக்தியைக் கொண்டிருக்க வேண்டும். நாங்கள் எப்போதுமே அவர் அருள் பெற்றிருக்க வேண்டும். எங்கள் மந்திரங்கள் இந்திரனை அடையட்டும். சத்ருக்கள் எங்களை விட்டு ஓடட்டும். ஸோமமும் க்ஷீரமும் அந்த வஜ்ரபாணியான உங்களுக்கே.

**யக்ஞாயக்ஞா வோ அக்னயே எனத்துவங்கும் நாற்பத்திஎட்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

விவேகசக்தியைப் பெருவதற்கு ஒவ்வொரு யக்ஞத்திலும் சக்திபுத்திரனான ஜாதவேதஸ அக்னிக்கு ஸ்தோத்திரம். அழியாத அந்த தேவன் நண்பரைப் போன்றவர். அவரைப் போற்றுவோம். அவர் அனுக்கிரஹ மூர்த்தி. தேவர்களிடம் ஹவிர்பாகங்களை

எடுத்துச் செல்பவர் அவரே நமது பலமாயும் ரக்ஷகராயும் உள்ளார். புனிதமாக்குபவரே! இளைஞனே! உங்கள் கிரணங்களுடன் எங்களிடம் சோபியுங்கள். வஸுக்களில் ஒருவரே! ரக்ஷிப்பை அளிப்பீர்கள். தீயோர்களின் தீய எண்ணங்களை தூரத்திலே துரத்தி எங்களையும் எங்கள் ஸந்ததியினரையும் ரக்ஷியுங்கள்.

### ச்னதத் வ்ருத்ரம் எனத்துவங்கும் அறுபதாம் ஸூக்த மந்திரங்கள்:

புராதன காலத்திலிருந்தே எவர்களின் ப்ரபஞ்சஸ்ருஷ்டி ரூபமான காரியங்கள் புகழப்படுகின்றனவோ அப்படிப்பட்ட இந்திரனையும்(மனோபலத்தையும்) அக்னியையும்(விவேகவொளியையும்) அழைக்கிறேன். அவர்கள் எங்களுக்குத் தீங்கிழைக்க வேண்டாம். சத்ருஸம்ஹாரகர்கள். மங்களமானவர்கள். அவர்கள் சத்ருக்களைத் துரத்தட்டும். அவர்கள் சத்ருக்களை வதைத்து எங்களை ஆசீர்வதிக்கட்டும். இந்திரனே! வாருங்கள் அக்னியே வாருங்கள். கணங்களுடன் வாருங்கள். ஸோமனைப் பருகுங்கள். தன்னொளியால் பாபத்தை நீக்கும் அந்த தேவர்களைப் போற்றுங்கள். யக்ஞத்திலே எவன் அக்னியைத் தூண்டி இந்திரனை உபாஸிப்பானோ அவன் வெள்ளத்தைக் கடக்கிறான். பலம் வாய்ந்தக் குதிரைகளைத் தாருங்கள். அவைகளால் நாங்கள் இங்கு தேவர்களை அழைத்துவருவோம். நீங்கள் தனஸம்ருத்தியையும் அன்னஸம்ருத்தியையும் அருள்பவர்கள். நட்புநாடி நண்பர்களான உங்களை அழைக்கிறோம். நீங்கள் இங்கு வந்து ஆனந்தத்தைப் பருகவும்.

### உது வ்ய தேவஸவிதா எனத்துவங்கும் பரமாத்மஸூர்யனைப் பற்றிய எழுபத்திஒன்றாம் ஸூக்த மந்திரங்கள்:

யக்ஞத்தை(ஸாதனையை) ஆசீர்வதிக்க ஸூர்யன் தன் ஹிரண்மயபுஜங்களை நீட்டியுள்ளார். நாம் ஸூர்யதேஜஸால் ஆனந்தமடைகிறோம். அவர் நமக்கு உத்தமதனத்தை அருளட்டும். எல்லா உயிரினங்களையும் எழுப்புபவர். தேவனே! அழியாத உங்கள் சக்தியால் எங்கள் வீட்டை ரக்ஷியுங்கள். எங்களை தார்மிக

பாதையில் வையுங்கள். ஹிரண்மயபுஜங்களுடன் மதுரமான நாக்குடன் நம் நண்பரான ஸூர்யன் வழிபடுபவனுக்கு அன்பளிப்புகளை ஆசீர்வதிப்பார். அவரே ஜோதியையும் ஜகத்தையும் நிர்மாணித்தவர். தேவனே! இன்றைக்கும் நாளைக்கும் ஒவ்வொரு நாளும் எங்களுக்கு தனத்தை அளியுங்கள்.இந்த மந்திரம் தங்கள் அனுக்கிரஹத்தினால் தினமுமே எங்களுக்கு வாழ்வை ஊக்குவிக்கும். நுட்பசக்திகளை அளிக்கட்டும்.

பரமாத்மஸூர்யன் மறைந்து ஒளிகையில் தார்மிகரஸனையாகிய ஹிதமான ரஸமான ஸோமனும் உறுதியான மனவாற்றலான இந்திரனுமே அவரை இதய ஆகாயத்தில் தேடித்தேடி கண்டு பிடித்தனர். தீயசக்திகள் அனுபூதிகளைத் தடுக்க அவைக்ளைக் கொன்று இவர்களே தெய்வீக அனுபூதிமயமான ஜலங்களைப் பிரவஹிக்கச் செய்தனர்.

**இவ்விருவரையும் இந்த்ராஸோமா எனத்துவங்கும் எழுபத்திஇரண்டாம் ஸூக்தம் துதிக்கிறது:**

ஸோமனே! இந்திரனே! உங்கள் வீரம் மஹத்தானது. நீங்கள்தான் முதல் வீரச்செயல்களைச் செய்தவர்கள். நீங்களே முதலில் ஸூர்யனைக் கண்டுபிடித்தவர்கள். ஸ்வர்கவொளியைக் கண்டுபிடித்தவர்கள். இருளை நீக்கி அருளை வர்ஷித்த வள்ளல்கள். பகலை ஒளியுடன் ஆக்கி ஸூர்யனை உதிக்கச் செய்தீர்கள். ஜலத்தை (சிந்தனாசக்திகளை) தொல்லை செய்த வ்ருத்திரனை (தீயசக்தியை) நீங்கள் இருவரும் வதைத்தீர். நீங்களே ஜலங்களைப் ப்ரவஹிக்கச் செய்தீர்கள். வாழ்வாகிற போரில் வெற்றி பெரும்படி இந்திரனே! ஸோமனே! பண்ணுவீர்கள்.

**ஜீமூதஸ்யேவ எனத்துவங்கும் எழுபத்தி ஐந்தாம் ஸூக்தம்:**

மந்திரங்களால் தூண்டப்பட்ட உங்களின் கூர்மையான அம்பு தீயோர்களை ஒழிக்கட்டும். ஒருத்தீயோனும்கூட உயிருடன் வாழவேண்டாம். எங்கு உங்கள் பாணங்கள் வீரக்குமாரர்கள் போலே பாய்ந்து வந்து விழுகின்றனவோ அங்கு அகண்டப்பிரக்ஞையான அதிதியும் ப்ரும்ஹணஸ்பதியும் எங்களைக் காக்கட்டும்.

ஸோமதேவரே! அம்ருதத்துவம் பெற்றவராய் இருங்கள். வருணன் தங்களுக்கு ஏராளமாய் அளிக்கட்டும். உங்கள் வெற்றியில் தேவர்கள் சந்தோஷிக்கட்டும்.

*அறத்தினுங் ஆக்கமும் இல்லை அதனை*
*மறத்தலின் ஊங்கில்லை கேடு.*

– திருவள்ளுவர்.

வஸிஷ்டர் –

*அந்தியந்தணரெதிர்கொள உயர்ந்து*
*செந்தீ செவிவழறொடங்க வந்ததை...*

– கலித்தொகை

**இனி மண்டலம் ஏழு. அக்னிக்கான ஸ்தோத்திரம். உஷோ ந எனத்துவங்கும் பத்தாம் ஸூக்த மந்திரங்கள்:**

அவர் ஹிரண்மயபுருஷர். ஆதித்யனைப்போல் எங்கும் தன் ஒளியைப்பரப்பியுள்ளார். புனிதமானவர். பவித்திரமானவர். எண்ணங்களை ஆனந்திக்கிறவர். உஷையின் காலத்திலே ஸூர்யனைப்போல் ஜ்வலிக்கிறார். மந்திரங்கள் அக்னியைத் துதிக்கின்றன. மஹாஞானியான அவரிடம் க்ஷேமத்தை நாடுகின்றன. தேவனே! வஸுக்களையும் இந்திரனையும் ருத்திரனையும் அதிதியையும் ப்ருஹஸ்பதியையும் இங்கு அழைத்து வாருங்கள்.

**உபஸத்யாய எனத்துவங்கும் பதினைந்தாம் ஸூக்த மந்திரங்கள்:**

நமது நெருங்கிய நண்பரான அக்னியின் முகத்தில் ஹவிர்பாகத்தை ஸமர்ப்பியுங்கள். ஞானஸ்வரூபீ. க்ருஹபதி. ஒவ்வொரு வீட்டிலும் விளங்குகிறார். க்ருஹபதியாயுள்ளார். யக்ஞத்தில் ஜ்வலிக்கும் அவரது செயல்கள் அனந்தமானவை. நமது வழிபாட்டால் ப்ரஸன்னமாகி அவர் க்ஷேமத்தை அளிக்கட்டும். இரவிலும் பகலிலுமாக தங்கள் பொலிவால் நாங்கள் நல்லறம் புரியவேண்டும். இந்திரனே! பூர்புவஸூவர்லோகங்கள் உங்களுடையவை. நீரே உலகம் முழுவதற்கும் தலைவன். நீங்கள் போர்களத்திலே தனத்தை யாவருக்கும் அளிப்பவர். உலகிலுள்ள யாவரும் ரக்ஷிப்பிற்காகத்

தங்களை அழைக்கிறார்கள். இந்திரனே! எந்த உறவினனும் உங்களைக் காட்டிலும் சிறந்த சரண்யனில்லை. எந்தத் தகப்பனும் தங்களைக் காட்டிலும் வாத்ஸல்யத்தால் வர்தனம் பண்ணுபவரல்ல. மஹாஞானியே! உயிர்களின் தேவனே தங்களை வணங்குகிறேன். உங்களையொத்து புவியில் பிறந்தவன் எவனுமில்லை. இருக்கப்போவதுமில்லை. இந்திரனே ஞானத்தை அருளுங்கள். நல்வழிப்படுத்துங்கள். ஸூர்யனைக் காணவையுங்கள்.

**ஆ தேவோ யாது எனத் துவங்கும் நாற்பத்தி ஐந்தாம் ஸூக்த மந்திரங்கள்:**

ஜோதியை (மனதை) பூர்ணப்படுத்தும் ஸூர்யனே! ப்ராணசக்திகளால் தரிக்கப்பட்டு இங்கு வாருங்கள். தேவனின் ஹிரண்மயமான உயர்ந்த புஜங்கள் ஸ்வர்கத்தின் எல்லையை அடைகின்றன. கிரணங்களை எங்கும் எதிலும் பரப்பி எங்களுக்கு அவர் செல்வ ஸம்ருத்தியை ஏற்படுத்தட்டும்.அவர் எங்களுக்கு பலத்தை ஏற்படுத்தட்டும்.

**ஸமுத்ரஜ்யேஷ்டா எனத்துவங்கும் நாற்பத்தி ஒன்பதாம் ஸூக்தமந்திரங்கள்:**

நில்லாமல் ஆழம் வரை ஜலங்கள் அம்ருதமாய் ஓடிக்கொண்டேயிருக்கின்றன. இந்திரனின் அனுப்பப்பட்ட அவை ஸமுத்திரத்தைச் சென்று அடைகின்றன. இப்போது அந்த திவ்யஜலங்கள் காக்கட்டும். ஜோதியிலிருந்து அவை ஓடிவருகின்றன. பவித்திரமானவை. ஸ்வச்சந்தமாய் பாய்கின்றன. ஸமுத்திரத்துடன் கலக்கின்றன. இந்த திவ்யஜலங்கள் என்னைக் காக்கட்டும். இவைகளில் வருணன் ஸான்னித்தியம் கொள்கிறார். அந்த வருணன் மனிதனின் தவறிலிருந்து ஸத்தியத்தைத் தனிப்படுத்திக் காட்டுவார். மிகவும் மதுரமான ஒளிமயமான பவித்திரமான சுத்தமானவைகள் இந்த ஜலங்கள். இவை என்னைக் காக்கட்டும்.

விளக்கம்: நான்காம் மண்டலத்திலேயே மிகத்தெளிவாக ஸமுத்ரத்தை இத்யத்தின் உருவகமாயும் நதிகளை தெய்வீக அனுபூதிகளாயும் கூறுகிறது வேதம். அந்த ஜலங்கள்

மனவாற்றலான பலமான இந்திரனால் வெளிப்படுத்தப்பட்டு அவரின் ஸாதனையால் வளர்ந்தவை.

**யதத்ய எனத்துவங்கும் அறுபதாம் ஸூக்த மந்திரங்கள்:**

உதிக்கும் ஸூர்யனே! தவறற்றவரே! நீங்கள் வருணனுக்கும் மித்திரனுக்கும் ஸத்தியத்தையே பேசினீர்கள். அதிதி (அகண்டப் பிரக்ஞை) மற்றும் எல்லா தேவர்களும் நாங்கள் வழிபடுகையிலேயே சந்தோஷிக்கட்டும். மித்திரனே! வருணனே! எவர் ஜோதியையும் ஜகத்தையும் ஸ்தாபித்து சராசரங்களை ரக்ஷிக்கிறாரோ அவரே ஸர்வஸாக்ஷியான ஸூர்யக்கடவுள். ஏழு ஹிரண்மயக்குதிரைகளைத் தூண்டினார். அவை அவரை தரிக்கின்றன. கோபாலன் பசுக்களைக் காப்பதுபோல் அவர் வருணனுடையவும் மித்திரனுடையவும் உலகங்களைக் காக்கிறார். மதுரமான இக்குதிரைகள் உச்சியில் எழுந்துள்ளன. தேவர்கள் அவரின் பாதைகளை சரிவர வைத்துள்ள ன்ர். அன்பின் தேவனும் (மித்திரனும்) பவித்திரத்தன்மை யின் தேவனும் (வருணனும்) ஞானத்தின் தேவனும்(அக்னி) ஞானத்தையளிக்கட்டும். இந்த தேவர்கள் சரியான தரிசனத்தை ஸாதகனுக்குத் தந்து மிருதுவான பாதைகளிலே அழைத்துச் செல்லுகிறார்கள்.

இதய ஆகாயத்தில் ப்ராணசக்திகளாகிய ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட திவ்யரதத்தில் ஆத்மஸூர்யன் உதித்து ஸஞ்சரித்து சைதன்யகிரணங்களை எங்கும் வ்யாபிக்கச் செய்து தன்னுடையவே இருசக்திகளான ஸ்வரூபர்களான தூய்மையைக் குறிக்கும் வருணனையும் அன்பைக்குறிக்கும் மித்திரனையும் காக்கிறார். இவர்கள் அவர் சஞ்சரிக்கும் இதயத்தில் உள்ள மார்கத்தை நன்கு பண்படுத்தியுள்ளனர்.

**உத்வேதி ஸுபகோ எனத்துவங்கும் அறுபத்தி மூன்றாம் ஸூக்த மந்திரங்கள்:**

ஸூர்யக்கடவுள் இங்கு வருகிறார். மனுஷ்யர்களின் ஹிதர். வருணனுடையவும் மித்திரனுடையவும் கண்ணான அவர் இருளைப் போக்கியுள்ளார். வெண்குதிரைகள் வேகமாய் தேரை இழுக்கின்றன. தேரின் காலசக்கரம் வேகமாய் சுழலுகிறது.தேவனை மந்திர

த்ரஷ்டாக்கள் வழிபடுகின்றனர். இந்த தேவன் உலகநீதியை உடைக்கமாட்டார். அவரால் தூண்டப்பட்ட மக்கள் கர்மவீரர்களாய் கடமையைச் செய்கிறார்கள். தேவர்கள் தயாரித்தப் பாதையிலே செல்லுகிறார். மித்திரனே வருணனே ஸூர்யோதயகாலத்திலே நாங்கள் உங்களை வழிபடுகிறோம். நாங்கள் நல்லபாதையிலே போகவேண்டும்.

### ப்ரமித்ரயோர்வருணயோ எனத்துவங்கும் அறுபத்தி ஆறாம் ஸூக்த மந்திரங்கள்:

ஸூர்யோதயகாலத்திலே மித்திரனும் பகனும் ஸவிதாவும் எங்களிடம் சந்தோஷத்தை அளிக்கவும். ஸூர்யோதயகாலத்திலே சத்ருஸம்ஹாரகர்களான மித்திரனையும் வருணனையும் போற்றுகிறேன். நாங்கள் உங்களுடையவர்களாயாகிறோம். சிறந்த ஆனந்தாநுபவம் எங்களுடையதாகக்கடவது.

ஸூர்யோதயகாலத்திலே மந்திரங்களால் நீதியின் ஸாரதி களான நீதியில் பிறந்தவர்களான நீதியின் பலமாக பொய்யை வெறுப்பவர்களான தேவர்களை நாங்கள் தூண்டுகிறோம். அவர்களின் அருள் எங்களுக்கு ரக்ஷிப்பைத் தருகிறது. தேவர்களே நாங்கள் நூறுவருடங்களாக நன்கு வாழவேண்டும் என்று ஆசீர்வதியுங்கள். ஸோமம் உங்களுக்காக உள்ளது. நீதியை பெறுகச் செய்யும் மித்திராவருணர்களே இதைப் பருகுங்கள்.

### வ்யுஷா ஆவோ எனத்துவங்கும் எழுபத்தி ஐந்தாம் ஸூக்த மந்திரங்கள்:

அவளின் பிறப்பிடமான தெய்விகஜ்ஜோதியிலிருந்து அறநெறியால் உஷா தன்னை மஹிமைப்படுத்துமளவிலே வெளிப் படுகிறாள். வழிகளை ஒளிமயமாக்குகிறாள். தேவியே! வெற்றியைப் பெற எங்களை எழுப்புங்கள். வளர்ச்சிபெறச் செய்யுங்கள். தனஸம்ருத்தி எங்களுக்காகட்டும். இந்த அம்ருதமயமான தங்கள் கிரணங்கள் தெய்வீக அறநெறிகளை தெரியப்படுத்துகின்றன. அவள் மக்களின் எண்ணங்களின் ஸாக்ஷியாயுள்ளாள். ஜோதி

யுலகின் மஹாராணியான உஷா ரதத்திலே வருகிறாள். மக்களுக்கு ஆசீர்வதிக்கிறாள். ரிஷிகள் துதிக்கின்றனர். அவள் வருகிறாள். சிவப்புக்குதிரைகள்பூட்டிய ரதத்திலே வருகிறாள். நம்பிக்கைகொண்ட ஸேவகனுக்கு செல்வங்களை எடுத்துவருகிறாள். ஸூர்யஒளியை (ஞானரச்மியை) வரவிடாமல் தடுக்கும் தடைகளை(வ்ருத்திராதி அஸுரர்களை- தீயசக்திகளை) அழித்துவிடுகிறாள். ஸூர்யவொளியை வெளிப்படுத்துகிறாள். தேவதையே இப்போது எங்களுக்குப் பசுக்களை(ஞானரச்மிகளை) அளியுங்கள்.

**உஷோ ருருசே எனத்துவங்கும் எழுவத்தி ஏழாம் ஸூக்த மந்திரங்கள்:**

உயிரினங்களின் வாழ்வை ஸ்திரப்படுத்தும் அந்த அழகிய பெண் (தெய்வீகஉதயம்-உஷா) வந்து விட்டாள். இருளைப் போக்கி விட்டாள். இது அக்னியை தூண்டிவிடும் காலம். ஸூந்தரியான ஜோதிஸ்வரூபிணியான உலகை நோக்கி முகத்தைத் திருப்பினவளான உஷா எழுந்துள்ளாள். சைதன்யகிரணங்களின் தாய். தேவர்களுக்கு திருஷ்டியை எடுத்து வருகிறாள்.

தேவியே! சத்ருக்களைத் துரத்தி எங்களுக்கு ரக்ஷிப்பைத் தாருங்கள். எங்களுக்கு வழிகாட்ட ஞானரச்மிகளை அனுப்புங்கள். ரிஷிகளால் துதிக்கப்படுபவளே எங்களுக்கு அன்னஸம்ருத்தியையும் தனஸ்ம்ருத்தியையும் அளித்து ஆசீர்வதியுங்கள்.

**ப்ரதிகேதவ: எனத்துவங்கும் எழுபத்தி எட்டாம் ஸூக்த மந்திரங்கள்:**

தேவியே ! உங்கள் கிரணங்களை எங்கும் பரவச் செய்யுங்கள். அவள் ஒளிபொருந்தி வந்து இருளையும் (அக்ஞானத்தையும்) ஆபத்தையும் போக்குகிறாள். ஒளியைப் பெருக்கிக் கொண்டு அவள் வருகையிலே யக்ஞமும் (ஸாதனையும்) அக்னியும்(விவேகவொளியும்)) ஸூர்யனும் அழைத்து வரப்படுகிறார்கள். இருள் (அஸுரப்பிரஞைும்) மறைகிறது.

**வ்யுஷா ஆவ: எனத்துவங்கும் எழுபத்தி ஒன்பதாம் ஸூக்த மந்திரங்கள்:**

மனிதர்கள் வாழும் இடங்களை பொலிவுபெற செய்து கொண்டு உஷா மக்களின் பாதைகளை(ஸாதனையை) ஒளிமயமாக்குகிறாள்.வீரர்கள் போர்களத்திற்கு வருவது எவ்விதமோ அவ்விதமே அவள் வருகிறாள். ஸூர்யதேவன் கிரணங்களால் ஜோதியையும் ஜகத்தை.யும் வ்யாபித்து நிற்கிறாள்.

**ப்ரத்யு எனத்துவங்கும் எண்பத்தொன்றாம் ஸூக்தமந்திரங்கள்:**

இருளை அகற்றி ஜோதியின் பெண்ணான உஷா வருகிறாள். ஒளி வீசுகிறாள். ஸூர்யன் தன் கிரணங்களால் ஒளி வீசுகிறார். உஷையே! ஸூர்யனே! தங்கள் ஒளியில் நாங்கள் க்ஷேமத்தை அடைவோம். நாங்கள் உங்களை எழுப்புகிறோம். உங்களைக் காண வருகிறோம். நீங்கள் வரங்களை அளிக்க வேண்டும். நீங்கள் ஜகத்தை ஒளிமயமாக்குங்கள்.நாங்கள் காண்போம். ஜோதியையும் ஒளிமயமாக்குங்கள்.எங்கள் அன்பைக் குழந்தைகளின் அன்பை அன்னை ஏற்பதுபோல் ஏற்கவும்.

விளக்கம்: உஷை ஒரு அம்ருதப்ரக்ஞை. ஸூர்யனின் பெண் என்பதால் அவளுக்கு ஸாவித்ரி என மற்றோர் பெயரும் உண்டு. அவள் ப்ராணக்குதிரைகளின் அதிபதியான அச்வபதிக்குப் பெண்ணாய் பிறந்து பரமார்த்தஸத்யத்தை தன்னுள் கொண்ட ஸத்யவான் என்கிற ஜீவனுக்கு வாழ்க்கைப்பட்டாள். ஒளிகளை ஸேனையாய் கொண்டதால் அவளின் மாமனாருக்கு த்யுமத்ஸேனன் எனப்பெயர். அவள் அவரின் வாழ்வில் இருளை நீக்கி ஜோதியை அனுக்ரஹித்தாள். அவருக்கு த்ருஷ்டியைத்தந்தாள். மரணவலையில் சிக்கிய ஸத்யவானை அம்ருதப்ரஞ்ஞையான இவளே மீண்டும் மரணத்திலிருந்து மீட்டாள். இவ்வாறு மரணத்தையும் இருளையும் போக்குபவள் அவள். இச்சரிதையையே அரவிந்தர் தனது ஸாவித்ரி என்னும் இலக்கியத்தில் வரைந்துள்ளார்.

**தீரா த்வஸ்ய எனத்துவங்கும் எண்பத்தி ஆறாம் ஸூக்த மந்திரங்கள்:**

உயிரினங்கள் உயர்ந்திருக்கக் காரணம் ராஜா வருணனே யாம்., அவர் ஜோதியையும் ஜகத்தையும் அவ்வவ்விடத்திலே ஸ்தாபித்தவர். அவரெதிரே உலகைப் பரப்பியுள்ளார்.நான் என் இதயத்தால் மறுபடியும் வருணனுடன் எப்போது சேருவேன் என்று

யோசிக்கிறேன். கோபமற்ற அவர் என் அன்பளிப்பை ஏற்பாரா. அவரின் கருணையைப் பெறுவேனா.தேவனே நீங்கள் என்னை மன்னித்தருளவேண்டும்.

**இயம் வாமஸ்ய எனத்துவங்கும் தொன்னூற்றி நான்காம் ஸூக்த மந்திரங்கள்:**

இந்த ஸ்தோத்திரம் மேகத்திலிருந்து மழை வருவதுபோலே என் ஆழ்ந்த த்யானத்திலுருந்து வந்ததேயாம். அக்னிக்கும் இந்திரனுக்கும் இந்த ஸ்தோத்திரம். இதை இந்திரனே! அக்னியே ! நீங்கள் கவனியுங்கள். மந்திரத்தை மனனம் செய்பவனுக்கு அருள் புறியுங்கள். பாபத்திற்கு எங்களை ஆளாக்காதீர்கள். நாங்கள் உங்களை வணங்குகிறோம். எல்லா மந்திரத்ரஷ்டாக்களும் தங்கள் உதவியை நாடுகின்றனர். யக்ஞத்திலே தங்களுக்கு நாங்கள் அன்னமளிக்கிறோம். அக்னியே! இந்திரனே! இங்கு வாருங்கள். தீயோர்கள் எங்களை அடக்க வேண்டாம். உங்கள் அருளால் நாங்கள் பசுக்களையும் குதிரைகளையும் யக்ஞத்தில் அடைவோமாக

**ஸம்வத்ஸரம் எனத்துவங்கும் நூற்றிமூன்றாம் ஸூக்த மந்திரங்கள்:**

தெய்வீகஜலங்களைநாடி தவளைகள் உயர்ந்த வேதியர்களை போல் அறநெறிகளை அனுஷ்டித்து மந்திரங்களை ஜபிக்கின்றன. தேவன் அவர்களுக்காக தெய்வீகஜலங்களை வர்ஷிக்கிறார். அந்த ஜலங்கள் தவளைகளின் வரண்ட வாஸஸ்தானத்தில் ப்ரவஹித்து தாகத்தாலும் சோர்வாலும் படுத்திருக்கும் தவளைகளை எழுப்புகின் றன. அந்த சைதன்யஜலங்கள் வரண்டப்ரதேசத்தில் தவளைகளின் தவத்தால் ப்ரவஹிக்க அவைகளை வெகுகாலமாய் நாடி நிற்கும் தவளைகள் சந்தோஷித்து ஆரவாரம் செய்து தம் ஆனந்தத்தை ஒருவருக்கொருவர் தந்தையும் மைந்தனும் போலும் குருவும் சீடனும் போலும் பகிர்ந்துகொள்ளுகின்றன. நல்வார்த்தைகளைப் பேசுகின்றன. வெய்யிலில் வாடும் அவர்களின் தவத்திற்கு தேவன் ஸோமமயமான தெய்வீகஜலங்களை வர்ஷிக்கிறார். அவைகளைப் பருகி அவை ஆரவாரம் செய்து சந்தோஷிக்கின்றன.

### இந்த்ரஸோமா எனத்துவங்கும் நூற்றி நான்காம் ஸூக்த மந்திரங்கள்:

இந்திரனே! ஸோமனே! தீயோர்களை காரிருளில் அமுக்குங்கள். உங்கள் வீரம் அவர்களை அடக்கட்டும். உங்கள் வஜ்ரங்களால் தீயோர்களை விரட்டுங்கள். ஒருக் காலும் தீயோர்கள் மங்களத்தை அடையக்கூடாது. தரும நெறியைத் தவறும் தரும நெறியை அழிக்க முற்படும் தீயோர்களை அழித்துவிடுங்கள் எங்கள் குதிரைகளையும் பசுக்களையும் தாக்கும் அஸுரர்களை அழித்து விடுங்கள். மூர்க்கனாயும் பொய் கொண்டும் உள்ளவனுக்கு ஸோம தேவன் உதவுவதில்லை. ஸோமன் பொய்யை இல்லாமல் ஆக்குபவர், இந்திரனே! அஸுரர்களை ஒழியுங்கள். அவர்கள் ஸூர்யனைக் காண முடியாது. உங்களின் வஜ்ரா யுதத்தை எதிர்த்து வரும் மாயக்காரர்களை சின்னாபின்ன மாக அழித்து விடுங்கள்.

*மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற.*

– திருவள்ளுவர்.

**இந்திரன் -**

*ஐந்தவித்தான் ஆற்றல் அகல் விசும்பு ளார்கோமான்*
*இந்திரனே சாலும் கரி.*

– திருவள்ளுவர்

பொருள் : புலன்களை வெல்லும் ஆற்றலுக்கு இந்திரனே போதுமான எடுத்துக்காட்டு.

ப்ரபஞ்சம் இருவிதம். ஸ்தூலமான வெளியுலகு, ஸூக்ஷமமான உள்ளுலகு. இவ்விரண்டில் முதலாவது மேட்டர்களால் ஆனது. இரண்டாவது உணர்வுகளால் ஆனது. இவ்விரு உலகங்களையும் இருப்பெரியக் கடல்களாய் சிந்தித்துப் பார்க்கவும். வெளியுலகம் ஒருப்பெரியக் கடல். இதில் நான் ஒரு

அலை. நீ ஒரு அலை. இந்த மரம் ஒரு அலை. இந்த மலை ஒருஅலை. இம்மலையும் மேட்டர்களால் ஆனதே. நானும் மேட்டர்களால் ஆனவனே. வித்தியாசம் யாதெனில் இம்மலையாகிய அலை வெகுகாலம் பல்லாயிரம் வருடங்கள் இருக்கும் பேரலை. நானோ நூறே வருடங்கள் இருக்கப்போகும் ஒரு சிறிய அலை. பல்லாயிரம் வருடங்கள் இருக்கும் மலையும் ஒருகாலகட்டத்தில் அழிந்து போகும். அதாவது பரிணாமத்தைப் பெறும். அவ்வாறே இவ்வுடலும் நூறு வருடங்களிலேயே பரிணாமத்தைப் பெற்றுவிடும். இவ்வாறு பலவித அலைகளுடன் இக்கடல் உள்ளது. வெளியுலகாகிய இப்பெருங்கடலின் ஒரு பாகத்தைப் பாகுபாடு படுத்திக்கொண்டு குறிப்பிட்ட மக்கள் அவர்களுக்காக சொந்தம் பாரட்டிக் கொள்கின்றனர். அந்த பாகத்திற்கு ஓரரசனோ மந்திரியோ உள்ளான். அவ்வாறே மற்றோர் பாகத்தை ஆள மற்றோர் அரசன் உள்ளான். அதை வேறுமக்கள் தங்கள் பாகமாய் கருதுகின்றனர். இவ்வாறு இப்பெருங்கடலைப் பல பாகங்களை இம்மக்களே பிரித்துக் கொண்டுள்ளனர்.

இவ்வாறே உள்ளுலகத்தில் உள்ள உணர்வுகள் யாவற்றையும் அலைகளாயும் அவையாவின் கூட்டான உள்ளுலகை ஸமுத்திரமாயும் சிந்தியுங்கள். இவ்வளவு பெரிய உள்ளுலகக் கடலில் காமம் கோபம் அச்சம் அவ்வாறே அறவுணர்வு தூய்மை அன்பு முதலிய உணர்வுமயமான அலைகள் பலவாறு ஓயாமல் எழும்புகின்றன. இவ்வித அகண்டமான உள்ளுலகையும் பாகம்போட சில அரசர்களும் அரசிகளும் உள்ளனர். எண்ணங்கள் தடையற்று எழுகையில் அவைகளுடன் பிண்ணிப்பிணைந்து தடையற்று நான் நான் நான் எனும் உணர்வு எழுந்து கொண்டே உள்ளதே அதுதான் அகந்தை. அது அரசன். அது தான் ஸுகத்தையே அடைய விரும்புகிறது. இவ்வாறு பல அகந்தைகள் நான்கள் எழுந்து இந்த உள்ளுலகை, பாகம் போட்டுக்கொண்டு தனித்தனியே ஆள்கின்றன.

இந்த நானுணர்வு தனக்கென்று உள்ளுலகில் ஒருபாகம் கொண்டு அதில் தன்னையே அரசானாக்கி இது என் இதயம், என் காமம், என் கோபம், என் ஸுகம், என் அன்பு என்று அந்த பாகத்தில் உள்ள உணர்வுகளை மட்டும் தனதாய் எண்ணி

அவையாவற்றிற்கும் ஸுகத்தை நாடுகிறது. இத்துடன் நின்றதா? இல்லை. இவ்வுணர்வுகள் யாவும் எவ்வுடலில் குடிகொண்டனவோ அவ்வுடலையே தன்னுடையதாயும் தானாயும்கூட எண்ணிக் கொள்கிறது. பிறகு தம் சுற்றத்தார் தம் வீடு தம் செல்வம் என எல்லாவற்றிலும் தனக்கென்று பாகம் போடுவது வெளியுலகிலும் இவ்வகந்தையே.

இப்படி அகந்தை மிக அதிகஅளவில் தன் ஸுகத்தை நாடி தன் பாகத்திற்குள் உள்ள உலகை தனக்கென்று மிக அதிக அளவில் தன் ஸுகத்திற்காக அனுபவிப்பதாலேயே பெறும்பாலானக் கஷ்டங்கள் யாவும் தீவினைகள் யாவும் தோன்றுகின்றன. இதுவொரு பெறும் ஹிம்ஸையாக அமைகிறது. குறுகிய கண்ணோட்டம் ஏற்படுகிறது. அதனால் காமவெறி க்ரோதவெறி போட்டிப்பொறாமைவெறி ஆணவவெறி சோம்பேரிவெறியாவும் வலுப்பட்டு இவ்வகந்தையை தன்னுடையதாய் ஆக்கிக் கொள்கின்றன. தனக்கு ஆட்படுத்தி அகந்தையையே பாழாக்குகின் றன. இவ்வாறு அவ்வகந்தையரசன் கவிழ்கிறான். இதற்குதான் அஸுரஸாம்ராஜ்ஜியம் எனப்பெயர். இது இருள்மயமானது. அகண்டப்பிரக்ஞையிலிருந்து ஒரு பாகத்தைத் தனக்காகக் கொண்டு அதை காமவேறி க்ரோதவெறி முதலிய அஸுரர்கள் பாழாக்குகிறார்கள். இவ்வஸுரர்கள் திதியின் குழந்தைகள். திதி என்பவள் குறுகிய பிறிக்கப்பட்ட உணர்வை கண்டப்பிரக்ஞையைக் குறிப்பவள். திதி என்பது இவ்வஸுரஸாம்ராஜ்ஜியமே. இவளே அஸுரர்களைப் பெற்றெடுப்பவள்.

இருள் ஒழிய என்ன செய்வது? அஸுரர்களோ வலுத்து விட்டனரே. அவர்களை அழித்து தேவஸாம்ராஜ்ஜியத்தை ஸ்தாபிக்க என்ன செய்யவேண்டும்? இவ்வஸுர ஸாம்ராஜ்ஜியத்தை அழிக்கவே இநதிரன் வருகிறார். அவர் மனவாற்றல். மனச்சக்தி. மனோபலம். இவர் அதிபயங்கரப்போர்க்கடவுள். இவர் ஆற்றலே உருவானவர். உழைப்பே வடிவானவர். இவர் அபரிமிதமாய் போர் பண்ணி தீயசக்திகளை அடித்து வீழ்த்துகிறார். அகந்தையை கீழே இரக்கி அறியாஸனத்திலே அறவொளியை அமர்த்துகிறார். அறவொளி அரசனானவுடன் அவ்வொளி பரவி தேவ ஸாம்ராஜ்ஜியம் நிலவுகிறது. இப்போதும் அஸுரர்கள் தேவ

ஸாம்ராஜ்ஜியத்தைப் பொறுக்க முடியாமல் போருக்கு வர அவர்களை இந்திரனே அடித்து வீழ்த்துகிறார்.

அறவொளியான விவேகவொளியான அக்னி அரசனாக அகந்தையோ அதன் ஸேவகனாகிப்பணிபுரிய ஸாதனை வளருகிறது. இச்சாதனையைப் புரிபவனே இந்திரன்தான். தேவஸாம்ராஜ்ஜியமே அதிதியன்னை - அகண்டப்பிரக்ஞை. இவள் மித்திரன்(அன்பு) வருணன்(தூய்மை)முதலிய தேவர்களின் அன்னை. இந்திரனுடையவே அன்னை. இவ்வதிதிஸாம்ராஜ்ஜியத்தை தன் பலத்தாலும் உழைப்பாலும் ஸாதனையாலும் ஸ்தாபித்தவர் இந்திரனாவார்.

**இனி எட்டாம் மண்டலத்து மந்திரங்களின் சுருக்கம் தரப்படுகின்றன. இந்திரனுக்கு ஸ்தோத்திரங்கள்:**

இந்திரனே! எங்களை ஹிம்ஸிக்க வேண்டாம். தங்களது சக்தியால் எங்களுக்கு உதவுங்கள். உங்களை வழிபடும் நாங்கள் துதி பாடுகிறோம். ஸூக்ஷ்மதரிசிகள் உங்களைப் போற்றுகின்றனர். நீங்கள் பிதாமஹர் போன்றவர். எங்களைச் சக்தியையும் அன்னத்தையும் இழக்கச் செய்யாதீர்கள்.

ஞானிகள் இந்திரனுக்காக ஸோமனைக் கொண்டு வருகிறார்கள். வ்ருத்திரஸம்ஹாரகரே! அதைப் பருகுங்கள். நூறுவழிகளில் எங்களைக் காக்கும் இந்திரன் எங்களிடம் வரட்டும். இந்திரனே! நீங்கள் வெகுதூரத்தில் இல்லை. ஸோமபானம் பண்ண அருகே வாரீர்.

இந்திரனே! ஸோமத்தைப் பருகுங்கள். எங்களிடம் அன்பு செலுத்துங்கள். உங்களின் அனுக்கிரஹத்தால் மேலும் நாங்கள் சக்திவாய்ந்து இருப்போமாக. தீயோர்களின் பிடிப்பில் நாங்கள் இருக்கக் கூடாது. பரிபூர்ண பவித்திரமான ஞானிகள் அக்னியின் எதிரே உங்களைப் புகழுகின்றனர். அவரின் ஸ்ரைஷ்ட்யம் உண்மையே. நான் அவர்களின் சக்திகளைக் கண்டு பூரிக்கிறேன். தன் சக்திகளால் இந்திரன் ஜோதியிலும் ஜகத்திலும் வ்யாபித்து ஸூர்யனை உதயமாக்குகிறார். தேவர்களும் மனிதர்களும் உங்களைத் துதிக்கின்றனர். வழிபடுபவர்கள் தங்களை ஸோமபானம் பண்ணச்சொல்லுகிறார்கள்.

மதுரமான இந்த மந்திரங்கள் எங்கள் இதயத்திலிருந்து

உதிக்கின்றன. ஸூர்யகிரணங்களை ஒத்த ஞானிகள் அவர்களின் விருப்பம் யாவற்றையும் அடையட்டும். அஸுரஜயம் பண்ணும் இந்திரனே! தங்களது குதிரைகளைக் கிளப்பி ஸோமபானம் பண்ண தேவர்களுடன் இங்கு வரவும். இந்திரனே! தங்களை ஞானிகள் அழைக்கின்றனர். நான் அழைப்பதைக் கேளுங்கள். நீங்கள் வ்ருத்திரனை நசித்து அஸுரர்களால் ஒளித்துவைக்கப்பட்ட பசுக்களை மீட்டவர்.

இந்திரனே! நீங்கள் தென்திசையிலுள்ளவர்களாலும் வடக்கிலேயுள்ளவர்களாலும் மேற்கிலேயுள்ளவர்களாலும் கிழக்கிலேயுள்ளவர்களாலும் அழைக்கப்படுகிறீர். ஞானிகளாலும் மற்றோர்களாலும் நீங்கள் வணங்கப்படுகிறீர்கள். இந்திரனே! நீங்கள் எங்கும் எவரிடமும் இருந்தாலும் கூட ஞானிகளே உங்களை நாடி அடைகின்றனர். பசிகொண்ட காளை தன் கணங்களுடன் குளத்திற்கு செல்வதுபோல் நீங்கள் ஞானிகளுடன் இங்கு வாருங்கள். ஸோமபானம் பண்ணுங்கள். இந்த பலத்தால் அந்த தேவர் பல சத்ருக்களை வெற்றி கொண்டார். உங்களுடன் போர்பண்ண வந்த எதிரிகள் வளைந்துபோன மரங்கள் போல் ஆகின்றனர். தங்களால் ஆசீர்வதிக்கப்பட்டவன் ஆயிரம் வீரர்களால் போற்றப் படுகிறான். தங்களை வழிபடும் மக்களைப் பெறுகிறான். இந்திரனின் நட்பில் இருக்கும் நாங்கள் அச்சமடைவதில்லை. ஆனந்தத்தை அடைகிறோம். இந்திரனை வழிபடுபவன் குதிரைகளையும் பசுக்களையும் உடையவனாகிறான். அவனின் உயர்ந்த பண்புகள் அவனை ஞானிகளுடன் சேரும்படிப் பண்ணிவிடுகின்றன.

இந்திரனே! தாகம்கொண்ட மானைப்போல் இங்கு வந்து ஸோமபானம் பண்ணுங்கள். இந்திரனுக்கு தாகமுள்ளதால் ஸோமத்தை பிரவஹிக்கும்படிச் செய்யவேண்டும். அறிஞர்கள் பாடும் துதிகளால் இந்திரன் துதிக்கப்படுகிறார். அறிஞர்கள் அவருக்கு அன்பளிப்புகளை அளிக்கின்றனர். யக்ஞத்திற்கு இந்திரனே பூர்ணமாக்கும் வஸ்து என்று அறிகின்றனர்.

நான் என் தந்தையிடமிருந்து அறிவைப் பெற்றுள்ளேன். ஸூர்யனைப் போல் தேஜோமயனாவேன். என் மந்திரங்களால் இந்திரனின் சக்தி வளரட்டும். அறிஞர்கள் தங்களைப் புகழ்கின்றனர். இந்திரன் வ்ருத்திரனை சின்னாபின்னமாக்கிய பிறகு ஜலங்களை

கடலுக்கனுப்புகிறார்.

ஒளியின் தேவனான தேவதூதனான அக்னிக்கடவுளை மஹிமைப்படுத்துங்கள். ஜோதிர்மயமானவர். ஞ ா ன ஸ் வ ரூ பி . இவரே தேவர்களை அழைக்கும் ஹோதா. ஜலத்தின் புதல்வன். மித்திரனுடையவும் வருணனுடையவும் மங்களம் எங்களை மங்களமாக்கடும்.

உயர்ந்த நண்பரே! அனுக்கிரஹம் பண்ணுங்கள். தீயதை அழிக்கும் அறிவைத் தாருங்கள். தீயோர்களின் நம்பிக்கையை அழியுங்கள். ஒவ்வொரு வேலையிலும் இந்திரனே! எங்களை ரக்ஷிப்பதற்கு அழைக்கிறோம். நீங்கள் த்ருடமானவர். வீரர். சத்ருஸம்ஹாரகர். ஆதலால் தங்களைத் தங்கள் நண்பர்களான நாங்கள் ரக்ஷகராய் அடைந்துள்ளோம்.

இந்திரனே! வாரீர். ஸோமம் தங்களுக்காக உள்ளது. குதிரைகளுக்கும் பசுக்களுக்கும் தேவனே! பருகுங்கள். இப்போது மட்டிலும் அல்லாமல் தங்கள் ஆசியை எப்போதும் நாங்கள் பெற்றுள்ளோம். எங்கள் பலத்தை அதிகரியுங்கள். தோழர்களே! நமக்கு ஆசீர்வதிக்கும் தேவனை நான் புகழ் பாடுகிறேன். குதிரைகளால் அழைத்து வரப்படும் ரதத்திலேயுள்ள இந்திரன் நமக்கு அருள் புரிவார். எங்கள் வீரர்களுடன் நாங்கள் சத்ருஜயம் பண்ணவேண்டும். பசுக்களையும் குதிரைகளையும் அடைய வேண்டும்.

ரிஷியின் மந்திரத்திற்கு இங்கு வாருங்கள் . இந்திரனே! நீ ஜோதிக்குச் சென்றவர். ரிஷிகள் இங்கு உங்களைஅழைக்கின்றனர். உங்களுக்காக ஸோமம் உள்ளது. வாரீர். இந்திரனே! நீர் ஜோதிக்குச் சென்றவர். எங்களை ரக்ஷிக்க எங்களிடம் ஆர்வம் செலுத்தி அனுக்கிரஹம் செய்ய இங்கு வாருங்கள். மனதின் கடவுளே! தனஸம்ருத்தியை அருளுங்கள். சரண்யனான அக்னி உங்களை இங்குக் கொண்டு வரட்டும். அதிவேகக் குதிரைகளால் அழைத்து வரப்படும் ரதத்திலே ஒரு பக்ஷியைப்போல் வாருங்கள்.

இந்திரன் எங்கள் துதிபாடல்களைக் கேட்டருளட்டும். அவர் ஸோமபானத்திற்காக இங்கு வரட்டும். நீங்கள் ஸோமத்தை எதிர் பார்ப்பவர். தேவர்களில் சிறந்தவர். முழுமயாய் ஸோமத்தைப் பருகுங்கள்.

கைப்பற்றமுடியாததையும் வெல்லுபவராய் தங்கள் குதிரைகளை விஸ்தாரமாய் அகண்டமாய் எங்கும் போகச் செய்கிறீர். அகண்டமான பலத்தின் தேவனே! எங்களுக்கு தன ஸம்ருத்தியை அருளவும். நாங்கள் உங்களைப் பின்தொடருகிறோம். நீங்கள் எங்கள் குதிரைகளையும் பசுக்களையும் பெருக்குபவர். நாங்கள் விரும்பும் எல்லாவற்றையும் தாரீர்.

நாங்கள் பயப்படும் விஷயங்களிலிருந்து எங்களை வெளிப்படுத்தி அச்சமற்றவர்களாய் எங்களை ஆக்குவீர். சத்ருக்களைத் துரத்துவீர். க்ருஹங்களையும் தனத்தையும் அளிப்பீர். வ்ருத்திர ஸம்ஹாரகரான நீங்கள் எனது ரக்ஷகர். அவர் எங்களை எல்லா திசைகளிலிருந்தும் மேலிருந்தும் கீழிருந்தும் முன்னேயும் பின்னேயும் காத்தருளட்டும். இன்றைக்கும் நாளைக்கும் எங்கள் ரக்ஷகராய் நீங்கள் இருங்கள். இரவிலும் பகலிலும் எங்களை ரக்ஷியுங்கள். நீங்கள் மிகவும் த்ருடமானவர். வஜ்ரம் ஏந்தியவர். ஸகல சக்திகளும் கொண்டவர்.

உங்களை மனிதர்கள் வடக்கிலிருந்தும் கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் அழைக்கின்றனர். அதிவேகக் குதிரைகளில் இங்கு வாரீர், ஜோதியின் தாரையான ஜோதிர்மயமான ஸோமத்தைப் பருகுவீர். தங்கள் குதிரைகள் தங்களை இங்கு அழைத்து வரட்டும். நீங்கள் மந்திரங்களால் மஹிமைப்படுத்தப்படுபவர். தர்பையில் அமர்ந்து ஸோமத்தைப் பருகவும். நீர் மனுஷர்களின் வாழ்வு. ஸோமத்தைப் பருகி ஸந்தோஷிக்கவும். எங்களுக்குப் பசுக்களைத்தரும் இந்திரன் சாந்தி அடையட்டும். எனக்கு அந்த இந்திரன் ஒளிச்செல்வத்தை அளித்துள்ளார்.

சத்ருக்களை வெல்லும் வ்ருத்திரஸம்ஹாரகரான இந்திரனை ஸ்தோத்திரம் பண்ணுகிறேன். வேகமாக ரதத்திலே செல்லுபவர். ஸூர்யன் ஜோதியிலிருப்பது போல் வஜ்ரம் அவர் கைகளில் ஜ்வலிக்கிறது. அவர் ஞானிகள் க்ஷேமம் அடையும்படிச்செய்வார். எவனுமே வீரச்செயல்களால் இந்திரனுக்கு ஈடாக முடியாது. உலகத்தின் அனைத்து மனிதர்களும் அவரைப் போற்றி வணங்கட்டும். தன் சக்தியால் தானே எவ்வளவோ வீரச்செயல்களை செய்தவர்.

அறிஞர்களே! ஸ்தோத்திரத்தால் இந்திரனை ஸோமபானத்திற்

கழையுங்ள். இந்திரனே! நமக்கு தன ஸம்ருத்தியை அருளுவார். அவர் ஸோமபானம் செய்தவராய் நமக்கு எல்லாவற்றையும் அருளட்டும். இந்திரன் வீரர்களின் தலைவர். அவரை யாருமே ஹிம்ஸிக்க முடியாது. ஸர்வக்ஞரான தேவரே! எங்கள் மந்திரத்தை அறிந்து எங்களுக்கு தனங்களை அருளவும். நூறு ஆயிரம் சக்திகளை அளிக்கும் அன்னத்தை இங்கு கொண்டு வாரும். நீங்கள் ஸோமப்பிரியர். நீங்கள் வஜ்ரபாணி. அறிஞர்கள் அவரைப் பாடட்டும். எவரால் ரிஷிகள் ஆனந்திக்கின்றனரோ அவரை ஸோமத்திற்காக இங்கு அழைக்கிறோம். அவர் எங்கள் எண்ணங்களைத் தூண்டட்டும். நதிகள் ஸமுத்திரத்தில் கலப்பதுபோல் ஸோமம் உங்களில் கலக்கட்டும்.

இந்திரனே! துஷ்டர்கள் கடத்தி ஒளித்து வைத்த பசுக்களை மீட்டு வந்து ஸாதகர்களிடம் தாரீர். அதார்மிகர்கள் அவர்களின் அதர்மத்தாலேயே அழிவார்கள். இந்திரனே! நீர் அருகே இருந்தாலும் வேறெங்கேயாவதிருந்தாலும் ஜோதியிலிருந்தாலும் ஸமுத்திரத்தில் இருந்தாலும் இங்கு ஸாதகனின் அழைப்பிற்கு வாருங்கள். எங்களைக் கைவிட வேண்டாம். ஸோமத்தைப் பருகி அன்ன தன ஸம்ருத்தி அளிப்பீர். நீர் எங்கள் ரக்ஷகர், பந்து. இங்கே அமருங்கள். ஸ்ருஷ்டிக்கப்பட்ட எல்லா உயிரினங்களுக்கும் சக்தியை அளிக்கிறீர். வீரர்களும் சூரர்களும் இந்திரனையே அரசனாய் கொண்டார்கள். அவர் சத்ருஸம்ஹாரகர். சக்திவாய்ந்தவர். ரிஷிகள் அவரை வணங்கிப் போற்றுகின்றர்.

இந்திரனுக்குப் புகழ்பாடுங்கள். நீங்கள் வெல்லுபவர். ஸூர்யனை உதிக்கச் செய்கிறீர். எல்லாவற்றையும் படைத்தவர். தேவாதிதேவன். ஜோதியால் ஜகத்தை ஜ்வலிக்கச் செய்பவர். ஜோதிலோகத்திற்குச் செல்லுபவர். உங்களின் நட்பைப் பெறவே தேவர்களும் விரும்புகிறார்கள். வெல்லுபவர். வெல்ல முடியாதவர். எங்கும் வ்யாபித்த ஜோதியின் நாயகர். அன்பளிப்புகளை அளிப்பவனை சக்திவாய்ந்தவனாய் ஆக்குவீர். தீயோர்களை ஒழித்து மனுஷர்களை வாழவைப்பீர். நாளுக்கு நாள் உங்களின் சக்தியை எங்கள் மந்திரங்கள் அதிகமாக்கட்டும். மந்திரங்களால் ரிஷிகள் ரதத்தைக்கிளப்பியுள்ளனர். பெற்றோர்களைப்போன்ற இந்திரனே! நீங்கள் எங்களுக்குப் போரிலே வெற்றி பெற சக்தி

யளிப்பீர்.

பரமபிதாவான இந்திரனை வணங்குகிறோம். குதிரைகளின் நாயகரே! இந்திரனே! வாரீர். ஸந்தோஷியுங்கள். தங்கள் வீரம் பெரியது. தந்தையிடம் இருந்து குமாரர்கள் தனத்தைப் பெறுவது போல் உங்களிடமிருந்து நாங்கள் பெறுவோம். இந்திரனிடமிருந்து வருபவை நன்மை அளிப்பவை. மனிதர்களே! அவரைப் புகழுங்கள். ஸூர்யனிடமிருந்துக் கிரணங்கள் போல் அவரிடமிருந்து தனஸம்ருத்தி வருகிறது. இந்திரனே! அஸுரர்களை வென்று க்ஷேமத்தைத் தாரீர்.

*அப்பமாதேன மகவா தேவானாம் ஸேட்டதாம் கதோ*
*அப்பமாதம் பஸம்ஸந்தி பமாதோ கரஹிதோ ஸதா*

சோம்பலற்ற உழைப்பினால் இந்திரன் தேவராஜனானார். எனவே சோம்பலில்லாமையை சான்றோர்கள் புகழ்கின்றனர். சோம்பலை இகழ்வர். – தம்மபதம் (புத்தர்)

**பவமான ஸோமன் -**

*ஜயசோம, ஜயசோம, ஜயசோம தேவா ஜய ஜய.*
*நயமுடை இந்திரனை நாயகத்திட்டாய்*
*வயமிக்க அசுரரின் மாயையைச் சுட்டாய்*
*வியனுலகி லாநந்த விண்ணிலவு பெய்தாய்*
*துயர்நீங்கி யென்னுளஞ் சுடர்கொளச் செய்தாய்*
*மயல்கொண்ட காதலரை மண்மிசைக் காப்பாய்*
*உயவேண்டி யிருவருளம் ஒன்றுறக் கோப்பாய்*
*புயிருண்டே குமுறி யிருள்வீசி வரல்போற்*
*பொய்த்திரள் வருமதைப் புன்னகையில் மாய்ப்பாய்.*

-பாரதியார்.

பொதுவாக பெரும்பாலோர் தூலமான ஜடவஸ்துக்களி லேயே மனதைப்பொருத்தியவர்கள். ஒருசிலரே ஸூக்ஷ்மங்களைக் காண்பவர்கள். ஸூக்ஷ்மங்களைக்காண பொறுமையும் கவனமும் மிகவும் தேவை. எவ்வளவுக்கெவ்வளவு பொறுமையும் கவனமும்

ஒருவனுக்கு இருக்குமோ அவ்வளவுக்கவ்வளவு ஸூக்ஷ்மங்களை நன்கு கவனித்து அறியமுடியும், உணரமுடியும், காணமுடியும், வாழமுடியும். ஸூக்ஷ்மங்களைக் காணுக்காண அவன் தெய்வீக வுலகங்களில் சஞ்சரிக்கும் சக்தியைப் பெறுகிறான். அப்படிப்பட்ட ஸூக்ஷ்மதரிசிக்கே ஸம்ஸ்க்ருதத்தில் கவி என்று பெயர். அவன் ஸூக்ஷ்மதரிசனங்களாகிய தனதனுபவங்களை தூலவுலகில் வார்த்தைவடிவிலோ கானவடிவிலோ ஓவியவடிவிலோ மற்ற எவ்விதத்திலும் வெளிபடுத்தினால் அதற்கு கவிதா எனப்பெயர். இதுவே மிகச்சிறந்தக் கலை. கவியின் தன்மையாகவும் கவியின் கொள்கையாயும் கவிதா உள்ளது. அவனின் சைதன்யத்திலிருந்து அவனின் அருந்தவத்தால் வெளிப்படுவதே கவிதா எனப்படும்.

கவி சைதன்யத்தில் முழுகுபவன். தேடுபவன். உணருபவன். அறிபவன். எங்கும் உயிரோட்டத்தைக் காண்பவன். மரங்கள் செடிகொடிகள் மலைகள் தாழ்வாரங்கள் நீரோடைகள் பசும்புற்கள் கதிரவன் நிலவு ஆகாயம் புவி நக்ஷத்திரங்கள் எல்லாவற்றிலும் உயிரோட்டம் உள்ளதைக் காண்பான். seeing into the life of things என்கிற வோர்ட்ஸ்வர்த்தின் வார்த்தையே கவி என்பதற்குப் பொருள். ஸூக்ஷ்மதரிசனம் செய்து அதை வெளிப்படுத்தும் சக்தியே ரஸனையாகும். இவ்வித ரஸனை ஆதியில் ஓர் அனுபவமாய் மட்டிலுமே உள்ளது. அப்போது சிஸ்டங்களுக்கு அப்பால் உள்ளது. இச்சக்தி சைதன்யத்திலிருந்து உந்தப்பட்டு வெளியிலே வெளிப்படுகையில் சிஸ்டத்துடன் கூடியே வெளிப்படுகிறது.

கலை உணர்ச்சிகளை உள்ளது உள்ளபடி அப்படியே வெளிப்படுத்துவதில்லை. கலையை ரஸிப்பவர்களுக்கே உணர்ச்சி களை ஏற்படுத்துகின்றன. அவ்வளவுதான். அவ்விதம் செய்ய முறைகள் இவை.

அ. உணர்ச்சிகளால் பாதிக்கப்பட்டவர்களை வர்ணிப்பது மூலம்; அவனின் முகபாவனைகள் பாதிக்கப்பட்டதால் அவன் செய்யும் செயல்கள் முதலியவைகளை வர்ணிப்பதுமூலம்.

ஆ. எந்தப் பொருளால் உணர்ச்சி எழுகிறதோ அதை வர்ணிப்பது மூலம்.

இவ்விருமுறைகள் மூலம் ரஸிகனின் இதயத்தில் கலை

உணர்ச்சிகளை ஏற்படுத்துகிறதேயன்றி அது உணர்ச்சிகளை அப்படியே காட்டமுடியாது. ஏனெனில் உணர்ச்சிகள் சிஸ்டத்தைக் கடந்து ஸூக்ஷ்மநிலையில் உள்ளன. அவை சிஸ்டத்திற்குப் பிடிபட மாட்டா.கலைஞன் ரஸிகனிடம் உணர்ச்சிகளை ஏற்படுத்த முயற்சிக்கையில் அவ்வுணர்ச்சிகள் முன்பேயே அந்த ரஸிகனின் அடிமனதில் உறைந்து கிடக்க வேண்டும். அவைகளையே கலைஞன் தட்டி எழுப்புகிறான். ரஸிகன் கலைஞனின் ஸஹ்ருதயமாய் இருக்கவேண்டும்.

புதியதொரு உணர்ச்சி பிறப்பதால் அடிமனத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் உணர்ச்சிகளே தட்டி எழுப்பப்படுகின்றன. ஒரு மனிதன் குறிப்பிட்ட உணர்ச்சிகளை ரஸிக்கும் ரஸிகனாக வேண்டுமெனில் அவன் அப்படிப்பட்ட ரஸிகர்களோடு பழகி அவர்கள் ரஸிக்கும் முறையையும் கவனிக்க வேண்டியுள்ளது.

கலைஞனின் பாவங்களைத் தனது பாவங்களாக எண்ணினா லேயேயன்றி ரஸிப்பு ஏற்படாது, ரஸித்தலின் பயன்கள் இரண்டு.

அ. ரஸிக்கும் மாத்திரத்திலேயே இன்பம் ஏற்படுகிறது.

ஆ. எவ்வுணர்ச்சிகளை ரஸிகன் ரஸிக்கிறானோ அவைகளை அவன் வளர்த்துக்கொள்கிறான். உதாரணமாக அவன் ப்ரியத்தை ரஸித்தால் அவனுக்கே ப்ரியம் வளருகிறது.

உணர்ச்சிகளை ஆன்மாவாயும் சிஸ்டத்தை உடலாயும் கொண்டது கலை. இதைக் சற்றுவிளக்க வேண்டுமெனில்-

சில சப்தங்களும் சில அசைவுகளும் சில பாவங்களுடன் ஸம்பந்தம் கொண்டவை. உதாரணமாக சுபபந்துவராளி என்னும் ஸங்கீத ராகம் சோகத்துடன் தொடர்புகொண்டது. நாட்டியத்திலுள்ள குறிப்பிட்ட அசைவுகள் குறிப்பிட்ட உணர்வுகளுடன் தொடர்பு டையவை. போர்வீரர்களின் நடை வீரத்தோடு தொடர்புடையது. இப்படிப்பட்ட நாட்டிய ஜதிகள் சப்தங்கள் முதலியவை சிஸ்டத்திலிருந்து எழுந்து பாவங்களைத் தட்டி எழுப்புகின்றன. ஆதலால் சிஸ்டத்திலிருந்து செயல்கள் எழுந்தால் பாவங்கள் பலன்களாகின்றன. ஓரிளம்பெண் அருவமான நாணவுணர்வை கண்களின் அசைப்புகள் என்ற சிஸ்டம் மூலம் வெளிப்படுத்துகிறாள்,

வெறும் கலையில் மட்டும் அல்லாமல் சிஸ்டத்தால் எழும் செய்கைகளும் பாவங்களின் எழுச்சியும் ப்ரயோஜனமாகின்றன.

பாவங்களும் அமைப்பும் மட்டும் இருந்தால் கலை ஏற்படாது. பாவங்களைக் குறித்து ப்ரியம் ஏற்படவேண்டும். இந்தப்பிரிய உணர்வுக்கு ரஸனை எனப்பெயர்கொள்ளலாம். ரஸனை பாவங்களை நோக்கிச்சென்றால் அமைப்பு அல்லது சிஸ்டவுணர்வு அதிகப்பட்டு கலை நன்கு விளங்கும். ரஸனை என்று இங்கு கூறப்படுவது ஈடுபாடே.

உதாரணமாக நாட்டியமாடும் பெண் காதல் எனும் பாவத்தில் ரஸனையை அதாவது ஈடுபாட்டை செலுத்த செலுத்த அவள் கண்களின் அசைவுகள் என்ற சிஸ்டத்திலிருந்து எழும் அமைப்பு களில் நாணவுணர்வு அதிகமாகிறது. தன்மயமாக பாவங்களில் ஈடுபடுகையில்தான் ஆட்டமோ பாட்டோ கவிதையோ மற்ற எந்த அமைப்புகளாயினும் அவை விளங்குகின்றன. ஆனால் பாவங்களோ மிகவும் அதிக அளவில் தன்மயமாகிவிட்டால் சிஸ்டம் அழிந்துபோகும். தன்மயமே ஆகாவிடினும் சிஸ்டம் அழியும். ஆதலால் தன்மயமாகுதலை எந்த அளவிற்கு வளர்த்தால் சிஸ்டம் நிலைபெறுமோ அந்த அளவிலேயே தன்மயமாகுதலை கொள்ள வேண்டும்.

அவ்வமைப்புணர்வை வளர்க்க பாவங்களில் தன்மய மாவதோடுமட்டுமல்லாமல் சிந்தித்தலும் தேவைப்படுகிறது. பாவங்களும் தன்மயமாகுதல் என்கிற ரஸங்களும் அமைப்புணர்வும் நசியாதுபோய் சீரான முறையில் ஒழுங்குபடும் அளவிற்கு சிந்தித்தல் தேவை.

பாவங்கள் பல. அவைகளில் தன்மயமாகும் ரஸங்களும் பல. காதல் வீரம் சோகம் ரௌத்திரம் சந்தோஷம் அச்சம் அருவெறுப்பு விந்தை அமைதி போன்று பற்பலவுள்ளன. இப்படிப் பலபல பாவங்களை ரஸிக்கும் தன்மை உடையவனே பூர்ணகலைஞ னாயும் பூர்ணரஸிகனாயும் ஆகிறான்.

பல பாவங்களையும் ஏற்று வாழும் தன்மை உடையவனே பூர்ணமானவன். அதனால் பயனுண்டு. வாழ்வு முழுவதும் ஒரே பாவத்தையே விடாப்பிடியாகப் பிடித்து மற்றபாவங்களை வெறுப்பவன் அவன் வெறுக்கும் பாவங்களைக் கொண்டுதான் வாழ்ந்தாகவேண்டும் என்கிற கட்டாயம் வருகையில் வாழ்வையே வெறுத்துவிடுவான். எல்லா பாவங்களையும் ரஸிக்கும் மனிதனோ

எங்கும் எதிலும் சிறப்போடுதான் விரும்பியே வாழ்வான். நண்பர்களோடு வாழுதல் மட்டிலும் பிடித்திருந்தால் மட்டிலும் போதாது. தனிமையும் பிடித்திருக்கவேண்டும். வீரமிருந்தால் மட்டும் போதுமா? அத்துடன் வினயமும் இருத்தல் வேண்டும். விளையாடினால் மட்டும் போதுமா? கல்வியும் கற்றல் வேண்டும். உள்முகமாக இருந்தால் மட்டும் போதாது. வெளிமுகமாயும் இருக்க வேண்டும். காதலையும் சோகத்தையும் விரும்பினால்மட்டும் போதுமா? வீரத்தையும் வியப்பையும் விரும்பவும் வேண்டும். அமைதியும் ரௌத்திரமும் நமக்குப் பிடித்திருக்க வேண்டும்.

நாணம் முதலியவை உள்ளடங்கிய ம்ருதுத்தன்மை பெண்மையின் சுபாவம். கடினத்தன்மை ஆண்மையின் சுபாவம் என்று பொதுவாகக் கருதப்படினும் ஒவ்வொரு பெண்ணிற்கும் ஆண்மையும் ஒவ்வொரு ஆணுக்கும் பெண்மையும் கூடவே கலந்திருந்து அவ்வப்போது சமயத்தில் அத்தன்மைகளும் தலைதூக்குவது நன்று. ஆண்மையும் பெண்மையும் ஒருங்கே கொண்டவனே நிறை மனிதன். இரண்டையுமே கொள்வது எப்படி. வீரமும் காதலும் ஒருங்கே கொள்ளுதல் எங்ஙனம்? உள்ளேயும் வெளியேயுமாய் இருப்பது எங்ஙனம்? எனில் இவ்வெல்லாவற்றையும் ஒருங்கே கொள்ள இரு முறைகளே உள்ளன.

அ. எல்லாவற்றையுமே விரும்பிப் பயிலவேண்டும்.

ஆ. இவ்வெல்லாபாவங்களையும் கிளப்பிவிடும் பற்பல வெளிவஸ்துக்கள் உள்ளன. அவைகளை விரும்பி அவைகளுடன் பழக வேண்டும். உதாரணமாக அடர்ந்த இயற்கை எழிலும் அதன் நடுவிலே உள்ள ஆச்ரமசூழ்நிலையும் அமைதியுணர்வை ஏற்படுத்துவதால் அதில் வசித்து அத்துடன் பழகுகையில் அமைதியில் நாட்டமிருக்கும். இது போதுமா? போர்களத்திலும் பழக வேண்டும். இரண்டுமே இயலாதெனில் இவ்விரண்டைப் பற்றிய வர்ணனைகளையாவது படிக்கவேணடும். அல்லது இவ்விரண்டையுமே ரஸிப்பவர்களுடன் பழகவேண்டும். ம்ருதுவான பெண்களுடன் பழகுகையில் அவர்களின் தன்மையில் பிரியமும் அதனால் அத்தன்மை நம்மிடம் குடிகொள்வதும் ஏற்படும். போர்வீரர்களுடன் பழகினால் அவர்களின் வீரத்தில் ப்ரியமும் அதனால் நமது வீரத்தில் வளர்ச்சியும் ஏற்படும். இவ்வாறே பலவேறு

விதமான பாவங்களுடையவும் ரஸங்களுடையவும் இருப்பிடமாக நாம் இருத்தல் வேண்டும்.

பொதுவாக சிறப்பான கவியின் தன்மை எவ்விடத்திலும் உயிரோட்டத்தைக் காணுதலாகும். ரஸனையின் சக்தி கவிக்கு ஸ்வபாவமானது. உயிரோட்டத்தையே நன்கு ரஸிக்கமுடியும். ரஸனை உயிருடன் கலந்தது. உயிராய் நிற்கிறது. அது எங்கும் உள்ளது. கவி தவத்தால் அதிலிருந்து தன் உலகாகிய கலையை படைக்கிறான். உண்மைக்கவியின் வெளிப்பாடான கலை ஸுகமயுமாகும். க்ஷேமத்தை அளிக்கும். மதுரமாய் இருக்கும். அவனின் ஆன்மாவிலிருந்தே வெளிப்பட்டிருக்கும். பெறுபவனின் ஆன்மாவையே தொட்டுவிடும். அவ்விதமான ஒரு படைப்புதான் இந்தப் ப்ரபஞ்சமே. இந்தப் ப்ரபஞ்சம் கடவுள் என்கிற கவியால் பாடப்பட்ட ஒரு பாட்டு. வரையப்பட்ட ஒரு ஓவியம். செதுக்கப்பட்ட ஒரு சிற்பம். ஆடப்பட்ட ஒரு நாட்டியம். இயற்றப்பட்ட ஒரு கவிதை. அவரின் தவத்தால் இவ்வுலகம் உதித்ததால் இது ஸுகமயமானது. க்ஷேமத்தை அளிக்கவல்லது. மங்களமானது. என்றுமே உண்மை தவத்தின் பயன் ஸுகமாயும் மங்களமாயும் அல்லவோ இருக்கும்? பார். இந்தப்ரபஞ்ச அமைப்பை. எவ்வளவு அழகு! எங்கும் உயிரோட்டம் கொண்டுள்ளது. இது செடிகொடிகள் மலைகள் மரங்கள் அருவிகள் ஆறுகள் வானம் நக்ஷத்திரங்கள் ஸூர்யன் நிலவு பகல் இரவு கடல் காடு இவையாவும் உயிரோட்டமே. இவை கடவுளின் மனதில் ஸூக்ஷ்மமாய் குடிகொண்ட ரஸனாசக்தியிலிருந்து எழுந்தவை. இந்த ரஸனையே ஸோமதேவன்.

கடவுளே முதல் கவி. அவர் ஆதிகவி. அவரின் இதயத்தில்தான் முதலில் இச்சோமதேவன் ஸூக்ஷ்மமாய் இருந்தது. அது கடவுளின் மனத்திலிருந்து முதலில் இப்பிரபஞ்சமாய் வெளிப்பட்டது. இக்கவிதை உண்மைக்கவிதையாதலால் இதில் நல்லோர்களுக்கு நன்மையும் தீயோர்களுக்கு தீமையும் நற்செயல்களுக்கு நல்ல அன்பளிப்புகளும் தீயச்செயல்களுக்கு தண்டனையும் கிடைக்கிறது.

நல்லோர்களுக்கு இக்கவிதை உண்மைக்கவிதையாதலால் மதுரமான ம்ருதுவான கவிதையாய் உள்ளது. தீயோர்களுக்கு

கோரமான கொடூரமான கவிதையாய் உள்ளது.

பிறகு பரமாத்மனின் இதயஸமுத்திரத்திலே இருக்கும் இந்த ஸோமதேவன் ஒவ்வொரு கவியினுடையவும் மனதில் ரஸனையாய் ப்ரவஹிக்கிறது. அவதரிக்கிறது. அது கவிகளிடமிருந்து உண்மைக்கலைகளாய் வெளிப்படுகிறது

ஸோமன் என்பது நிலவைக் குறிக்கும். சரத்கால இரவிலே இது உதித்து மக்களின் மனதைக் கவருகிறது. ரஸனையை பயக்குகிறது. ஆதலாலேயே இது ரஸனையின் தேவதை. இது மூலிகைகளை. தனது கிரணங்களால் புஷ்டிப்படுத்துகிறது. அது மூலிகைகளின் உள்ளே உள்ள ஸாரத்தை அதிகரிக்கிறது. அந்த மூலிகைகளை முனிவர்கள் ஹிமாலயம் முதலிய மலைகளிலிருந்து கொண்டு வந்து பிழிந்து ஸோமரஸத்தை எடுப்பார்கள். ஸோமரஸம் ஹிதமாயும் மதுரமாயும் இருக்கும். அது ரஸனாசக்தியைக் குறிக்கும். வாழ்வுமுழுவதும் அனுபவிக்க வேண்டிய தார்மிக ரஸனையைக் குறிக்கும். வாழ்வு முழுவதும் படர்ந்து கிடக்கும் உயிரோட்டத்தைக் குறிக்கும். இது ஜடமான உடல்களுக்குள்ளேயும் ஸ்தூலப் பொருட்களுக்குள்ளே புதைந்து கிடக்கும் சைதன்யசக்தி. ஜடத்தைக் குறிக்கும் கொடிகளைப் பிழிந்தால் அதிலிருந்து ஔஷதமாய் ப்ரவஹிக்கும் சைதன்யதாரையாகும். இதை எல்லா தேவர்களும் பருகியே தங்கள் ஸாதனைகளை ஸாதகனுக்கு நலம் பயக்கச் செய்கிறார்கள். இதை ஸாதகர்கள் பருகியே ஸாதனைகள் செய்வர். இவ்விதஸோமனுக்காகவே இந்த அற்புதமான ஒன்பதாம் மண்டலம் அமைந்துள்ளது.

## இனி ரிக்வேதத்தின் ஒன்பதாம் மண்டலத்தின் ஆரம்பம்.

### (ஸோமதேவதைக்கான மந்திரங்களின் சுருக்கம்.)

ஸோமதேவருக்கு ஸ்தோத்திரங்கள். அவர் மஹிமையே மஹிமை. ஸோமனே! எங்களை உயர்த்துங்கள். எங்களுக்கு தெய்வ வொளியை அருளுங்கள். மனச்சக்திகளை பலப்படுத்துங்கள். தீயசக்திகளை ஓட்டிவிடுங்கள். இந்த ஸோமத்தை இந்திரனைப் பருகப்பண்ணுங்கள். எங்களை இப்போதிருக்கும் நிலைமையைவிட உயர்த்துங்கள். உங்களின் அனுக்கிரஹத்தால் நாங்கள் ஸூர்யனிடம்

பங்குகொள்ளுவோம். நாங்கள் தீரமாய் ஸூர்யனைக் காண்போம். தேவனே!எங்களை இப்போதிருக்கும் நிலமையைவிட உயர்த்துங்கள்.

ஸோமனே! எங்களிடம் தனங்களை வர்ஷியுங்கள். தேவனே! எங்களை இப்போதிருக்கும் நிலமையிலிருந்து உயர்த்துவீர். எப்போதும் வெல்பவரே! வெல்லமுடியாதவரே! எங்களிடம் செல்வங்களை வர்ஷியுங்கள். தேவனே! எங்களை இப்போதிருக்கும் நிலையிலிருந்து உயர்த்துவீர். ஸாதகனின் வழிபாட்டால் சக்தி பெருகும். நீங்கள் வரங்களை வர்ஷியுங்கள். தேவனே! எங்களை இப்போதிருக்கும் நிலையிலிருந்து உயர்த்துவீர்.

ஞானியான பவமானஸோமன் பிரவஹிக்கையில் ஆனந்த சக்திகளை அளிக்கிறார். தேவனே! ப்ரவஹியுங்கள். பவித்திரரே! வீரனே! நீர் தர்மவர்தகர். தன் பெற்றோர்களான ஜோதியையும் ஜகத்தையும் ஜ்வலிக்கச்செய்பவர். வழிபாட்டாலும் அன்பாலும் ஸந்தோஷித்த அவர் நதிகளை பிரவஹிக்கச் செய்தார்.

பவித்திரமான ஸோமனை மனிதர்களே! வழிபடுவீர். அறிஞர்கள் ஸோமத்தை தேவர்களுக்காகத் தயாரித்துள்ளனர். நீங்கள் எங்கள் பசுக்களுக்கும் குதிரைகளுக்கும் மக்களுக்கும் ஆனந்தம் அளிப்பீர். இந்த ஸோமம் இந்திரக்கடவுளுக்கு. எங்கள் விருப்பங்களை திருப்திபடுத்தும். சத்ருஸம்ஹாரக ஸோமன் எங்கள் பசுக்களில் அனுக்ரஹ வர்ஷணம் பண்ணுவார். ஸோமனே! இந்திரன் மூலமாய் எங்களுக்கு பலத்தை அளிப்பீர். இந்திரனே! ஸோமத்தைப் பருகுவீர்.இந்திரனும் வாயுவும் சேருமிடத்தில் ஸோமன் அதி வேகமாய் ஏராளமாய் பிரவஹிக்கிறார். மனிதர்களே! தேவர்களுக்கு ஆனந்தம் அளிக்கும் ஸோமனை உதவிக்கு நாடுங்கள். ஸோமமே தேவர்களின் ஆஹாரம். பலப்படுத்தும் குதிரைகள் குதிரைக்காரர்களால் கிளப்பிவிடுவதுபோல் ஸோமம் கிளப்பிவிடப்பட்டு நமக்காகப் பிரவஹிக்கிறது. இந்த ஸோமம் நமக்கு பலத்தையும் தனத்தையும் அருளட்டும். இந்திரப்பிரியரான ஆனந்தமயரான ஸோமன் தீயசக்திகளை விரட்டட்டும். ஜோதியை நோக்கட்டும். நம் யக்ஞத்தில் அமரட்டும். ஸோமம் இந்திரனை வந்தடைகிறது. ஸோமனே! நீரே இந்திரனின் ஆனந்தம். மனுஷர்களை இயக்கும் நீர் அவர்களுக்கானந்தம் அளிக்கப் ப்ரவஹியுங்கள். தேவர்களுக்குப் ப்ரியமான நீர் பரமபவித்திரமான

வர். எல்லோரையும் பவித்திரமாக்குவீர். மந்திரங்களால் போற்றப் படுகிறீர். பவித்திரமான ஸோமரஸம் பிரவஹிக்கிறது. நமக்குத் தெரிகிறது. ஸோமனே! எங்களுக்கு ஜோதிஜகங்களின் செல்வங் களை வர்தனம் பண்ணுவீர், உங்களுக்காகவே வாயு வீசுகிறார். நதிகள் தங்களுக்காகவே பிரவஹிக்கின்றன. உங்களுக்காக பசுக்கள் க்ஷீரத்தைச் சுரக்கின்றன. அரசே! உங்களின் நட்பை நாங்கள் நாடுகிறோம். வனாந்தரங்களில் மிருகங்களைப்போல் ஸோம ரஸங்கள் ஸங்கீதம்கொண்டு அலைகளைப்போல் அதிவேகமாய் பிரவஹிக்கின்றன. ஜ்வலிக்கும் ஸோமரஸம் க்ஷீரத்தைச்சேர்க்க சக்தியுடன் பிரவஹிக்கிறது. இந்திரனுக்கும் வாயுவிற்கும் வருணனுக் கும் விஷ்ணுவிற்கும் மருத்துக்களுக்கும் ஸோமம் பிரவஹிக்கிறது.

குதிரைபோல் ஸோமம் அதிவேகமாய் பிரவஹிக்கிறது. ஸாதகன் லக்ஷியத்தை இப்போது அடைந்து விட்டான். மதுரமான தேனைப்போல் ஸோமம் தேவர்களுக்குப் பிரவஹிக்கிறது. எங்கள் மனச்சக்திகளைத் தூண்டிவிடும் ஸோமதேஜஸ் எங்களிடம் இருக்கட்டும்.

தேவர்களிடம் ப்ரியம் செலுத்தி தீயசக்திகளை ஒழித்துக் கொண்டே திடமான ஸோமரஸம் ஆனந்தமயமாய் பிரவஹிக்கி றது. உஷைகளாலும் ஸோமனாலும் இந்த ஸூர்யன் தோற்று வைக்கப்பெற்றார். ஸோமன் அதிவேகமாய் ரிஷிகளால் தூண்டப்பட்டு இந்திரனிடம் செல்லுகிறார். அசுரர்களைக் கொல்ல போர்க்களம் செல்லுகின்றார்.

தேவர்கள் இருக்குமிடத்தில் நானும் இருப்பேன் என்று கூறிக்கொண்டு இங்கு வாரீர். ஜோதியிலிருந்து வர்ஷியுங்கள். அன்னமளியுங்கள். ஸோமன் ஜோதியிலிருந்து பிரவஹிப்பவர். இந்த ஸோமத்தை இந்திரக்கடவுளுக்காக ரிஷிகள் வைத்துள்ளனர்.

ஸோமனே! பவித்திரமாயிருங்கள். பிரவஹியுங்கள். அமரரே! அமருங்கள். கஷ்டங்களைப் போக்குங்கள். பவமான ஸோமனே! நீர் ஜோதியைக் கண்டறிந்தவர். உயர்ந்தவர்.

எவன் யக்ஞம் செய்கிறானோ அவனே ஸோமத்தை அனுபவிக்கிறான். மற்றோர்கள் அனுபவிப்பதில்லை. ஸோமன் அகண்டமாய் விரிந்து வ்யாபித்தவர். ஜோதிர்மயர். இதயத்தால் தேவலோகத்தின் உச்சியை அடைந்தவர். இந்த காளைபோன்ற

ஸோமனே உஷையை உதிக்கச் செய்கிறார். அவர் தேவர்களையும் பரிபாலிக்கிறார். ஸாதகர்களே அவரை அடையமுடியும். அரசே! நீர் ரதத்தில் ஏறி ஆயிரம் ஆயுதங்களுடன் யுத்தம் பண்ணச் சென்று தீயோர்களை அழிக்கிறீர்.

மனிதர்கள் ஜோதியை நாடுகின்றனர். எங்கள் மந்திரங்கள் ஜோதியை நாடுகின்றன. அவரின் அறிவால் பசு விளங்குகிறது. எவன் ஜோதியை அறிந்து அமிருதத்துவத்தை மஹிமைப்படுத்து கிறானோ அவனுக்காக உலகெல்லாம் விரிந்துகிடக்கின்றன. எங்கள் மந்திரங்கள் யாவும் ஸோமனையே அழைக்கின்றன.

தேவர்களிடமிருந்து மனுஷர்களுக்கு க்ஷேமத்தை அளித்துக் கொண்டு மஹாஞானியான ஸோமதேவன் ரதத்தைப்போல் உலகம் முழுவதும் சஞ்சரிக்கிறார். ஸாதகர்களை அனுக்கிரஹிக்கிறார். ஜோதியை மஹிமைப்படுத்தி தேவர்களை ஆனந்தியுங்கள். ஸோமனே! இவையாவும் உங்களுக்கு சுலபமே.

நண்பர்களே! அமருங்கள். எவர் தன்னையே பவித்திர மாக்குகிறாரோ அவரைப் பாடுங்கள். அவருக்கு அன்பளிப்பைக் கொண்டுவாரீர். வழிபடுபவர்களுடன் ஸோமனைப் பசுவைக் கன்றுடன்போல் சேர்த்துவையுங்கள். நமக்கு சக்தியைத் தரும் ஸோமனை வருணனுக்கும் மித்திரனுக்கும் மித்திரனுக்கும் தாரீர்.

அழியாத தேவர்களின் பானமாய் உள்ளவரே! எங்களுக்கு வழிகாட்டுவீர். கஷ்டங்களையும் தீமையையும் போக்குவீர்.

ஸோமன் மனதிலுள்ள ஒரு சக்தியேயாம். தருமத்தின் நாயகன். சுவர்ண அருவியாய் பிரவஹிப்பவர். ஸங்கீதம் பாடுபவர். ஞானி. ஸோமன் பசுக்களுடன் பிரவஹிக்கிறார். நதியைப்போல் பிரவஹிக்கும் அவர் ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் ஆஹாரமாகிறார்.

காளையாகிய இந்திரன் ஸோமபானம் பண்ணி தன் சக்தியை வெளிப்படுத்துகிறார். ஆனந்தத்தையும் ஜோதியையும் தரும் ஸோமன் குதிரை களத்திற்குவருவதுபோல் வருகிறார். ஜோதிர்மய மான ஸோமன் எல்லோருக்கும் அமிருதத்துவம் என்கிற செய்தியைத் தெரிவிக்கிறார். எவரால் ரிஷிகள் தங்கள் விருப்பங் களை அடைந்தனரோ அமிருதத்துவத்தைப் பெற்றனரோ அவரே ஸோமன்.

நீதியில் பிறந்து நீதியில் வளர்ந்த அவரே ஒரு நீதி. எங்களைச்சுற்றி ஜ்வலியுங்கள். ஜ்யோதியிலிருந்து வர்ஷியுங்கள். எங்கள் விவேகத்தை வர்தனம் பண்ணுங்கள். ஜீவனத்தைத் தருபவர் ஆனந்தத்தை வர்ஷிப்பவர். இருளில் ஒளியை உண்டு பண்ணுபவர். எவரால் நாங்கள் மித்திரனையும் வருணனையும் இந்திரனையும் இங்கு கொண்டுவந்தோமோ எவர் பகனுக்கும் இந்திரனுக்கும் மருத்துக்களுக்கும் பானமோ அவரே எங்கள் சரண்யர்.

ஸோமனே! பிரவஹியுங்கள். தேவர்களிடம் பிரவஹியுங்கள். ஜ்வலிப்பவரே! அகண்டமான அம்ருதத்துவம் வாய்ந்த தேவர்களின் ஸ்தானத்தில் பிரவஹியுங்கள். எல்லா தேவர்களும் உங்களைப் பருகட்டும். நீங்கள் ஸமுத்திரம் போல் பிரவஹியுங்கள். நீர் தேவர்களின் தந்தை. தேவர்களின் ஒளியே! ஜோதிக்கும் ஜகத்திற்கும் அருளே! பிரவஹிக்கவும். பவித்திரமான ஜோதியைக் கண்டறிந்த ஆனந்தஸ்வரூபியான ஸோமன் ஆனந்தத்தைப் பிரவஹிக்கச் செய்யட்டும்.

ஸோமனே! வ்ருத்திரனை அழிக்கப் போர்களத்தில் பிரவஹியுங்கள். நீங்கள் சத்ருக்களை வெல்ல அதிவேகமாய் வாரீர். உங்கள் வெற்றியால் நாங்கள் ஆனந்திக்கிறோம். நீங்கள் ஸூர்யனை ஸ்தாபித்து ஸாதகர்களுக்கு அம்ருதத்துவத்தை அளிக்கிறீர். தேவர்கள் தங்கள் உறவை விரும்புகின்றனர்.

*சோமமுண்டு தேவர் நல்கும்*
*ஜோதி பெற்றோமே – இந்நேரம்*
*தீமை தீர்ந்தே வாழி யின்பஞ்*
*சேர்ந்து விட்டோமே – இந்நேரம்.*
*இவ்வுலகம் இனியது. இதிலுள்ள வான் இனிமை*
*யடைத்து காற்றும் இனியது.*
*ஞாயிறுநன்று திங்களும் நன்று.*
*வானத்து சுடர்க ளெல்லாம் மிக இனியன.*
*மழை இனிது. மின்னல் இனிது. இடி இனிது.*
*கடல் இனிது. மலை இனிது. காடு நன்று.*
*ஆறுகள் இனியன.*

*உலோகமும் மரமும் செடியும் கொடியும்*
*மலரும் காயும் கனியும் இனியன.*
*பறவைகள் இனிய.*
*ஊர்வனுவும் நல்லன.*
*விலங்குகள் எல்லாம் இனியவை.*
*நீர் வாழ்வனவும் நல்லன.*
*மனிதர் மிகவும் இனியர்.*
*ஆண் நன்று. பெண் இனிது.*
*குழந்தை இன்பம்.*
*இளமை இனிது. முதுமை நன்று.*
*உயிர் நன்று. சாதல் இனிது.* – பாரதி

ஆத்மா -

*யானே யாகி என்னலாற் பிறவாய்*
*யானும் அவையுமாய் இரண்டினும் வேறாய்*
*யாதோ பொருளாம்*

– பாரதி

மனதை மிகவும் உயர்த்திக் கொள்ளவேண்டும். மிக மிகவுயர்த்திக் கொள்ள வேண்டும். நான் இங்கு அமர்ந்துள்ளேன். திருச்சியில் உள்ளேன். திருச்சி தமிழகத்தில் உள்ளது. தமிழகம் தென்னிந்தியாவில் உள்ளது.

தென்னிந்தியா இந்தியாவில் உள்ளது. இந்தியா ஆசியாவில் உள்ளது. ஆசியா உலகில் உள்ளது. உலகம் ஸூர்யனைச்சார்ந்த க்ரஹங்களில் ஒரு சிறிய க்ரஹம். இதைப்போல் எத்தனை எத்தனை க்ரஹங்கள். ஸூர்யனைச்சாரா க்ரஹங்கள் எத்தனை எத்தனை. இதுவெல்லாம் சேர்ந்து ஒரு பிரபஞ்சம். இவ்வாறு பலகாலங்களாய் கோடிக்கோடிப் பிரபஞ்சங்கள் தோன்றித்தோன்றி மறைந்து கொண்டே இருக்கின்றன. காலம் என்றால் என்ன? எத்தனை நொடிகள் சேர்ந்து ஒரு நிமிடம்? எத்தனை நிமிடங்கள் சேர்ந்து ஒரு மணிநேரம்? எத்தனை மணிகள் சேர்ந்து ஒரு நாள்? எத்தனை நாட்கள் சேர்ந்து ஒரு வாரம்? எத்தனை வாரங்கள் சேர்ந்து ஒரு பக்ஷம்? எத்தனை பக்ஷங்கள் சேர்ந்து ஒரு மாதம்? எத்தனை

மாதங்கள் சேர்ந்து ஒரு ருது? எத்தனை ருதுக்கள் சேர்ந்து ஒரு அயனம்? எத்தனை அயனங்கள் சேர்ந்து ஒரு வருடம்? எத்தனை வருடங்கள் சேர்ந்து ஒரு மனித ஆயுசு? எத்தனை ஆயுசுகள் சேர்ந்து ஒரு யுகம்? எத்தனை யுகங்கள் சேர்ந்து ஒரு சதுர்யுகம்? எத்தனை சதுர்யுகம் சேர்ந்து ஒரு கல்பம்? இவ்வாறு கோடிக்கணக் கான கல்பங்கள் இக்கோடிக்கணக்கான பிரபஞ்சங்கள் தோன்றித்தோன்றி மறைந்துகொண்டே உள்ளன.இவை யாவுமே நிலையற்று பரிணாமங்களுக்கு உட்பட்டுக்கொண்டே உள்ளன. எவ்வளவு ப்ரும்மாண்டமாக இப்பிரபஞ்ங்கள்உருவெடுத்தாலும் இவைத் தோன்றித் தோன்றி மறைவனவல்லவோ. எது பரிணாமங் களுக்குட்பட்டதோ அது நிலையற்றது என்ற வார்த்தையால் கூறப்படுகிறது. கனவுகள் காண்கிறோம். மேஜிக்குக்காரன் மாயக்காட்சிகளைக் காட்டுகிறான். அவைகளை பொய் என்பர் சிலர். ஏன் அவைகளைப் பொய் என்கின்றனர்? அவை சிறிதுகாலமே நிலையற்று உள்ளதால்தான். மிக மிக அகண்டமாக நம் மனதை விரித்தால் அகண்டமான அனாதியான முடிவற்ற இக்காலத்தைக் காண்கையில் அக்காலத்தில் சிறிது சிறிது நொடிகளாகவே இக்கோடிக்கணக்கான ப்ரபஞ்சங்கள் தோன்றி மறைவதை அறிய முடியும். ஆதலாலேயே இப்பிரபஞ்சத்தை அத்வைத சாஸ்திரங்கள் கனவைப்போலும் மேஜிக்கைப்போலும் பொய் என்கிறது. ஆனால் கனவுகளையும் மேஜிக்குகளையும் உண்மை என்றும் கூற முடியும். ஏனெனில் அவை நொடிபோதிருந்தாலும் இருந்தவை இருந்தவைதானே? அவ்வுருவங்கள் தோன்றவில்லை என ஸாதிக்க முடியுமா? அவ்வாறே பிரபஞ்சமும் உண்மையே என த்வைதசாஸ்திரங்கள் கூறுகின்றன. இவ்வாறு இக்கோடிக்கணக்கான பிரபஞ்ச உருக்களை இரு கண்ணோட்டங்களிலும் காணமுடியும்.

இதைப் பொய் என்றாலும் மெய் என்றாலும் கோடிக்கணக் காணப் பிரபஞ்சவுருக்கள் வேடிக்கையாய் அலைகள் போல் தோன்றித் தோன்றி மறைகையிலே இவையாவற்றிற்கும் ஸாக்ஷியாக என்றும் இருக்கும் ஆத்மாவை இத்தத்துவங்கள் பொய் எனக் கூறமுடியாது. ஏனெனில் அது நிலையானது. ஆத்மஸாக்ஷியாகவே இப்பிரபஞ்சங்கள் தோன்றித் தோன்றி மறைகின்றன. இவைகள் நிலையற்றவை. அது நிலையானது. ஸமுத்திரம் ஸ்திரமாய் இருக்க

நுரைகளும் அலைகளும் தோன்றித் தோன்றி மறைகின்றன. ஒரு அலை போல் ஒருபிரபஞ்சம் தோன்றுகிறது. அது ஓய்வதுபோல் பிரபஞ்சம் ஓய்கிறது. பிறகு அடுத்த அலை தோன்றுவதுபோல் அடுத்தபிரபஞ்சம் தோன்றுகிறது. அது அலை ஓய்வதுபோல் ஓய்கிறது. இவ்வாறு பலகோடி அலைகளும் பிரபஞ்சங்களும் தோன்றித்தோன்றி மறைகின்றன. ஆத்மசைதன்யம் ஆத்ம ஸமுத்திரம் அகண்டமாய் நிலையாய் என்றும் எப்போதும் தோன்றாமலும் ஓயாமலும் உள்ளது. ஆத்மா உள்ளது. பிரபஞ்சம் உருபெறுகிறது. ஆத்மா உள்ளது. பிரபஞ்சம் இருக்கிறது. ஆத்மா உள்ளது. பிரபஞ்சம் மறைகிறது.

ஆத்மா உள்ளது. மனிதன் விழித்தெழுகிறான். ஆத்மா உள்ளது. மனிதன் கனவு காண்கிறான். ஆத்மா உள்ளது. மனிதன் உறங்குகிறான். இவ்வாறு பல நிலைகள் தோன்றித் தோன்றி அழிந்தாலும் ஆத்மா தோன்றி அழியாமல் நிலைத்துள்ளது. இது மாண்டூக்ய உபநிஷத்தின் ஸாரம். தோன்றி தோன்றி அழிவதால் கோடிப்பிரபஞ்சங்களும் பொய் என்றும் அழிவற்றதால் ஆத்மா உண்மை என்றும் அத்வைதம் கருதும். நிலையான ஆத்மாவில் நிலையற்றப் பிரபஞ்சங்கள் தோன்றியழிவது எங்ஙனம் எனில் அது தோன்றி அழிவதுதான் பொய்யாயிற்றே என்கிறது அத்வைதம். அவ்வாறு தோன்றி அழிவதே பொய்யெனில் அது எப்படித் தோன்றியழிகின்றன என்கிறக் கேள்வி எழ வாய்ப்பேயில் லையே. அது பொய் என்ற அறிவு யாருக்கு எனில் அங்கு அத்வைதப் பிரகாரம் கேள்வியே தவறாகிறது. ஏனெனில் அது பொய் என்கிற அறிவோ அவ்வறிவை உடைய ஜீவனோ அப்பொய்யான வஸ்துவோ பொய்தானே. ஒன்று இருப்பது பொய் என்றால் அது எப்படி உள்ளது என்ற கேள்விக்கே இடமில்லை என்பது அத்வைதக் கொள்கை.

நிலையான ஆத்மாவை உணர்ந்து தெளிந்த ஆத்மசைதன்ய ஸமுத்திரத்தில் முழுகி மிதக்கும் வாகாம்ப்ருணி என்றப் பெண் இவ்வகண்டத்தையும் அகிலத்தையும் ஆத்மாவாய் கண்டு ஓதும் வேதமந்திரங்கள் இவை.

இங்கிருந்து பத்தாம் மண்டலத்தின் ஸூக்த மந்திரங்கள்:

அஹம் ருத்ரேபி: எனத்துவங்கும் நூற்றி இருபத்தி ஐந்தாம் ஸூக்த மந்திரங்கள்: தேவீஸூக்தம்:

நான் வஸுக்களுடனும் ருத்திரனுடனும் சஞ்சரிக்கிறேன். நான் வருணன் மித்திரன் இந்திரன் அக்னி அச்விகள் இவர்களை தரிக்கிறேன். ஸோமனையும் ஸூர்யனையும் தரிக்கிறேன். ஸோமத்தை ஸமர்பிக்கும் ஸாதகனுக்கு நானே செல்வங்களை அருள்கிறேன். நானே ராஷ்டிரத்தை உடையவளாயும் செல்வங்களின் சேர்க்கையாயும் யக்ஞம் செய்பவர்களுள் முதல்வியாயயும் உள்ளேன். தேவர்கள் எனக்கு பல ஸ்தானங்களை அளித்துள்ளனர். நான் பல வீடுகளிலே பல உருவங்களில் நுழைபவள். எந்த எந்த உயிர்கள் பார்க்கின்றனவோ மூச்சுவிடுகின்றனவோ கேட்கின்றனவோ அவையாவும் சக்தியை என் மூலமே பெறுகிறார்கள். என்னை அவர்கள் அறிவதில்லை. ஸ்ரத்தை கொண்டவர்களே! கேளீர். நான் விரும்பும் மனிதனை நான் நன்மை உடைவனாயும் ரிஷியாயும் ஞானியாயும் ஆக்குவேன். நான் ருத்திரனுக்காக வில்லைச் செய்தவள். அது ப்ரும்ஹத்வேஷியை வதைக்கும். நான் புவியிலும் வானிலும் உடலிலும் மனதிலும் ஆவேசித்தவளாய் உள்ளேன். எனது மூலஸ்தானம் இதய ஸமுத்திரத்தின் மிகவும் ஸூக்ஷ்மமான உட்பகுதியே. நான் இதயஸமுத்திரத்திலிருந்து வெளிப்பட்டு ப்ரபஞ்சம் முழுவதும் வ்யாபிக்கிறேன். நானே தேவ ஸாம்ராஜ்ஜியத்தைத் தொடுகிறேன். நான் புயல்காற்றாய் மூச்சு விடுபவள். உலகங்களையும் அண்டசராசரங்களையும் தரிப்பவள் நான். புவிக்கும் விண்ணிற்கும் பரமாய் உள்ளேன். அவ்வளவு மகிமை என்னுடையது.

விளக்கம்: ஆத்மா இப்பிரபஞ்சம் முழுவதையும் கடந்ததாய் உள்ளது. அதிலிருந்து பிரபஞ்சம் தோன்றியது. அதில் உள்ளது. அது ஆத்மாவில் ஒடுங்குகிறது. அத்மாவோ ஆத்மாவாய் உள்ளது. உண்மையில் அது ஆனந்த சைதன்யம். அதை துக்கங்கள் ஏதும் பாதிப்பதில்லை. அது ஞான வடிவானது. உடலே ஆத்மாவோ என்கிற பிரமை ப்ருகுவிற்கு முதலில் வந்ததாம். அதுவல்ல என வருணன் கூற தவம் செய்து ப்ராணனே ஆத்மா என அறிய

அதையும் வருணன் நிராகரித்தார். அதற்கும் மேல் தவம் செய்து மனத்தை ஆத்மா எனக் காண்கையிலே அதையும் வருணன் நிராகரிக்க அதற்கு மேல் தவம் புரிந்து விஞ்ஞானமே ஆத்மா என அவர் கருத அதையும் வருணன் நிராகரிக்க பிறகு ப்ருகு கடுந்தவத்தால் இவையாவையும் ஆத்மா என்கிற எண்ணத்தைப் போக்கி உண்மையான ஆத்மாவைக் கண்டறிந்தார். அவ்வாத்மா விலே இப்பிராணன் மனம் விஞ்ஞானம் உடல் உட்பட யாவும் தோன்றி மறைவன. நிலையாய் நிற்பது ஆத்மா. இது தைத்தரீய உபநிடத்தின் ஸாரம்.

கணவனால் கணவனிடம் பிரியமில்லை. ஆத்மாவிடம் உள்ள பிரியத்தாலேயே கணவனிடம் பிரியம் வருகிறது. மனைவியிடம் மனைவியால் பிரியமில்லை. ஆத்மாவிடம் பிரியத்தாலே. பிள்ளைகளிடம் உள்ள பிரியம் பிள்ளைகளால் இல்லை. ஆத்மாவிடம் பிரியத்தாலேயே. சொத்துக்களில் பிரியம் சொத்துக்களால் இல்லை. ஆத்மாவிடம் உள்ளப் பிரியத்தால். தேவர்களிடம் உள்ளப் பிரியம் தேவர்களால் இல்லை. ஆத்மாவிடம் உள்ளப் பிரியத்தாலேயே. எல்லா விஷயங்களிலும் பிரியம் எல்லா விஷயங்களாலும் இல்லை. ஆத்மாவிடம் உள்ளப் பிரியத்தாலேயே. ஆத்மாவே கேட்கப்பட வேண்டியது, பார்க்கப்படவேண்டியது, தரிக்கப்படவேண்டியது என யாஞ்யவல்கியர் மைத்ரேயியிடம் சொன்னார்.

ஆத்மாவை தூலம் ஸூக்குமம் குள்ளம் உயரம் முதலியவை களல்ல என்றும் முகருவது பார்ப்பது கேட்பது ஒலி ஒளி எல்லாத் தன்மைகட்கும் அப்பால் பட்டது என்றும் உடல் ப்ராணன் மனம் இவைக்குட்படாதது என்றும் கார்கியிடம் யாஞ்யவல்கியர் கூறுகிறார்.

பௌதிகக்கண்களாலோ பௌதிகக்காதாலோ பௌதிக மனத்தாலோகூட க்ரஹிக்க முடியாதது ஆத்மா. அப்படியெனில் ஆத்மா ஜடப்பொருளோ எனக்கேள்வி எழும். ஆனால் அதுவோ புலன்களுக்கப்பால் உள்ளது. புலன்கள் எழுந்தொடுங்குவதன்றோ? அது புலன்களுக்கப்பால் ஒரு பேரானந்தம். அது மனித ஆனந்தத்தைக் காட்டிலும் பித்ருக்களின் ஆனந்தத்தைக் காட்டிலும்

தேவர்களின் ஆனந்தத்தைக் காட்டிலும் பெரிய ஆனந்தம். பரமார்த்த ப்ரக்ஞையாகிய ஆனந்தம். உண்மையான நிறைவும் சாந்தியும் அதுவே என யாக்யவல்கியர் ஜனகனுக்கு உபதேசிக்கிறார். இதுவே ப்ருஹதாரண்யக உபநிடத்தின் ஸாரம்.

குடங்கள் என்ற உருவங்கள் மண்ணிலிருந்துத் தோன்றி மண்ணில் மக்கிவிடும். இடையே குடங்கள் என்ற பெயர் பெயரளவிலேயே தவிர இப்பெயரும் உருக்களும் உருவாவதற்கு முன்பும் உருவான பிறகும் மக்கியபிறகும் உண்மையில் இருப்பது மண்ணே. பூஷணங்கள் என்றப் பெயரும் உருவங்களும் தங்கத்தில் தோன்றி தங்கத்தில் மக்கும். ஆனால் அவை தோன்றுவதற்கு முன்பும் தோன்றிய பிறகும் இருந்ததும் இருப்பதும் உண்மையில் தங்கமே. ஸூக்ஷ்மமான விதையே கிளைகள் பழங்கள் பூக்கள் யாவும் கொண்ட மரத்திற்குக் காரணம்போல் இவையாவிற்கும் ஆத்மா ஒன்றே காரணமாம் என ச்வேதகேதுவிற்கு அவரின் தந்தை உபதேசித்தார்.

வார்த்தையை விட வாக்கும் அதைவிட மனதும் அதைவிட ஸங்கல்பமும் அதைவிட சித்தமும் அதைவிட த்யானமும் அதை விட விஞ்ஞானமும் அதைவிட ப்ரதிபையும் அதைவிட அதையே வலுப்படுத்தும் அன்னமும் அதைவிட அதன் காரணமான நீரும் அதைவிட அதன் காரணமான வாயுவும் அதைவிட தீயும் அதை விட ஆகாயமும் அதைவிட ஆகாயம் முதலியவைகளை அறியும் ஸ்மரணையும் அதைவிட ஆசையும் அதைவிட ப்ராணனும் ப்ராணனை விட ஆத்மாவும் பெரியது. எதுப் பெரியதோ அதுவே ஸுகம். அல்பத்தில் ஸுகமில்லை. பெரிதே நிறைவாம் ஆனந்தம் என ஸனத்குமாரர் நாரதருக்கு உபதேசிக்கிறார். இது சாந்தோக்ய உபநிடத்தின் ஸாரம்.

எவ்வாறு தன்னிலிருந்தே சிலந்தி வலையை வெளிப்படுத்தி ஒடுக்கிக் கொள்கிறதோ எப்படி புவியிலேயே ஓஷதிகள் தோன்றி அதிலேயே மக்குகிறதோ எவ்வாறு தீயிலிருந்து பொறிகள் தோன்றுமோ அவ்வாறே ஆத்மாவிலிருந்து ப்ரபஞ்சங்கள். இதனடிப்படையிலேயே விதவிதபாவங்கள் சிந்தைகள் பிரபஞ்சங்கள் புலன்கள்யாவும் தோன்றி மறைகின்றன. ப்ரணவமே

வில். ஜீவனே (அகந்தையே) சரம். இலக்கோ ஆத்மா. ஆத்மா என்ற இலக்கை நோக்கி சரத்தைப் பிரயோகம் செய். சக்கரத்தின் அரங்கள் நாபியிலேயே உறுதிப்படுவதுபோல் ஆத்மாவில் யாவும். ஆத்ம ஸாக்ஷாத்காரத்தில் சந்தேகங்கள் ப்ரமைகள் யாவும் நீங்குகின்றன. முக்தியில் கர்மபந்தமும் இல்லை. ரிஷிகள் ஸத்தியத்தாலேயே நிறைவை அடைந்தனர். அந்த ஸத்தியமே வெல்லும். ஸத்தியமே முடிவாம் நிலை. இதுவே முண்டகோபநிடத்தின் ஸாரம்.

த்ருஷ்டிக்கு த்ருஷ்டியாயும் கேள்விக்கு கேள்வியாயும் மனதிற்கு மனதாயும் வாக்கிற்கு வாக்காயும் ப்ராணனுக்குப் ப்ராணனாயும் உள்ளது ஆத்மா. அதை அடைந்து ரிஷிகள் அம்ருதர்களாகின்றனர். எதை வாக்கால் பேசமுடியாதோ எதனால் வாக்கு பேசுகிறதோ எதைக் கண்ணால் பார்க்க முடியாதோ எதனால் கண் பார்க்கிறதோ எதை காது கேட்கமுடியாதோ எதனால் காது கேட்கிறதோ எதை மனதால் நினைக்க முடியாதோ எதை மனது நினைக்கிறதோ அதுவே ஆத்மா. இதுவே கேனோபநிடத்தின் ஸாரம். ஜீவனே தேரில் உள்ளவன். உடலே ரதம். புத்தியே ஸாரதி. மனதே கயிறு. புலன்களே குதிரைகள். அனுபவிக்கப்படும் விஷயங்களே அவை சஞ்சரிக்கும் இடம். அனுபவிப்பவன் ஜீவன். எவன் விவேகவொளியான தருமத்தைக் கொண்டுள்ளவனோ அவனே புலன்களாகியக் குதிரைகளைத் தன்வசப்படுத்த முடியும். எவன் அதைக்கொள்ளவில்லையோ அவன் விழுகிறான். தருமமான விவேகவொளி கொண்டவனோ ஆத்மாவை அடைகிறான். புலன்களைக் காட்டிலும் பொருட்கள் பெரிது. அதைவிட மனம் பெரிது. அதைவிட புத்தி பெரிது. அதைவிட ஜீவன் பெரிது. அதைவிட அவ்யக்தம் பெரிது. அதைவிட புருஷன் பெரிது. எழுமின். விழுமின். இலக்கை அடையும் வரை நிற்காதே. இலக்கு அற்பமானதன்று. இலக்கு ஆத்மஸ்வரூபமே. அதையடையும் மார்கம் கத்திகள் வைத்து அதன்மேல் நடப்பதாகும் என ஸூக்ஷ்மதரிசிகள் கூறுகின்றனர். அது சப்தம் ஸ்பர்சம் உருவம் ரஸம் கந்தம் எல்லாம் கடந்தது. அதுவொன்றே சாவைக்கடக்க வழி. ஆதியும் முடிவும் அற்றது. அணுவிற்கும் அணு. பெரிதுக்கும் பெரிது. அது இதயகுஹையில் மிளிர்கிறது. இவ்வாறு யமன் நசிகேதனிடம் கூறினார். இதுவே கடோபநிடத்தின் ஸாரம்.

ஆத்மாவிற்கு புருஷன் என்று ஒரு பெயர். புருஷன் என்றால் இதயபுரத்தில் உறைபவன் எனப் பொருள். முன்பேயே இருந்தவன் எனவும் பொருள். இந்தப் புருஷனிடமிருந்தே ப்ரபஞ்சம் வெளிப்பட்டது என்பதை மிக அழகானக் கதையாய் வேதம் உருவகப்படுத்துகிறது.

**ஸஹஸ்ரசீர்ஷா எனத்துவங்கும் தொண்ணூறாம் ஸூக்த மந்திரங்கள்.புருஷஸூக்தம்:**

ஆயிரம் தலைகள் ஆயிரம் கண்கள் ஆயிரம் பாதங்கள் கொண்ட புருஷன் புவியை வ்யாபித்து அதை அதிக்ரமித்தும் நின்றார். அண்டசராசரம் எல்லாம் இந்த புருஷனே. எது இருந்ததோ எது இருக்கிறதோ அது யாவும் இந்த புருஷனே. அவர் அளவிட முடியாதவர். அவரின் ஒருபாகமே இந்த அகில சராசரங்களும். மற்ற மூன்றுபாகங்கள் அப்பாலே ஒளியிலுள்ளது. அகிலத்திலும் அவ்வகண்டபுருஷன் வ்யாபித்தார். இவரைக் கொண்டு தேவர்கள் யக்ஞம் செய்ய எண்ணினர். வஸந்தமே இச்சடங்கிற்கு ஆஜ்ஜிய மாயும் க்ரீஷ்மமே இத்மமாயும் சரத்காலமே ஹவிசாயும் இருந்தன. இவ்வாறு தேவர்கள் இந்த புருஷனைக்கொண்டே யக்ஞம் செய்வர். அவ்வாறே ஸாத்யர்களும் ரிஷிகளும் இந்த புருஷனைக்கொண்டே யக்ஞம் செய்தனர். இப்படிப்பட்ட ப்ரபஞ்சயக்ஞத்திலிருந்து தெளிவான ஒளி எடுக்கப்பட்டது. இதிலிருந்தே ப்ராணதேவதைக்கு சொந்தமான ஆரண்ய க்ராமிய ப்ராணிகள் உண்டாயின. இந்த யக்ஞத்திலிருந்தே ரிக்வேதமும் யஜுர்வேதமும் ஸாமவேதமும் சந்தங்களும் அவதரித்தன. குதிரைகள் பசுக்கள் ஆடுகள் முதலிய ப்ராணிகள் தோன்றின. புருஷனை பலவாய் வகுத்தன. அவரின் கைகள் எவை? முகம் எது? எவை தொடைகள்? எவை பாதங்கள்? வேதியன் அவரது முகம். வேந்தன் அவரது புஜம். வணிகன் அவரது தொடைகள். வேளாளன் அவரது பாதங்கள். ஸோமன் அவரின் மனதிலிருந்து உதித்தது. ஸூர்யன் அவரின் கண்களிலிருந்து உதித்தது. முகத்திலிருந்து இந்திரனும் அக்னியும். ப்ராணனிலிருந்து வாயு. நாபியிலிருந்து புவர்லோகம். தலையிலிருந்து ஸுவர்லோகம். பாதங்களிலிருந்து பூலோகம். காதுகளிலிருந்து திசைகள். இவ்வாறு ப்ரபஞ்சஸ்ருஷ்டி. இவ்வாறு யக்ஞத்தி

னால் தேவர்கள் யக்ஞத்தைச் செய்தனர். அதுவே முதன்முதல் இருந்த தருமம். இதனால் புராதனமான தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் வாஸஸ்தானமான தேவஸாம்ராஜ்ஜியத்தை மகிமையுள்ளவர்கள் மகிமைப்படுத்தியுள்ளனர்.

விளக்கம்: விராட்புருஷனுக்கு என்ன உருகொடுப்பது? ப்ரபஞ்சம் முழுதும் அவன்கைகளே. அவன் கால்களே. அவன் முகங்களே. அவனிடமிருந்து இவ்வையகம் அறத்திற்காக உருவானதால் உருவானதே ஒரு வேள்வி. அறத்தை முகத்தால் ஓதிப்பயிற்று வைத்துச்செய்ய புருஷனின் முகத்திலிருந்து வேதியன் தோன்றினான். கைகளால் ஆண்டு செய்ய வேந்தன் புருஷனின் கைகளிலிருந்து தோன்றினான். அலைந்து அலைந்தே செய்ய தொடைகளிலிருந்தும் பாதங்களிலிருந்தும் வணிகனும் வேளாளனும் தோன்றினார்கள். இந்த வேதச்செய்தி வேதியன் வேந்தன் வணிகன் வேளாளன் எனும் நான்கு தொழில்களை சாதிகளாகக் கூறவில்லை. குலதருமத்தையே வற்புறுத்துதலுக்கு வேதத்தில் ப்ரமாணமில்லை. இங்கு எந்தத் தொழில்களையும் கீழானதாயும் வர்ணிக்கவும் இல்லை. எத்தொழிலும் ஸமமே என்பதைக் காட்டவே யாவும் புருஷனிடமிருந்து வந்ததாய் கூறப்படுகிறது. இருப்பினும் இன்றுள்ள வேதத்ரோகிகள் இன்றுள்ள சாதிப்பிரச்சனைகளுக்கு வேதமே காரணம் எனச்சொல்லவிரும்பி வேதம் முழுவதிலும் இதற்காகவே ச்ரமப்பட்டுத் தேடி இவ்விடம் மட்டிலுமே அவர்களுக்குக் கிடைக்க இவ்விடத்தை தன் பிரசாரத்திற்கு ஸாதகமாய் விளக்கிக்கொண்டு இவ்வாக்கியங்களே சாதிக்கொடுமையைத் தெரிவிப்பதாய் டாம்டாம் அடித்துக் கொள்கின்றனர்.

இவ்வாறு பிரபஞ்சமே அறத்திற்காக புருஷனிடமிருந்து ஏற்பட்ட விஷயம் கூறப்பட்டது. இம்மந்திரங்களைக் கண்டு பிடித்தவர் நாராயணர் என்ற ரிஷி. ப்ராம்ஹணம் என்கிற நூலில் புருஷனுக்கே நாராயணன் என்றப்பெயர் கூறப்படுகிறது. புராணங்களில் இந்த நாராயணரிஷி ஹிமாலயத்தில் வஸித்ததாயும் இவரே புருஷனுடைய அவதாரமாயும் தனது சீடனான நரனுக்கு தன் ரகசியத்தை அறிவித்ததாயும் கூறப்படுகிறது.

ப்ராமஹணம் என்னும் நூலில் நாராயணரைப்பற்றி வரும் வார்த்தைகள்.

**நாராயணஸூக்தம்:**

நாராயணனே புருஷன்.நாராயணன் என்பது பரம் பொருள். அவரே பரம்தத்துவம். அவரே த்யானம் செய்பவராயும் த்யானிக்கப் படுபவராயும் த்யானமாயும் உள்ளார். உள்ளேயும் வெளியேயும் வ்யாபித்தவர் அவரே. அவர் அக்ஷரமாயும் பெரு வீடாயும் உள்ளார். பரஞ்ஜோதியான சிவம் அவரே. நாராயணன் என்பது ஆத்மா. இதயத்தாமரையில் விச்வத்திற்கு ஒரு இருப்பிடம் உண்டு. இது இதய ஸமுத்திரத்தில் துலங்கும் ஜோதி. அதிலேயே யாவும் ப்ரதிஷ்டையாய் உள்ளது. அங்கு ஆத்மா விளங்குகிறது. அதுவே சிவமாயும் ஹிரண்யகர்பராயும் உள்ளது. ருதமாயும் ஸத்தியமாயும் புருஷனாயும் உள்ளது அதுவே.

இவ்வாறு ப்ராம்ஹணம் நாராயணன் என்னும் வார்த்தைக்கு ஏதோவொரு ரிஷியாகப் பொருள் கூறாமல் புருஷனாகவே கூறுகிறது. புராணங்கள் ஆத்மாவே புருஷனாயும் நாராயணனாயும் உள்ளதாய் கூறுகிறது. நாராயணனே க்ருஷ்ணனாய் அவதரித்ததாயும் நரனே அர்ஜுனனாய் அவதரித்ததாயும் காலத்தில் நஷ்டமான வேதக்கருத்துக்களை மீண்டும் ஸ்தாபிக்கவே அவதரித்ததாயும் அர்ஜுனன் குழம்பிக் கிடக்க க்ருஷ்ணன் அதையே தேர்தட்டில் உபதேசித்ததாயும் அதனால் அர்ஜுனன் தெளிந்ததாயும் மஹாபாரதம் கூறுகிறது. இந்த நாராயணனையே சங்கரரும் கௌடபாதரும் அத்வைதத்தின் ஸ்தாபகராயும் ராமானுஜர் விசிஷ்டாத்வைதத்தின் ஸ்தாபகராயும் மத்வர் த்வைதத்தின் ஸ்தாபகராயும் கூறுவர்.

புருஷனைப் பற்றி ராமாயணத்தில் கூறப்படுவது யாதெனில் -

நீர் நாராயணன். தேவன். மங்களம் பொருந்தியவர். காலசக்கரம் ஏந்தியவர். வ்யாபித்தவர். யக்ஞஸ்வரூபி. தீயசக்திகளை நசிப்பவர். அக்ஷரப்ரும்ஹம். இன்றும் நாளையும் ஸத்தியமானவர். உலகங்களுக்கு நீரே பரமான தருமம். எங்கும் ஸேனைகளைக் கொண்டவர். அந்தக்கரணவ்ருத்திகளின் ஈசன். புருஷன். புருஷோத்தமன். வெல்ல முடியாதவர். ஆகர்ஷிப்பவர். புத்தியாயும் நன்மதியாயும் பொறுமையாயும் அடக்கமாயும் யாவுமாயும் இருப்பவர். எங்கும் திசைகளிலும் ஆகாயத்திலும் ஸர்வபூதங்களிலும் தெரிகிறீர். நீரே ப்ரபஞ்சத்தை ஆயிரம் கால்களுடன் பல முகங்களுடன் தரிக்கிறீர்.

வேதாத்மாவாயும் நூறு நாக்குகள் கொண்டவராயும் ஆயிரம் த்ருஷ்டிகொண்டவராயும் உள்ளீர். ஸித்தர்களுக்கும் ஸாத்யர் களுக்கும் ஆஸ்ரயர். நீரே ஓங்காரம். உம்மால் மூவுலகங்களும் மூவடிகளால் அளக்கப்பட்டன. உமது ஆற்றலோ உமது தரிசனமோ உமது பக்தர்களோ மோகமாகமாட்டார்கள்.

இவ்வாறு ராமாயணம் கூறுகிறது. இவ்வையகமே அவனிட மிருந்து தோன்றி மறைவதேயாம். அவனை ஒரு சிற்பியாக வேதம் கூறுகிறது. இவ்வளவு அழகான ப்ரபஞ்சம் என்னும் சிற்பத்தை வடித்துள்ளான். ஒருவனின் ஆற்றல் ஆதாரமாய் இல்லாவிடில் இது எப்படி அமைப்பாய் வடிக்கப்பட்டிருக்க முடியும்? ஒரு விஞ்ஞானி மிக அழகான ஒருபடம் வரைந்து வைத்திருந்தான். அது விண்ணில் உள்ள க்ரஹங்களின் கூட்டின் காட்சியே. அவருக்கு ஒரு நாஸ்திக நண்பன் உண்டு. அவன் அங்கு வந்து அப்படத்தைப் பார்த்துப் ப்ரமித்தான். இவளவு அழகான படத்தை வரைந்தது யார்? என்றான். உடனே விஞ்ஞானி, 'அது இயற்கையாய் தோன்றிற்று' என்றான். உடனே அந்த நாஸ்திகன் 'என்ன சிறுபிள்ளைத் தனமாய் உளருகிறாய்? அதுவா எப்படித் தோன்ற முடியும்?' என்றான். அதற்கு அந்த விஞ்ஞானி, 'இச்சிறுவமைப்பே அதை அமைத்திடும் சைதன்யம் இல்லாமல் தோன்றமுடியாதெனில் இப்பேரமைப்பான பிரபஞ்சம் இயற்கையாய் தோன்றுவது எங்ஙனம்?' என்றான். இதோ பார். எத்தனை எத்தனை அமைப்புகள். மனிதவுடல் ஒரு இயந்திரமாய் இயங்குகிறது. முகத்தில் இரு ஓட்டைகள் வைத்து அதன்மூலம் பார்வையொளி வெளிப்படுத்தப் படுகிறது. அடுத்தது இருஓட்டைகளால் மூச்சு விடப்பட்டு ப்ராணன் தரிக்கப்படுகிறது. அடுத்தவோட்டை பேசுகிறது. உண்ணுகிறது. இவ்வோட்டைகள் யாவும் சேர்ந்து ஒரு முகம். பிறகு கைகள் கால்கள் வயிறு முதலியவை. எத்தனை எத்தனை நரம்பு நாடிகள். ஒன்றுக்கொன்று பிண்ணிப் பிணைந்து லக்ஷக்கணக்காய் நாடிகள் அமைந்திருப்பினும் அவையவை அவையவையின் செயல்களைச் செய்கிறது. இவ்வித ஒரு அழகிய சிற்பம் ஒரு பெரும் சைதன்யமற்று தோன்றமுடியுமா? இவ்விதமாய் எத்தனையெத்தனை சிற்பங்கள்! இவ்வெல்லாம் சேர்ந்து மற்ற எல்லா தாவரஜங்கம சிற்பங்களும் சேர்ந்து ஒருலகம். இவ்வாறு எத்தனை உலக

வமைப்புகள்! நக்ஷத்திரங்கள் க்ரஹங்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று மோதாமல் சுழண்றுகொண்டேயுள்ள அமைப்பும் பஞ்ச பூதங்களும் அடங்கி நிற்கும் பாங்கும் ஸமுத்திரமே ஒரு நொடிப்பொழுதில் கிளம்பி இச்சிறுவுலகை அழிக்காமல் அடங்கிநடக்கும் பாங்கும் ஒரு பெரியசைதன்யமற்று நடக்க முடியுமா? அது இல்லையெனில் இந்த ஜடமான இயற்கை தாருமாறாய் அல்லவோ இருக்க வேண்டும்? இது எப்போது அமைப்பாய் உள்ளதோ அப்போது இவ்வமைப்பிற்குக் காரணம் ஒன்று உண்டு என்பதை யூகிக்கலாம். அந்த அமைப்பிற்குக் காரணம் எது? என்றுகேட்பர் சிலர். ஜடத்தில் உள்ள அமைப்பிற்கும் பாங்கிற்கும் ஒரு காரணம் இருக்கலாமே தவிற சைதன்யத்தின் பாங்கிற்கும் அமைப்பிற்கும் காரணம் இருக்கவேண்டும் என்பது அவசியமில்லை. சைதன்யம் தனதிஷ்டப்படி தன்னை அமைத்துக் கொள்ளும் சக்தியை சுபாவமாயே கொண்டது. உதாரணமாக ஒரு ஜடமான கடிகாரம் அமைக்கப் பட்டிருந்தால் இதை அமைத்தது யார்? எனலாம். ஆனால் ஒரு சைதன்ய ஜீவன் நிற்கிறான் அமருகிறான் ஓடுகிறான் எனில் இவைகளை இவன் தன்னிஷ்டப்படியே செய்கிறானேயன்றி இவனை ஓட்டுவதும் அமரவைக்கவும் இவனை ஒவ்வொரு காரியமும் தனித்தனியே செய்யவைக்கவும் மற்றோராள் இருக்க அவசியமே இல்லை. இவனின் செயல்களாகிய அமைப்புகள் இவனாலேயே தன்னிஷ்டப்பிரகாரம் செய்யப்படுகிறதே. ஒரு ஜீவ சைதன்யத்திற்கே தன்னைத் தான் தன்னிச்சைப்படி செயல்களில் ஈடுபடுத்தும்படி சக்தியுண்டெனில் பெரிதான அகண்ட சைதன் யத்தை வேறு எவன் அமைக்க வேண்டும் என்கிற அவசியமுள்ளது? அது சுதந்திரமாய் செயல்களைச் செய்கிறது. அமைப்புகளை அமைக்கிறது. அது அமைப்பதையே படைப்பு ஸ்ருஷ்டி என்றெல்லாம் பெயரளவில் கூறுகிறோமே தவிற அது உண்மையில் எதையும் படைத்துவிடவில்லை. சிற்பி உருகொடுத்தமைப்பதையே படைப்பு எனக் கூறுவதுபோல் பேராத்மா அவ்யக்தமான பிரபஞ்சத்திற்கு உருகொடுப்பதையே படைப்பு என்கிறோம். இவ்வாத்மாவாகிய சிற்பி இவ்வுலகை உருவாக்குவதை கூறும் மந்திரங்கள் கீழே உள்ளன.

### ய இமா விச்வா எனத்துவங்கும் எண்பத்திஒன்றாம் ஸூக்தமந்திரங்கள்: விச்வகர்மஸூக்தம்:

இப்ப்ரபஞ்சம் முழுவதும் வடித்தவர் விச்வகர்மா. அவர் மந்திரங்களைக் கேட்டருளட்டும். யக்ஞத்தில் அவர் தனது நண்பர் களுக்கான ஸாதகர்களுக்காக மகிமைப்படுத்தப்படுகிறார். எப்போதும் தருமத்தில் உண்மையாய் நிலைத்திருப்பவர். அவரின் செயல்கள் அறநெறிகள். ஸ்ருஷ்டியக்ஞம் செய்பவர். ப்ரபஞ்சம் அவரால் விரிவடைந்தது. அவர் ப்ரபஞ்சத்தை உருவாக்கி வடித்து அழகு படுத்தியவர். ஸர்வக்ஞர். பரமபிதா. அவரே தேவர்களுக்கு மந்திரங்களை அளித்தவர். அவரிடமே ரிஷிகள் சரண்புகுந்து மந்திரங்களை காண்கின்றனர். மேல்கீழ் பாகங்களையும் எதையும் அழகாய் உருவாக்கிய கடவுள் அவர்.

### ஹிரண்யகர்ப: ஸமவர்ததாக்ரே எனத்துவங்கும் நூற்றிஇருபத்தொன்றாம் ஸூக்தமந்திரங்கள்: ஹிரண்யகர்பஸூக்தம்:

ஆதியிலே ஹிரண்யகர்பன் இருந்தார். அவர் புவியையும் விண்ணையும் உருப்படுத்தி நிலைபெறச் செய்தார். அந்த தேவனை ஹவிசுகளுடன் ஆச்ரயிக்கிறோம். ப்ராணசக்திகளை அளிப்பவரவர். தேவர்களும் அவரின் ஸங்கல்பத்திற்கு அடிபணிந்தவர்களே. ம்ருத்யுவும் அவரின் நிழலே. உயிரினங்களின் தேவர். தனது மஹிமையால் உயிரினங்களைக் காப்பவர். பனிகள்கொண்ட மலைக ளும் கடலும் உண்மையில் அவருக்கே சொந்தம். அவரின் செல்வங்கள். நான்கு திசைகளும் தேவஸாம்ராஜ்ஜியமும் அவரின் விரிவே. ஜோதியையும் ஜகத்தையும் ஸ்திரப்படுத்தினார். அந்தரிக்ஷலோகத்தை அளந்தார். அவர் ஜலங்களை தனது ஸ்ருஷ்டிசக்திகளாலும் புஷ்டிபண்ணும் யக்ஞங்களாலும் ஜீவிக்கச்செய்தவர். அவர் தேவதேவன். கர்த்தரே! ஸனாதன தருமத்தால் எம்மை ரக்ஷிக்கவும். ப்ரஜாபதியே! பரமபிதாவே! ஹிரண்யகர்பரே! நீரே அண்ட சராசரங்களிலும் வ்யாபித்துள்ளீர். வாரீர். தெய்வீகச்செல்வங்களை அருள்வீர்.

**நாஸதாஸீத் எனத்துவங்கும் நூற்றிஇருபத்தொன்பதாம் ஸூக்த மந்திரங்கள்: நாஸதஸதீயஸூக்தம்:**

ஸ்ருஷ்டிக்கு முன் ஸத்தோ அஸத்தோ இருந்ததில்லை. பொருட்களோ வெட்டவெளியோ இருந்ததில்லை. ஆதிவிதையான பேரான்மாவின் வ்யாபகம் ஒன்றே இருந்தது. முழுப்பிரபஞ்சத் தையுமே அத்துடன் ஒப்பிடமுடியாது. ப்ரபஞ்சம் கண்டம். பேரான்மாவோ அகண்டம். அதை மறைக்க வேறேதும் இல்லை. பரமார்த்த ஸத்தியம் ப்ரபஞ்சாத்மிகமான ஸத்திற்கும் அஸத்திற்கும் அப்பால்பட்டதாய் உள்ளது. அழிவோ அழியாத்தன்மையோ அன்று இருந்ததில்லை. இரவையும் பகலையும் பிரிக்க ஒன்றுமிருந்ததில்லை. ப்ராணனுக்கப்பால்பட்ட ஒன்றே அன்று கிடந்தது. அதைத்தவிற வேறேதுமில்லை. இருளில் ஒடுங்கும் இருள் இருந்தது. (இருள் என்பதற்கு விளக்கமுடியாதது என்றே பொருள்.) வேறேதும் தென்படவில்லை. அகண்டத்தில் இக்கண்டவஸ்துக்கள் யாவும் ஒடுங்கியிருந்தது. பிறகே பேரான்மாவின் தவத்தினால் இதுயாவும் தோன்றியது. சங்கற்பமே இதுயாவுக்கும் விதை. அது உந்தப்பட்டவுடன் இதுயாவும் தோன்றியது. தேவர்களும் தோன்றினர். இதைப்பற்றி ஸூக்ஷ்மதரிசிகளும் ரிஷிகளும் அபரிமிதமான தங்கள் மனத்தினால் தேடிக்கண்டனர். இப்பிரபஞ்சம் எங்கிருந்து வந்தது? இது பேரான்மாவிலிருந்து வந்தது. அதுவே இதன் விதை. அதற்கே இது சொந்தம். இது அதன் ஆற்றல்.

விளக்கம்: பேர்ரான்மா ப்ரக்ருதியைத் தன்வசம் கொண்டே செயல்களைச் செய்கிறது. ஜீவர்களோ ப்ரக்ருதிவசப்பட்டே செயல்களைச் செய்கின்றனர். இவ்விருநிலைகளையும் சிலர் கூறுவர். 'பேரான்மா ப்ரக்ருதியை தன்வசத்தில் கொண்டு செயல்களைச் செய்தலும் ஜீவன் ப்ரக்ருதிவசமாய் செயல்களைச் செய்தலும் இவ்விரண்டுமே அகண்டமான ஒரேபேரான்மாவில் நடைபெறுவது போல் காட்சியளிக்கின்றன. ப்ரக்ருதியோடு ஸம்பந்தமற்ற ஒரே பேரான்மாவே உண்மை. மற்ற இரண்டும் மாயையே' என்பர் சிலர். மற்றும் சிலர், 'ஜீவன் ப்ரக்ருதி வசப்பட்டு செயல்களைச் செய்வது ஒருண்மை. இதைவிடப் பெரும் உண்மை ப்ரக்ருதியை வசம்

கொண்டு பேரான்மா செய்யும் செயல்கள். அதைவிடப் பெரிய உண்மை பேரான்மா ப்ரக்ருதி ஸம்பந்தமற்று உள்ளது என்பது' என்பர். இவ்வாறு பலகோணங்களில் கூறுவதாலேயே பற்பல ஸித்தாந்தபேதங்கள். எத்தனையோ ஸித்தாந்தங்கள். ஸித்தாந்தங்கள் பலஇருந்து உண்மை பொய் என்கிற சில வெத்துவார்த்தைகளைக் கொண்டு சண்டை போடலாம். ஆனால் நம் இலக்கோ ஸித்தாந்தங் கள் அல்ல. பேரான்மஞானமே. அதை அறியாது அதைப்படிப்பதா லும் யூகிப்பதாலும் தர்க்கம் செய்வதாலும் ஒன்றும் தேராது. பேரான்மஞானம் ஒரு பேரானந்தம் என்கிறது வேதம். அங்கே நிறைவு உள்ளது. அதை வேதம்மூலமாய் உண்டு என்றறிந்தவுட னேயே அது இப்படியிருக்குமோ அப்படியிருக்குமோ என்று யூகித்துப் பார்ப்பது வ்யர்த்தமே. ஏனெனில் அகண்டமான அது கண்டமான இவன் யூகத்திற்கு எட்டவே எட்டாது. இவன் அதையறிய இவன் மனது அகண்டமாய் ஆதல் வேண்டும். இவன் பேரான்மாவைப் பேரானந்தம் என்று அறிந்துகொண்டவுடன் அவ்வானந்தம் இப்படியிருக்குமோ அப்படியிருக்குமோ என யூகிக்காமல் அதை அடைய வழிதேடவேண்டும். அவ்வழி வேதத்தில் தெளிவாய் கூறப்பட்டுள்ளது. அதற்கு யோகம் எனப் பெயர் வைத்துக் கொள்வோம். அவ்வழி யாது என வேதத்தில்தான் தெளிவாய் உள்ளது. யோகம் எனில் கூட்டு எனப்பொருள். நாம் யாவரும் நன்மையின் பொருட்டு ஒன்றுகூடுதல் யோகம். நாம் நமது செயல்கள் யாவையும் நன்மையின் பொருட்டு ஒன்றுபடுத்துதல் யோகம். இது யாவற்றிற்கும் மேல் நாம் யாவரும் நமது எண்ணங்கள் யாவற்றையும் ஒருங்கிணைத்து ஒரேயிடத்தில் நன்மையின் பொருட்டுக் கூட்டுதல் யோகம். இந்த யோகத்தால் சித்தசுத்திபெற்று பேரான்மாவை அடையமுடியும். வேதத்தின் பிரகாரம் அறநெறிகள்தாம் பேரர்ன்மாவை அடைவிக்கும். அறநெறிகளுக்காக எண்ணங்கள் ஒன்றுபடுதல் மிக அவசியம். நம்முள் சிதறிக்கிடக்கிற பேராற்றல்கள் ஒன்றாய் குவிந்தெழுந்து நன்மைக்காக செயல்பட்டால் அதனால் சித்தசுத்தியும் அதனால் பேரான்ம ஆனந்தமும் கிட்டும்.

இந்த யோகத்தைப்பற்றியே ரிக்வேதத்தின் கடைசீ மந்திரங்கள்.

ஸம்ஸமித்யுவஸே எனத்துவங்கும் நூற்றி தொன்னூற்றி ஒன்றாம் ஸூக்த மந்திரங்கள்:
ஸங்கமந்திரங்கள்:

ஸகலத்தையும் ஒன்றுபடுத்தும் காளையாகிய அக்னியே! வளர்க்கப்பட்டு ஜ்வலிப்பவரே! தெய்வீகச் செல்வங்களைத் தாரீர். ஒன்றுகூடுங்கள். ஒன்றுபடுங்கள். நன்மையின் பொருட்டு கலந்துரை யாடுங்கள். அறிகிற உங்கள் மனோவ்ருத்திகள் யாவற்றையும் ஒன்றுபடுத்துங்கள். அறிந்த தேவர்கள் ஒன்றுகூடியே பாகங்களைப் பெறுவர். நன்மைக்காக உங்கள் மந்திராலோசனைகள் ஒன்றுபடட்டும். உங்கள் நற்சங்கமான ஸமிதி ஒன்றாகட்டும். உங்கள் மனோவ்ருத்திகளும் சித்தங்களும் ஒன்றுபடட்டும். ஒன்றுபட்ட ஹவிசுகளால் யக்ஞம் செய்யுங்கள். உங்கள் ஹ்ருதயங்களும் மனோபாவங்களும் ஒன்றுபடட்டும்.

*வாழ்க தேவர் வாழ்க வேள்வி*
*மாந்தர் வாழ்வாரே - இந்நேரம்*
*வாழ்க வையம் வாழ்க வேதம்*
*வாழ்க தீ தீ தீ.*

- பாரதி

# மறையின் மறைபொருள்

## இரண்டாம் பாகம்

## யஜுர்வேதம்

*தீதான் வீரத்தெய்வம்.*
*தீயின் இயல்பே ஒளி.*
*தீ எரிக.*
*அதற்கு வேள்வி செய்கின்றோம்.*
*தீ எரிக.*
*அறத்தீ, அறிவுத்தீ, உயிர்த்தீ,*
*விரதத்தீ, வேள்வித்தீ*
*இவை யனைத்தையும் தொழுகின்றோம்.*
*இவற்றைக் காக்கின்றோம்.*
*இவற்றை ஆளுகின்றோம்.*
*தீயே நீ எமது உயிரின் தோழன்.*
*உன்னை வாழ்த்துகின்றோம்.*
*நின்னைப் போல எமதுயிர் நூறாண்டுவெம்மையும் சுடரும் தருக.*
*தீயே நின்னைப் போல எமதுள்ளம் சுடர்விடுக.*
*தீயே நின்னைப் போல எமதறிவு கனலுக.*
*நினதொளி நன்று. நின் செயல் நன்று. நீ நன்று.*

- பாரதி

வேதம் என்பது அனாதிகாலமாக கடவுளின் இதயமாக உள்ளது. அதன் அடிப்படையிலேயே ப்ரபஞ்சம் இயங்குகிறது. கடவுள் தன்னிதயமாகிய வேதத்தை ஜீவர்களை அனுக்ரஹிக்க ஸூக்ஷ்மதரிசிகளான ரிஷிகளிடம் அளித்தார். அவர்கள் அதை மொழிவடிவில் வெளிப்படுத்தினர். மொழிவடிவில் உள்ள வேதம் மந்திரங்களின் தொகுப்பாகவுள்ளது. இம்மந்திரங்கள் ஆழ்ந்த த்யானத்திலிருந்து உதித்தவை. இந்த வேதத்தில் பாடல்வடிவிலும் உரைநடை வடிவிலும் மந்திரங்கள் உள்ளன. பாடல்வடிவிலுள்ள மந்திரங்களின் தொகுப்பே ரிக்வேதமாகும். இந்த ரிக்வேதத்தின் குறிப்பிட்ட சில மந்திரங்களை ஒரு பத்ததியில் பாடினால் அதுவே

ஸாமவேதமாகும். இதைத்தவிர உரைநடையான மந்திரங்களின் தொகுப்பே யஜுர்வேதம் எனப்படும். யஜுர்வேதக்கருத்துக்களை அறிவது கடினம். ஏனெனில் அது பிற்காலத்தில் வந்த ப்ராம்ஹணம் என்னும் நூலுடன் கலந்துவிட்டது. எது யஜுர்வேதமந்திரங்கள் என்றும் எது ப்ராம்ஹணபாகங்கள் என்றும் காண்பது கடினம். ரிக்வேதம் இவ்வித கலப்படமற்று தெளிவாயுள்ளது. மனித வாழ்விற்கு போதுமான அறநெறிகளைக் கூறிவிடுகிறது. தெய்வீகவாழ்வை மனிதன் ரிக்வேதத்தைக் கொண்டே வாழ்ந்து விடலாம். யஜுர்வேதத்தில் கலப்படம் இருந்தாலும் ரிக்வேதத்திற்கு விரோதமற்ற நற்கருத்துக்களை ப்ராம்ஹணத்துடன் கலந்திருக்கும் யஜுர்வேதத்திலிருந்து திரட்டி எடுத்துக் கொள்ளலாம். யஜுர்வேதத்தில் மிகவும் உயர்ந்த அருமையான உபயோகமான மந்திரங்கள் அபரிமிதமாய் உள்ளன. அவைகளைத் திரட்டி அவைகளின் ஸாராம்சத்தை இங்கு அளிக்கிறோம். (ப்ராம்மணமும் இங்கு கலந்திருக்கலாம்.)

**ஒன்று:**

தேவனே! உங்களை உணவிற்காகவும் பலத்திற்காகவும் நாடுகிறோம். சிதானந்தப்ரகாசரான ஸூர்யன் நம்மை மேலும் உபாஸனைகளைச் செய்ய தூண்டட்டும். இந்தப் பசுக்கள் வதைக்கப் படாததாயும் நோய்வாய்ப்படாததாயும், த்ருடமாய் இருக்கட்டும். கொடிய எண்ணங்கள் கொண்ட திருடர்கள் நம்மை அடக்காமல் இருக்கட்டும். ஸாதகனின் பசுக்களையும் செல்வங்களையும் பசுக்களின் தேவரான ஸூர்யன் காக்கட்டும்.

நீங்கள் யக்ஞத்தை புனிதமாக்குபவர்கள். நீங்களே ஜோதியாகும். ஜகத்தாகும். நீங்கள் ப்ரபஞ்சத்தை தரிப்பவர். எங்கள் யக்ஞம் தடுமாறாமல் இருக்க அனுக்ரஹம் பண்ணுங்கள். நீங்கள் வஸுக்களை புனிதமாக்குபவர்.

இங்கு பல பசுக்கள் உள்ளன. நான் உங்களை இந்திரன்

---

*ப்ரியம் முதலியவை நிறைந்த இதயமே ஸோமம் என மத்வர் கூறுகிறார்.*

*பரமைச்வர்யம் உள்ளதாலும் பெரும் செல்வத்தையளிப்பதாலும் இந்திரன் எனப் பெயர் என மத்வர் கூறுகிறார். இவர் வலிமையைக் குறிக்கும் தேவன்.*

*முதன்மையை உடையவர் என்பதால் அக்னி எனப்பெயர் என மத்வர்*

பொருட்டு ஸோமனுடன் அபிவிருத்தி செய்கிறேன். அரக்கர்கள் அழிக்கப்பட்டுள்ளார்கள். தீயோர்கள் பொசுக்கப்பட்டுள்ளார்கள். ஸத்திய.த்தின் தேவரான அக்னியே! நான் ஸத்தியத்தை நாடுகிறேன். அதையடைய பலத்தை கொடுப்பீர். நான் ஸத்தியத் துள் நுழைந்தேன். அஸத்தியத்தில் இருந்து வெளிப்பட்டேன்.

யார் உங்களை நல்லது செய்ய தூண்டுகிறார்கள்? அவர் தூண்டுகிறார். ஏன் அவர் உங்களுக்கு வழிகாட்டுகிறார்? நன்மை செய்ய வழிகாட்டுறார்.

தீயசக்திகள் அழிக்கப்பட்டன. நான் ஜோதிஜகத்தில் சஞ்சரிக்கிறேன். ஜோதி ஜகத்தின் நாயகரே! எங்கள் ஸாதனைக்கு (யக்ஞத்திற்கு) தீங்கு செய்பவர்களை அழியுங்கள். பரிபூர்ணரே! நீங்கள தேவர்களைத் தூண்டி எங்களை புனிதமாக்குகிறீர். ஸூர்ய தேவனின் தூண்டுதலால் நான் அச்வினிகளின் பாஹுக்களாலும் பூஷணனின் புஜங்களாலும் அக்னியின் ப்ரியர்களான , ஸோம னின் ப்ரியர்களான உங்களைப் பற்றுகிறேன்.

கட்டுப்பாடற்ற அகண்டமான அதிதியிடம் இந்த பூமியிடம் ஹவ்யத்தை வைக்கிறேன்.அக்னியே! இதைக் காப்பாற்று. என் கண் கள் ஜோதியைக் காணட்டும். நான் ஸ்வர்கத்தில் சஞ்சரிக்கின்றேன்.

எப்போதும் ப்ரவஹிக்கும் சோபிக்கும் ஜலங்களே! யக்ஞத்தைப் புனிதமாக்கி முன்னேற்றுவீர்கள். உங்களை ஸூர்ய கிரணங்களால் புனிதமாக்குகிறேன். இந்திரன் வ்ருத்திரனை வதைக்க உங்களை நாடினார். நீங்கள் வ்ருத்திரனுடன் போர்செய்ய இந்திரனை நாடினீர்கள். நீங்கள் அக்னிக்கும் ஸோமனுக்கும் பிரியமானவர்கள்.

தெய்வீககர்ரியங்ளை சுத்தப்படுத்துங்கள். யக்ஞத்தை சுத்தப்படுத்துங்கள். நீங்கள் தேனைப்போல் மதுரமாய் பேசுபவர். எங்களுக்கு வீரத்தைச் சொல்லுங்கள். உங்கள் உதவியால் நாங்கள் தீயசக்திகளை அழிப்போம்.

அக்னியே! எங்கள் ஹவ்யத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்.

---

*வேகம் கொண்டதாலும் யக்ஞபலன்கள் யாவையும் புஜிப்பவர்கள் என்பதாலும் புஷ்டிபடுத்துவதால் பூஷா எனப் பெயர் என மத்வர் கூறுகிறார்.*

ஜோதிஜகத்தை த்ருடமாய் இருக்கச்செய்யுங்கள். நாங்கள் உங்களை ரிஷிகளுடையவும் தருமவீரர்களுடையவும் நலத்தின் பொருட்டு வணங்குகிறோம். தீயசக்திகளை அழியுங்கள். நீங்கள் அங்கிரஸர்களான ப்ருகுக்களான ரிஷிகளால் வளர்க்கப்பட்டவர். நான் இவ்விரண்டையும் சேர்த்துவைக்கிறேன். இவ்விரண்டும் அக்னிக்கும் ஸோமனுக்கும் ஆகட்டும். உங்களை ஸுர்யன் ஸ்வர்கத்தில் உன்னதப்படுத்தட்டும். என் மனோரதம் பூர்ணமாகட்டும். நீங்கள் வாழ்வின் சக்தி. நீங்கள் விரிவடைந்தவர்கள். நான் உங்களை தேவஸவிதாவால் தூண்டப்பட்டு அச்வினி பாஹுக்களாலும் பூஷண்புஜங்களாலும் பற்றுகிறேன். நீங்கள் இந்திரனின் தக்ஷிணபாஹு. நீங்கள் கூர்மையான ஆயுதமேந்தி சத்ருக்களை அழிப்பவர். எனது அக்னி ஓங்கட்டும்.

ஒ பூமிதேவியே! மூலிகைகளுக்கும் செடிகொடிகளுக்கும் தீங்கு செய்யாதபடியிருக்க என்னை ஆசீர்வதியுங்கள்.

ஸ்வர்கம் மழையை வர்ஷிக்கட்டும். பசுக்கள் சக்திவாய்ந் திருக்கட்டும். தேவஸவிதாவே! தீயோர்களை அடக்குவீர். அவர்களுக்கு சுதந்திரம் தராதீர். தீயசக்திகள் வீழ்த்தப்பட்டன. அரக்கர்கள் பொசுக்கப்பட்டனர். அயோக்கியர்களைப் பொசுக்குங்கள். விக்னமில்லாமல் நான் ஜோதியில் சஞ்சரிக்கிறேன்.

நீங்கள் விஷ்ணுவின் இருப்பிடம். நீங்கள் அக்னியின் நாக்கு. நீங்கள் தேவர்களைத் தூண்டுபவர்.ஸுர்யகிரணங்களால் உங்களை சுத்தப்படுத்துகிறேன். நீங்கள் பலமாய் இருக்கிறீர். நீங்கள் அம்ருதம். நீங்கள் தேவர்களுக்கும் தேவிகளுக்கும் பிரியமானவர். நீங்களே யக்ஞமுமாகும்.

இரண்டு:

யக்ஞமே! நீங்கள் உயர்ந்த ஸ்தானத்தில் கடைபிடிக்கப் படுபவர். யாவரையும் ஆகர்ஷிக்கிறீர். நீங்கள் அக்னியை தேவனாய்

---

*ஜோதிர்மயன் என்பதால் ஸுர்யன் எனப் பெயர் என்று மத்வர் கூறுகிறார். பரம்பொருளைக் குறிப்பவர்.*

*வி என்பது விசேஷத்தையும் ஷ என்பது ப்ராணனையும் ண என்பது பலத்தையும் குறிக்கும். விசேஷமான(தெய்வீகமான) ப்ராணனையும் பலத்தையும் கொண்டதால் விஷ்ணு எனப்பெயர் என மத்வர் கூறுகிறார். பொதுவாக விஷ்ணு என்றால் எங்கும் வ்யாபித்தவர் எனப் பொருள். இவர் பரம்பொருள்.*

கொண்டவர்.

நீங்கள் அதிதிக்கு குளிர்ந்த நீர்கொண்ட காற்றை தருபவர். வ்யாபித்த விஷ்ணுவின் விசேஷப் படைப்பாய் உள்ளீர். உங்களை அமரர்கள் அமருவதற்கு இங்கு பரப்பி ஆஸனங்களாக்குகிறேன். பூமியின் தேவதைக்கு உயிரினங்களின் தேவதைக்கு ஸ்தோத்திரம்.

உலகின் மங்களத்திற்கு யக்ஞம் செய்யப்படுகிறது. வாக்கைப் பவித்திரமாக்க அக்னி வணங்கப்படுகிறார். விச்வாயு உங்களைக் காப்பிற்காக மண்டலமாக வைக்கட்டும். நீரே யக்ஞத்தைக் காப்பவர். உலகைக் காக்க யக்ஞத்தில் அக்னி வைக்கப்படுகிறது. நீரே யக்ஞத்தின் ரக்ஷகர். நீரே இந்திரனின் வலதுபாஹு. மித்திரனும் வருணனும் உங்களைக் காத்தருள வேண்டும்.

புலன்களுக்கப்பாற்பட்டதைக் காண்பவரே! ஆனந்தத்தை அருள்பவரே! அக்னியே! உங்களை ஜ்வலிப்பதற்காக யக்ஞத்தில் தூண்டுகிறோம்.

நீங்கள் தூண்டுபவர். ஸூர்யன் உங்களைக் காக்கட்டும். நீங்கள் தேவஸவிதாவின் பாஹு. உங்களை இங்கு தேவர்கள் அமர ஆஸனமாய் பரப்புகிறேன், வஸுவும் ருத்திரனும் ஆதித்யனும் இங்கு அமரட்டும்.

நீங்கள் ஜோதியை அளிப்பவர். உங்களை ஹோஹோ என்பார்கள். நீங்கள் இவ்வாஸனத்தில் அமரவேண்டும். நீங்கள் ஜோதியை அளிப்பவர். உங்களை உபப்ருஹத் என்பார்கள். நீங்கள் இவ்வாஸனத்தில் அமரவேண்டும். நீங்கள் ஜோதியை அளிப்பவர். உங்களை த்ருவன் என்பார்கள். நீங்கள் இவ்வாஸனத்தில் அமர வேண்டும். அவர்கள் யக்ஞத்தில் ஸான்னித்தியம் கொண்டுள்ளனர். விஷ்ணுவே! யக்ஞத்தை காத்தருள்வீர். யக்ஞத்தைச் செய்பவனை ரக்ஷிப்பீர்.

தேவர்களுக்கு என் வணக்கம். அவர்கள் உணவளிக்கட்டும். நான் இன்று உயர்ந்த ஹவ்யத்தை எடுத்து வந்துள்ளேன். விஷ்ணுவே! என்னால் யக்ஞம் கெடக்கூடாது.

அக்னியே! உங்களுக்கு ஹவ்யத்தை அளிப்பேன். நீங்கள் யக்ஞத்தின் இருப்பிடம். இந்திரன் தன் வீரச்செயல்களை யக்ஞத்திலிருந்துதான் செய்ய ஆரம்பித்தார். ஆதலால் யக்ஞம் சக்தி வாய்ந்தது. அக்னியே! ஹோதாவே! நீங்கள் தேவர்களுக்கும்

எனக்கும் உள்ள தொடர்பாயிரும். ஜோதியும் ஜகத்தும் எங்களைக் காக்க. ஜோதி ஜோதியுடன் சேரட்டும். ஸ்வாஹா. இந்திரன் எனக்கு வலிமையை அளிக்கட்டும். எங்களை நன்மைகள் வந்தடையட்டும். எங்கள் விருப்பங்கள் பூர்த்தியாகட்டும். தேவர்களின் அனுக்கிரஹம் எங்களை வந்தடையட்டும். பூமிதேவியை வணங்குகிறேன். அவள் என்னை அக்னியைப்போல் ஜ்வலிக்கச் செய்யட்டும். அவள் அன்னை.

தந்தையான ஜோதிர்லோகத்திற்கு அன்பளிப்புகளைத் தந்தேன். அவர் அவைகளை ஏற்கட்டும். நான் ஸூர்யனின் தூண்டுதலால் அச்வினி பாஹுக்களால் பூஷணபுஜங்களால் அக்னிக்கு ஹவ்யங்களை அளிக்கிறேன்.

ஸூர்யதேவனே! இந்த யக்ஞம் ப்ருஹ்மாவான ப்ருஹஸ்பதிக்குச் செய்யப்படுகிறது. ஆதலால் இந்த யக்ஞத்தையும் என்னையும் ரக்ஷியுங்கள்.

உங்கள் வேகம் நிறைந்த மனது ஜோதியை அனுபவிக்கட்டும். ப்ருஹஸ்பதி இந்த யக்ஞத்தை விரிவாக்கட்டும். விக்னங்களிலிருந்து காக்கட்டும். எல்லாதேவர்களும் ஆனந்திக்கட்டும்.

அக்னியே! இந்த யக்ஞம் உங்களுக்கு. இதை வளர்த்து நீங்களும் வளரவும். நாங்களும் வளரவேண்டும். என் வெற்றி அக்னியினுடையவும் ஸோமனுடையவும் வெற்றிபோலாகட்டும். ஹவிஸால் நான் முன்னேற வேண்டும். அக்னியும் ஸோமனும் எங்களை வெறுப்பவர்களைத் துரத்த வேண்டும்.

நாம் உங்களை வஸுக்களுக்கும் ஆதித்யர்களுக்கும் ருத்திரர்களுக்கும் ஸமர்ப்பிக்கிறோம். ஜோதியும் ஜகத்தும் உங்களுக்கு ஜோதியை அளிக்கும். மித்திரனும் வருணனும் உங்களுக்கு வர்ஷிக்கட்டும். ஸ்வர்கம் சென்று வர்ஷியுங்கள்.

ஸர்வபக்ஷனான அக்னியே! எங்களை ஆயுதங்களிலிருந்தும் இடியிலிருந்தும் தீங்கு செய்யும் உணவிடமிருந்தும் காக்க. எங்களுக்கு விஷமற்ற உணவை அளிக்க. நான் வீட்டில் குடும்பத்துடன் சந்தோஷமாய் இருந்து உங்களை உபாஸிக்க வேண்டும். ஸரஸ்வதிக்கு என் வணக்கம்.

நீங்கள் எல்லாம் அறிந்தவர். நீங்கள் தேவர்களுக்கு

வேதத்தை அளித்ததுபோல எனக்கும் அளியுங்கள். வழியைக் காட்டும் தேவர்களே! ஸத்தியத்தை நோக்கிச் செல்லும் பாதையைக் காட்டுங்கள். மனதின் தேவனே! இந்த யக்ஞம் உங்களுக்காக. உலகை ஸ்திரப்படுத்தியது போல இதையும் ஸ்திரப்படுத்துங்கள்.

ஆதித்யர்களுடன் வஸுக்களுடன் மருத்துகளுடன் இந்திரன் விச்வேதேவர்களுடன் தர்பைகளைக் காக்கட்டும். ஸ்வாஹா. எல்லா அன்பளிப்புகளும் ஜோதிஜகத்திற்கு செல்லட்டும். யார் உன்னை பந்தத்திலிருந்து விடுபடச் செய்தார்? சக்தியளிப்பவர் என்னை பந்தத்திலிருந்து விடுபடச்செய்தார். ஏன் அவர் அப்படிச் செய்தார்? யாவருக்கும் ஆனந்தத்தைப் பெருக்க அவ்வாறு அவர் செய்தார்.

நாங்கள் சக்தியுடனும் புகழுடனும் உடல் வலிமையுட னும் உயர்ந்த புத்தியுடனும் சேர்ந்துள்ளோம். த்வஷ்டா எங்களுக்கு அருள்பாலித்து எங்கள் உடலிலும் உணர்விலும் உள்ள தீங்கை நீக்கட்டும்.

தேவனே! நீங்கள் ஜோதிர்மயமானவர். ச்ரேஷ்டமானவர். செல்வங்களை அனுக்ரஹிப்பவரே! அனுக்ரஹம் பண்ணுங்கள். நான் ஸூர்யனிடம் போகும் பாதையில் செல்லுகிறேன்.

க்ருஹதேவதையான அக்னியே! நான் உங்களுடன் வாழும் சிறந்த க்ருஹஸ்தனாய் ஆகவேண்டும். கணவனும் மனைவியுமாய் நூறுவருடங்கள் உங்களுடைய அனுக்ரஹத்தால் க்ஷேம மாயிருக்கவேண்டும். நான் ஸூர்யனின் பாதையை பின்பற்றுகிறேன். ஸத்தியதேவனே! என்னை ஸத்தியஜீவியாய் இருக்க ஆசீர்வதியுங்கள். அக்னிக்கு நமஸ்காரம். நீங்கள் ஹவ்யத்தை பித்ருக்களுக்கு எடுத்துச் செல்லுகிறீர். ஸோமனுக்கு நமஸ்காரம். நீங்கள் பித்ருக்களுடன் உள்ளீர். அக்னிதேவன் தீயவர்களை நாசம் பண்ணி அன்பளிப்புகளை பித்ருக்களிடம் கொண்டு சேர்க்கட்டும்.

பித்ருக்களே! ஹவிசுகளால் சந்தோஷப்படுங்கள். உங்களுக்கு நமஸ்காரம். எங்களிடம் உள்ளதை உங்களுக்கு

*' தேஜஸாலும் வலுவாலும் த்வஷ்டா எனப்பெயர் என மத்வர் கூறுகிறார். இவர் இவ்வழகிய பிரபஞ்சத்தை உருவாக்கிய விசித்திரமான சிற்பியான பரம்பொருள்.*

அளிக்கிறோம். எங்களுக்கு உயர்ந்த பிள்ளைகளையும் க்ருஹங்களையும் அளியுங்கள். ஜலங்களே! நீங்கள் பித்ருக்களை திருப்தி பண்ணுங்கள்.

**மூன்று:**

ஹவிசுகளை தேவர்களுக்கு ஸமர்ப்பியுங்கள். அக்னியை வணங்குங்கள். ஸர்வஸாக்ஷியான அக்னிக்கு ஹவிசை அளியுங்கள். அங்கிரஸ அக்னியே! உங்களை வர்தனம் பண்ணுகிறோம். நீங்கள் ஜோதிர்மயமாய் வளருங்கள், எங்கள் ஹவ்யங்களை ஏற்கவும்.

நீங்கள் சக்தியாயும் ஞானமாயும் ஆனந்தமாயும் உள்ளீர்கள். நான் ஸ்வர்கத்திற்கும் பூமிக்கும் ஈடாகவேண்டும்.

ஸூர்யனே! உஷாவின் முன்பு காளை வந்து அமர்ந்துள்ளது. அது ஸ்வர்கத்திற்குச் செல்லவுள்ளது. ஸூர்யகிரணங்கள் எங்கும் பரவியுள்ளதால் அவர் ஸ்வர்கம் முழுவதும் ஜ்வலிக்கிறார். அக்னியே ஜோதி. ஜோதியே அக்னி. ஸ்வாஹா. ஸூர்யனே ஜோதி. ஜோதியே ஸூர்யன். ஸ்வாஹா. இந்த அன்பளிப்பு அக்னியைப் போய் சேரட்டும். அவர் சக்திவாய்ந்த ஸூர்யனுடன் உள்ளார். இந்திரனுடனும் உஷாவினுடனும் வஸிக்கும் ஸூர்யன் இதை ஏற்கட்டும்.

ஸ்வர்கத்தின் தலைவர் அக்னி. புவியின் தலைவர் அக்னி. நான் அன்பளிப்பை அளித்து அக்னியையும் இந்திரனையும் சந்தோஷிக்கிறேன். நீங்கள் உணவை அளிப்பவர்.

அக்னியே! இது உங்கள் வாஸஸ்தானம். இதை அறிந்து எழுச்சி பெறுங்கள். எங்கள் மங்களம் வளரட்டும். ஞானிகள் யக்ஞத்தில் முதலில் அக்னியையே நமஸ்கரிக்கின்றனர். ப்ருகு முதலில் அக்னியையே வளர்த்தார்.

அக்னியே! நீர் எங்களைக் காப்பவர். எங்கள் உடலைக் காப்பீர். நீர் வாழ்வை அளிப்பவர். வாழ்வின் சக்தியைத் தாரீர். அக்னியே! என் உடலில் இல்லாத எல்லாவற்றையும் எனக்குத் தாரீர். சக்திவாய்ந்தவரே! தீயோர்களை அழிப்பவரே! நாங்கள்

---

*ப்ரகாசமானதால் உஷை எனப்பெயர் என்கிறார் மத்வர்.*
*ப்ரும்ஹஞானோதயத்தின் தேவதை.*

சக்தியுடனிருந்து உங்களை நூறு வருடங்கள் வளர்க்க வேண்டும். நான் தீர்காயுளுடன் உயர்ந்த செல்வங்களுடன் மங்களமாய் வாழவேண்டும். பசுவே! நீ அளிக்கும் உணவை அனுபவிக்கிறேன். நீ சக்தி. நான் சக்தியைப் பெறுவேன். நீ செல்வம். நான் செல்வத்தைப் பெறுவேன். நீ இங்கேயே வாஸம் பண்ணுவாய். என்னை விட்டுப் போகாதே. நீ பலவுருவங்களால் செய்யப்பட்டவள். நான் உன் உரிமையாளனாக வேண்டும். இருட்டை நீக்கும் அக்னியை தினந்தோறும் வழிபடுகிறோம்.

நாங்கள் ஸத்தியஜீவியான ரக்ஷகரான சக்திமானான அக்னியுடன் வந்துள்ளோம். அக்னியே! தந்தைப் புத்திரனிடம் அணுகுவதுபோல் எங்களை அணுகுங்கள். அக்னியே! எங்களின் நெருங்கிய நண்பராய் ரக்ஷகராய் எங்களுடன் இருந்து எங்களை ஆசீர்வதியுங்கள். ஜ்வலிக்கும் அக்னியே! உங்களை ஆனந்தத்திற்கு வழிபடுகிறோம். துஷ்டர்களிடமிருந்து எங்களைக் காத்தருள்க.

இடா தேவியே! பசுவே! அதிதியே! பசுவே! யாராலும் விரும்பப்படும் நீங்கள் இங்கு வாருங்கள். நான் உங்களிடமிருந்து எல்லா விருப்பங்களையும் பெறுவேன்.

அறிவின் தேவரான ப்ரும்ஹணஸ்பதியே! கக்ஷீவானை நீங்கள் செய்ததுபோல் ஸோமத்தைப் பெற்றவர்களை மங்களம் உடையவர்களாய்ச் செய்வீர்.

வ்யாதிகளைப் போக்கும் செல்வங்களைப் பெருக்கும் தேவன் நம்முடன் இருக்கட்டும். தேவனே! ரக்ஷியுங்கள். சத்ருக்களின் சாபங்கள் எங்களை வந்தடைய வேண்டாம்.

நாம் மித்திரன் வருணன் இவர்களின் தெய்வீக ரக்ஷிப்பைப் பெறுவோம். நாங்கள் போகும் பாதையில் தீயோர்கள் எங்களைத் தாக்க க் கூடாது. அதிதியின் புத்திரர்கள் மனிதனுக்கு சாச்வதமான ஜோதியைக் காட்டியருளட்டும்.

இந்திரனே! நீங்கள் பலனற்றுப்போனதேயில்லை. உங்கள் பக்தனுக்கு நீங்கள் எப்போதுமே அளிப்பவர். நீங்கள் பந்தமற்றவர்.

---

*அளவாக ரமிக்கச்செய்வதால் மித்திரன் எனப் பெயர் என மத்வர் கூறுகிறார்.*

*அஞ்ஞான இருளிலிருந்து நம்மைக் காப்பவர் என்பதாலும் மிகவும் சிரேஷ்டத்திற்கு அழைத்துச்செல்லுகிறார் என்பதாலும் பேரானந்தப்பெருங்கடல் என்பதாலும் வருணன் எனப்பெயர் என்று மத்வர் கூறுகிறார். வருணன் தூய்மையைக் குறிப்பவர்.*

நாங்கள் எல்லாவற்றையும் இயக்கிவைக்கும் ஸூர்யனின் கிரணங்களை த்யானிப்போம். அவர் எங்களை இயக்கட்டும். பக்தர்களைக் காக்கும் உங்கள் ரதம் எங்களுடன் இருக்கட்டும்.

தேவனே! நான் உயர்ந்த அபிஜனங்களை அடையவேண்டும். மஹாபுருஷர்களால் நான் உயர்ந்தவனாய் ஆகவேண்டும். மனிதனின் நண்பரே! என் அபிஜனங்களை ரக்ஷியுங்கள். என் பசுக்களை ரக்ஷியுங்கள். என் உணவை ரக்ஷியுங்கள்.

சக்திவாய்ந்த அக்னியே! எல்லாமறிந்தவரே! உங்களையே நாங்கள் அணுகுகிறோம். எங்களுக்கு சக்திகளை அளியுங்கள். கார்ஹபத்திய அக்னியே! நீங்கள் க்ருஹத்தின் தேவதை. அபிஜனங்களுக்கு நன்மை அளியுங்கள்.

ஓ க்ருஹஸ்தனே! அஞ்சாதே . சக்திவாய்ந்த நான் உன்னிடம் வந்துள்ளேன். ஞானத்துடன் ஆனந்தத்துடன் விளங்கும் நான் உன்னிடம் வந்துள்ளேன்.

இந்த நம் வீடு உயர்ந்த உணவுகளுடனும் பசுக்களுடனும் இருக்கட்டும். நாங்கள் ஜோதிஜகத்தின் சிறப்புகளை அடையவேண்டும். நாங்கள் அன்புகொண்ட மருத்துக்களை சந்தோஷிக்கிறோம்.

புனிதமாக்கும் ஞானஸ்னானமே! நீ எங்களிடம் பெறுகுக. எங்கள் அழுக்குகள் நீங்கட்டும்.

இந்திரனே! ஜோதிர்மயமானவரே! உம்மை வணங்குகிறோம். வாரீர். அருள்வீர். ருத்திரனே! அம்பிகையுடன் வந்து ஹவிர் பாகத்தைப் பெறுவீர். ருத்திரன் சத்ருக்களை அழவைப்பார். எங்களுக்கு சந்தோஷத்தை அளிப்பார். நாங்கள் புஷ்டியை வளர்க்கும் த்ர்யம்பகனை வணங்குகிறோம். அவர் மரணத்திலிருந்து எங்களை விடுபடச் செய்வார். சக்திக்காகவும் உணவிற்காகவும் உயர்ந்த ஸந்ததிக்காகவும் நாங்கள் ருத்திரனை நாடுகிறோம். ருத்திரனே! ஹிம்ஸிக்காதீர்கள்.

நான்கு:

நாங்கள் யக்ஞம் நடக்கும் இடத்திற்கு வந்துள்ளோம். இங்குதான் தேவர்கள் சந்தோஷிக்கிறார்கள். நான் வேதங்களால்

சோகங்களைக் கடந்து உயர்ந்த உணவுகளையும் செல்வங்களையும் அடைந்து ஆனந்திக்க வேண்டும். இந்த தெய்வீக ஜலங்கள் ஆசீர்வதிக்கட்டும். புனித மூலிகைகள் காக்கட்டும்.

இந்த ஜலங்கள் எங்களை அன்னைபோல் பவித்திரமாக் கட்டும். ஜோதியாகிற க்ருதத்தால் பவித்திரமாக்கட்டும். நான் ஜலத்தில் முழுகி எழுந்து பவித்திரமானேன். ஜலமே! எனது உடலழுக்கையும் போக்கு. நீயே தவத்தின் இருப்பிடம். நான் உன்னை தரித்து ஜ்வலிக்கிறேன்.

வாக்கிற்கும் ஞானத்திற்கும் தேவன் என்னைப் பவித்திரமாக் கட்டும். புனிதமான ஸூர்ய கிரணங்களே! என்னைப் பரிசுத்தப் படுத்தும் எனது விருப்பங்களை நிறைவேற்றுக.

யக்ஞம் சரிவர நடக்கவே உங்களை நாடுகிறோம். தேவர்களே! யக்ஞத்தில் ஆசீர்வதியுங்கள். நாங்கள் ஸ்திரமான புத்தியுடன் யக்ஞம் நடத்துகிறோம். ஸ்வாஹா. நாங்கள் ஜோதிக்கும் ஜகத்திற்கும் நன்மைக்காக யக்ஞம் நடத்துகிறோம். ஸ்வாஹா. நாங்கள் வாயுதேவரின் அனுக்ரஹத்தால் யக்ஞம் நடத்துகிறோம். ஸ்வாஹா. நாங்கள் த்யாகத்துடன் யக்ஞம் செய்கிறோம். ஞானத்தை அளிக்கும் அக்னிக்கும் ஸரஸ்வதிக்கும் ஹவிர்பாகத்தை ஸமர்ப்பிக்கிறோம். ஜ்வலிக்கும் ஜலங்களே! ஜோதிஜகத்துகளே! புவர்லோகமே! நாங்கள் ப்ருஹஸ்பதிக்கு ஸமர்பிக்கிறோம். ஸ்வாஹா. எல்லா மனிதர்களும் ஸூர்யனுடன் நட்பைநாடி மங்களம் பெறட்டும்.

நீரே ரிக்குகளும் ஸாமமும். ரிக்குகளும் ஸாமமும் யக்ஞத்தைக் காக்கட்டும். நீங்கள் ஸர்வசரண்யர். நீங்கள் எங்கும் வ்யாபித்த ஆனந்தம். நீங்கள் ஸாதகனுக்கு இந்த ஆனந்தத்தை அளியுங்கள். நீங்கள் இந்திரனின் பலம். வனஸ்பதியே! யக்ஞம் முடியும் வரை என்னைத் தீமைகளிலிருந்து காப்பாய்.

அக்னியே ப்ரும்ஹம். அக்னியே யக்ஞம். நாம் திவ்ய ஞானத்தை த்யானிப்போம். அது என்னுடன் இருக்கட்டும். மனதில் உதித்த தேவர்களே! விவேகத்தையும் ஞானத்தையும் ரக்ஷியுங்கள் .ஸ்வாஹா. இந்த ஹவிர்பாகம் உங்களுக்கே.

---

*க்ருதம் என்றால் அழுக்கற்ற தெளிவு எனப்பொருள் என மத்வர் கூறுகிறார்.*

நாம் பருகும் ஜலம் சக்திவாய்ந்ததாயும் நம் வயிருக்கு நன்மையாயும் ரஸமாயும் நோயளிக்காததாயும் இருக்கட்டும். ஜலம் மரணபயத்தை நீக்குவதாயும் தெய்வகுணங்கள் கொண்டதாயும் ஸனாதனமான தருமத்தை பலப்படுத்துவதாயும் இருக்கட்டும்.

மறுபடியும் பிறந்துள்ளேன். அறிவைப் பெற்றுள்ளேன். வாழ்வையும் ஆன்மாவையும் பெற்றுள்ளேன். அக்னியே! ரக்ஷிக்கவும்.

நீங்கள் புனிதமானவர். ஆனந்தமானவர். அம்ருதமானவர். சக்திவாய்ந்தவர். நீங்களே ஞானம். நீங்களே விவேகம். நீங்களே சக்தி. நீங்களே மனது. இந்திரனுக்காக பூஷன் வழியைக்காக்கட்டும். உன் அன்னை உன்னை இப்பாதையில் செல்ல அனுமதிக்கட்டும். உன் சகோதரன் உன் தந்தை உன் நண்பன் யாவரும் அனுமதிக் கட்டும். இந்திரனின் நலனுக்காக நீ செல்லுகிறாய். ருத்திரன் உன்னை ஆசீர்வதித்து திருப்பி அனுப்பிவைக்கிறார். ஸோமனுடன் நட்புக் கொண்டு ஸோமனுடன் மங்களமாய் திரும்பி வா.

நீ பந்தங்களைக் கடந்த அதிதி. நீயே ஆதித்யன். நீயே ருத்திரன். நீயே சந்திரன். ப்ருஹஸ்பதி உங்களுக்கு சாந்தியை அளிக்கட்டும். ருத்திரன் மங்களமாய் கடாக்ஷிக்கட்டும்.

ஜோதிக்கும் ஜகத்திற்கும் நடுவில் ஜ்வலிப்பவரே! ஸத்திய ஸ்வரூபரே! ஸூர்யனே! அன்பரே! ரிஷியே! அறிவுமயரே! வணங்கு கிறேன். ஆசீர்வதியுங்கள். நீங்களே ஸ்வர்கத்தை ஸ்ருஷ்டித்தீர். எல்லா உயிரினங்களும் வாழ்வை உங்களிடம் நாடுகின்றன. அவர்களுக்கு வாழ்வை அனுக்ரஹியுங்கள்.

நண்பரே! எங்கள் நண்பர்களை அபிவ்ருத்தி செய்யுங்கள். உங்களின் நன்மைக்காகவும் மற்றோர்களின் நன்மைக்காகவும் தீயசக்தி அழியவும் நீங்கள் இந்திரனின் வலதுபுறம் அமரவும்.

அக்னியே! என்னை தருமத்தில் நிறுத்தவும். அதருமத்தை விலக்கவும்.எனது தருமவாழ்வில் நான் வெகுகாலம் வாழவேண்டும்.

இப்போது நாங்கள் தீயசக்திகளை அழிக்கும் தருமமயமான

---

*ப்ருஹத்தான தெய்வீகவாக்கின் பதி என்பதால் ப்ருஹஸ்பதி எனப்பெயர் என்று மத்வர் கூறுகிறார்.*

ஆனந்தமயமான பாவமற்ற பாதையை அடைந்துவிட்டோம்.

ஜகத்தின் நாயகரே! நன்மை செய்யுங்கள். எங்கள் பாதையில் எங்களை முன்னேற்றுங்கள். தீயோர்கள் எங்கள் பாதையில் வந்து விக்னம் செய்யக் கூடாது.

ஸோமதேவனே! எங்கள் க்ருஹங்களுக்கு வாருங்கள். உங்களை வணங்குகிறோம். நீங்கள் அளிப்பவர். தீயோரை அழிப்பவர். எங்கள் வீடுகளுக்கு வாருங்கள்.

**ஐந்து:**

ஸோமதேவரே! நீங்கள் அக்னியின் சரீரம். யக்ஞம் பூர்ணமாவதற்காக நான் உங்களை ஏற்கிறேன். நான் உங்களை விஷ்ணுவிற்காக ஏற்கிறேன். நீங்கள் வேகமாய் பிரவஹிக்கிறீர். நான் உங்களை விஷ்ணுவிற்காக ஏற்கிறேன். நீங்கள் சக்திகளை அளிப்பவர். உங்களை நான் விஷ்ணுவிற்காக ஏற்கிறேன்.

நீங்கள் அக்னியின் பிறப்பிடம். நீங்களே சக்திக்குக் காரணம்., நீங்கள் ஊர்வசி. நீங்கள் ஆயு. நீங்கள் புரூரவஸ். உங்களை காயத்ரியாலும் த்ரிஷ்டுப்பாலும் ஜகதியாலும் அடைகிறேன்.

நீங்கள் இருவரும் ஒரே மனதுடன் ஆகுங்கள். தீமையிலிருந்து வெளியாகுங்கள். யக்ஞத்திற்குத் தீங்கு விளைவிக்கவேண்டாம். எங்களிடம் கருணைகாட்டுங்கள்.

ஞானிகளின் புத்திரரே! எங்களைச் சாபத்திலிருந்து காப்பாற்றுங்கள். அக்னிதேவன் எங்கள் யக்ஞத்தில் ஸான்னித்திய மாய் உள்ளார். எங்கள் யக்ஞத்தில் எல்லா தேவர்களும் ஸந்தோஷ மாய் கூடியுள்ளனர்.

அக்னியே! நீங்கள் என்னுடனும் நான் உங்களுடனும் இருக்கவேண்டும். நீங்களே செல்வங்களின் இருப்பிடம். நான் வாஸம்பண்ண வேண்டிய இடம். நீங்கள் எங்களை சோகத்திலிருந்து காக்கவும். அங்கிரஸ் ஆயு என்பது உங்கள் பெயர்கள். தேவர்களின் ஸந்தோஷத்திற்காக உங்களை ஸ்தாபிக்கிறேன்.

வஸுக்களுடன் இந்திரன் உன் கிழக்கு பக்கத்தைக் காக்க. வருணன் ருத்திரர்களுடன் காக்க. வலதுபக்கத்தை பித்ருக்களும் இடபுறத்தை விச்வகர்மாவும் ஆதித்யர்களுடன் காக்க.

நீ சத்ருக்களை ஒழிக்கும் சிங்கம். தேவர்களுக்காக தயாராவாய். நீ சத்ருக்களை ஒழிக்கும் சிங்கம். தேவர்களுக்காக பரிசுத்தமாவாய். நீ சத்ருக்களை ஒழிக்கும் சிங்கம். தேவர்களுக்காக நீயே உன்னை அழகு படுத்துவாய்.

ஞானிகள் ஆன்மநாட்டம் கொண்டு மனதையும் விவேகத்தையும் அதன் மூலத்தையும் தீவிரமாய் த்யானிக்கிறார்கள். அவர்களின் நிலையை ஸூர்யனே அறிகிறார். ஸூர்யன் அவர்களின் அபிலாஷையைப் பூர்த்தி செய்கிறார். ஸூர்யனுக்கு எங்கள் நமஸ்காரம். ஸ்வாஹா.

எங்கும் வ்யாபித்த தேவன் உலகை இயக்குகிறார். அவரே பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் இவைகளைப் படைத்தார். உலகே அவரின் சரணங்களில் உள்ளது. அவருக்கு ஹவிர்பாகத்தை அளிக்கிறோம்.

பூமிதேவியே! நீங்கள் மதுரமான உணவைக்கொண்டவள். நீங்கள் உயர்ந்த நிலங்களைக் கொண்டவள். நீங்கள் மனிதர்களுக்கு ஸேவை செய்பவள். விஷ்ணுவே ஜோதியையும் ஜகத்தையும் தனித்தனியே படைத்து ஜகத்தை செழிப்பாக்கினார்.

நான் இப்போது விஷ்ணுவின் வீரச்செயல்களைக் கூறப்போகிறேன். அவர் ஜகத்தையே அளந்தவர். மூன்றடிகளால் ஜோதியையும் ஜகத்தையும் அளந்தவர்.

விஷ்ணுவே! ஜோதியினுடையவும் ஜகத்தினுடையவும் செல்வங்கள் உங்கள் கைகளில் உள்ளன. புவர்லோகத்தின் சொத்துக் களும் உள்ளன. எங்களுக்கு அவைகளைத் தாரும். உங்களை இந்த யக்ஞத்தில் வணங்குகிறோம்.

எவரின் மூன்று அடிகளால் மூவுலகங்களும் ஸ்தாபிக்கப் பட்டவையோ அந்த விஷ்ணு சிங்கத்தைப்போல் மலைமேல் ஜ்வலிக்கிறார்,

நீங்கள் சுயசக்தி வாய்ந்தவர். தீயோர்களை ஒழிப்பவர். மனிதர்களின் அரசன். ஸ்வர்கம் நிலைக்கட்டும். புவர்லோகம் நிலைக்கட்டும். பூலோகம் நிலைக்கட்டும். சக்திவாய்ந்த மருத்துக்கள் உன்னை ஸ்தாபிக்கட்டும். வருணனும் மித்திரனும் ரக்ஷிக்கட்டும். நான் உந்தன் அறிவையும் சக்தியையும் செல்வத்தையும் காப்பேன்.

ப்ரும்ஹதேஜஸை வளர்க்கவும். சான்றோர்களை வளர்க்க

வும். வாழ்நாட்களை வளர்க்கவும். பூலோகமே! ஸுவர்லோகமே! நீங்கள் இந்திரனின் நிழல் போன்றவர்கள். ஸர்வசரண்யர்கள். இந்த மந்திரங்கள் இந்திரனை அடையட்டும். நீங்கள் எப்போதும் எங்கள் அன்பர்களாயிருக்க.

நீங்கள் ஸமுத்திரத்தைப் போல் விரிந்தவர். வ்யாபித்தவர். பிறப்பற்றவர். முழுப்பிரபஞ்சமே உங்களின் சக்தியின் ஒருபாகம்தான். நீங்கள் யக்ஞத்தின் இருப்பிடம். என் பாதையில் என்னை நடத்திச் செல்லவும். நான் கடவுளை அடையும் பாதையில் ஆனந்தப்படுவேனாக.

என்னை நட்புக்கண்களால் பாருங்கள். அக்னியே! உங்கள் ஸேனைகளால் ரக்ஷியுங்கள். என் ரக்ஷகராக இருங்கள். உங்களுக்கு ஸ்தோத்திரம்.

ஸோமனே! நீங்கள் பலரூபங்களை தரிக்கும் ஜோதி. தேவர்களுக்கு ஸேவை செய்பவர். நீங்கள் என் சத்ருக்களை முறியடிக்கவும். ஸோமன் இந்த ஹவிர்பாகத்தைப் பெறட்டும்.

அக்னியே! எங்களுக்கு க்ஷேமத்தையும் வாஸ ஸ்தானத்தையும் அருளி சத்ருக்களை ஒழிக்கவும். எங்கள் முன் சென்று தீய சக்திகளை அழிக்கவும்.

விஷ்ணுவே! எங்களுக்கு வாஸஸ்தானத்தையருளவும். ஜோதியை வளர்ப்பவரே! எங்கள் யக்ஞம் வளரட்டும். இந்த ஹவிர்பாகம் உங்களுக்கே.

ஸூர்யனே! இந்த ஸோமம் உங்களுக்கு. அதனை நன்கு காப்பீர். ஸோமனே! நீங்கள் தெய்வங்களுடன் தெய்வமாய் சேர்ந்துள்ளீர்கள். நானும் என் அபிஜனங்களுடன் சேர்ந்துள்ளேன். இந்த ஹவிர்பாகம் வருணனுக்கே.

ஆறு:

தேவஸவிதாவின் தூண்டுதலால் அச்வினி பாஹூக்களாலும் பூஷணபுஜங்களாலும் உன்னைப் பற்றுகிறேன். நீ ஒரு பெண், உன் கணவனான நான் சத்ருக்களை ஒழிப்பேன். நம் பித்ருக்களின் வாஸஸ்தானம் புனிதமாயிருக்கட்டும். நீயே பித்ருக்களின் வாஸஸ்தானமாகுக.

நீங்களே எங்கள் தலைவர். நீங்கள் உயர்ந்த தலைவர்களை

ஸ்தாபித்தவர். எவர் உங்களை ஆள்கிறாரோ அந்த தேவஸவிதா உங்களை ஸோமனால் ஆனந்திக்கச் செய்வார். நீங்கள் ஜோதியைத் தொட்டு புவர்லோகத்தையும் பூர்ணமாக்கி பூலோகத்தையும் சக்தி பெறச்செய்தீர்.

நாங்கள் ப்ரவேசிக்க விரும்பும் தங்கள் வாஸஸ்தானம் ஜோதிர்மயமானது. விஷ்ணுவின் உயர்ந்த விசாலமான விக்ரமம் அங்கு ஸ்தாபிக்கப்பட்டது. நீங்கள் ப்ரும்ஹக்ஷத்திரங்களைக் காப்பீர். மக்களைக் காப்பீர்.

மனிதர்களே! விஷ்ணுவின் மஹிமைகளைப் பாருங்கள், இந்திரனின் நண்பரான அவர் மஹிமைப்படுத்தப்பட்டுள்ளார். ஜோதியில் விஷ்ணுவின் மூலஸ்தானத்தைக் காணுங்கள். அதையே எப்போதும் ஆச்ரயிங்கள்.

நீர் ஸர்வவ்யாபி என்று ஸூக்ஷ்மதரிசிகள் கூறுவார்கள். ஸாதகனுக்கு எல்லா பக்கங்களிலும் நன்மை வரட்டும். ஸாதகனே! நீ ஜோதியின் பிள்ளை. உலகம் முழுவதும் வாழ்பவர்கள் உன் நண்பர்களாகட்டும். விலங்குகள் யாவும் உன்வசமாகட்டும்.

நீங்கள் ரக்ஷகர். மக்களின் சோகத்தைப் போக்குவீர். நீர் சான்றோர்களை அபிஜனங்களாக அடைவீர்களாக.

மக்களே! சந்தோஷியுங்கள். ப்ருஹஸ்பதி நம் செல்வத்தை ரக்ஷிக்கட்டும். நான் உன்னை அஞ்ஞான பந்தத்திலிருந்து விடுதலை செய்கிறேன். தைரியமாக இரு. அஞ்ஞானத்துடன் போர் புரிந்து வெற்றி பெறுவாய். ஞானத்தைப் பெறுவாய்.

பாக்கியவதியானப் பெண்ணே! யக்ஞம் செய்யும் உன் கணவனிடம் அன்பை செலுத்து. விரிந்த ஆகாயம் காற்றைக் காப்பதுபோல் நீயே அவனைக் காக்கவேண்டும். பெண்ணே! நீ யக்ஞம் செய், நீ கணவனுடன்கூடி பிள்ளை பெறுவாய். சந்தோஷத்தை அளிப்பவரே! யக்ஞத்தில் இவளை ரக்ஷியும்.

பாம்பைப்போல் விஷம் கொண்டும் காட்டுவிலங்குகள் போல் பயங்கரமாயும் ஸாதகனே! நீ இராதே. ஜலத்தால் பவித்திரமாக்கப்பட்டு ஸத்தியத்தின் பாதையில் செல். ஜலங்களே! பவித்திரமானவர்களே! எங்கள் ஹவிர்பாகத்தை தேவர்களிடம் தெரியப்படுத்துங்கள். நாங்கள் எல்லாவற்றையும் பெறவேண்டும்.

நான் உன் வாக்கை சுத்தமாக்குவேன். உன் ப்ராணனை

சுத்தமாக்குவேன். உன் உபஸ்தத்தை சுத்தமாக்குவேன்.

உன் மனது பூர்ணமாகட்டும். உன் ப்ராணன் சக்தியுடையதா யாகட்டும். உன் திருஷ்டி பூர்ணமாகட்டும். உன் ச்ரோத்திரம் சக்திகொள்ளட்டும். உன் தினங்கள் அனுக்கிரகிக்கப்படட்டும். உன் விருப்பங்கள் நிறைவேறட்டும். மூலிகையே! அவனை ரக்ஷிப்பாய். தீமை செய்யாதே. ஆயுதங்கள் உன்னைக் காக்கட்டும்.

தீயசக்தியே! நீ அஸுரனுடையது. தீயோர்களை இருள் சூழ்ந்த இடத்திற்கனுப்புகிறேன். ஹவிர்பாகத்தை அக்னியும் வாயுவும் பெறட்டும். ஸ்வாஹா.

ஜலங்களே! நீங்கள் என்னை தீமைகளிலிருந்து
பரிசுத்தப் படுத்துங்கள். உன் மனது த்ருடமாகட்டும். உன் மூச்சு வாழ்வின் சக்தியுடன் ஆகட்டும். நீ சத்ருக்களை வெல்பவன். உன்னை அக்னி வளர்ப்பார். ஜலங்களால் பரிசுத்தப்படும் நீ ஸூர்யனாலும் வாயுவாலும் காக்கப்படுகிறாய்.

ஜோதியை ஏற்பவர்களே! நீங்கள் ஆனந்தியுங்கள். நாங்கள் எல்லா திசைகளிலிருந்தும் ஹவிர்பாகத்தை ஸமர்பிக்கிறோம்.

கடலில் கப்பலில் ஏறிச்செல். ஆகாயவிமானங்களில் யாத்திரை செய். ஸூர்யனைச் சென்றடைவாய். ஸ்வாஹா. மித்திரனை யும் வருணனையும் சென்று அடைவாய்.

வேதத்தையும் அதன் சுவைப்பயனையும் அறிவாய். யக்ஞத்தை அறிவாய். பூலோகத்துடையவும் ஸுவர்லோகத்து டையவும் அறிவைப் பெறுவாய். என் புத்திக்கும் இதயத்திற்கும் நன்மையளிப்பாய்.

ஜலங்களுக்கு தீங்கு வேண்டாம். மூலிகைகளுக்கு தீங்கு வேண்டாம். பசுக்கள் அழியவேண்டாம். ஜலங்கள் எங்களுக்கு நண்பர்களாகட்டும். நல்ல உணவைத் தரும் ஜலங்கள் யக்ஞத்திற்கு நன்மை செய்யட்டும். ஸூர்யன் யக்ஞத்திற்குப் பரிசளிக்கட்டும். நீ இந்திரனுக்கும் அக்னிக்கும் பாகம், நீ வருணனுக்கும் மித்திரனுக்கும் பாகம். நீ தேவர்களுக்கு பாகம்.

ஸோமனே! உங்களின் அன்பர்களை தந்தையைப்போல் வந்தடைவீர். அக்னியே! என் வாக்கியங்களைக் கேட்பீர். ஜலங்களே! கேளுங்கள். ஸூர்யன் எங்கள் வாக்கியங்களைக் கேட்கட்டும். ஸ்வாஹா. அக்னியே! நீங்கள் எவனைப் போர்களத்தில்

காப்பீர்களோ அவன் உயர்ந்த உணவை அடைகிறான்.

என் மனதையும் வாக்கையும் ப்ராணனையும் த்ருஷ்டியையும் ஸ்ரோத்திரத்தையும் செல்வங்களையும் அபிஜனங்களையும் த்ருப்தி பண்ணுவீர்.

நான் உன்னை வஸுக்களுடனும் ருத்திரர்களுடனும் ஆதித்யர்களுடனும் கூடிய ஸோமத்தை பிரவஹிக்கச் செய்யும் இந்திரனுக்காக வைத்துள்ளேன். ஸோமனே! உமது ஜோதி ஸ்வர்கத்திலும் புவியிலும் புவர்லோகத்திலும் விரிவடைந்து ஸாதகனைக் காக்கிறது.

பெண்களே! அஞ்சேல். தைரியம் பெறுங்கள். உங்கள் துக்கம் ஒழிந்தது. சந்தோஷப்படுங்கள்.

அன்னையே! உங்களைக் காண நான்கு திசைகளிலிருந்தும் நான் ஓடிவருகிறேன். இந்திரனே! சக்திவாய்ந்தவரே! மனிதனுக்கு அனுக்கிரஹம் பண்ணுங்கள்.

ஏழு:

மனிதனே! வாக்தேவதைக்காக பரிசுத்தனாயிரு. ஸூர்ய கிரணங்களால் பரிசுத்தமாகு. உன்னை ஸ்வீகரிக்கும் தெய்வங்களுக்காக பரிசுத்தனாயிரு.

ஸோமனே! எங்கள் உணவுகளை மதுரமாக்குங்கள். வெற்றிதரும் தங்கள் தெய்வீகத் திருநாமத்திற்கு இந்த ஹவிர் பாகத்தை ஸமர்ப்பிக்கிறேன். ஸ்வாஹா.

நீ ஜோதியின் ஜகத்தின் சக்திகளிலிருந்து புலன்களுக்கு க்ஷேமமளிக்க யாவருக்கும் நன்மையளிக்க சுயமாகவே பிறந்தாய். நான் உன்னை ஜோதியைக் காக்கும் தேவர்களுக்கு அளிக்கிறேன். ஸூர்யனை அடைவதற்காக பரிசுத்த மனதிற்காக நீ இரு. உனது சத்ருக்கள் ஒழியட்டும். யமநியமங்களுக்கு நீரே தேவன். ஆதலால் உங்கள் உட்சக்திகளைக் கட்டுப்படுத்துங்கள். உங்களுக்கு வரும் சோகத்தை யோக சக்திகளால் கட்டுப்படுத்துங்கள். இதனால் அன்னத்தையும் செல்வங்களையும் அடையலாம்.

நான் உன்னை பூர்புவஸ்ஸுவர்லோகங்களில் வைக்கிறேன். ஆகாசம் முழுவதும் உனக்குள் அடக்கம். தேவர்கள் மத்தியில் வாழ்ந்துகொண்டு மக்களை ரக்ஷிப்பாய்.

வாயுதேவனே! எங்களுக்கு உயர்ந்த குணங்களைத் தாரும். உமது ஹவிர்பாகத்தைப் பெறவும். இந்திரனே! வாயுவே! இந்த ஸோமம் உங்களுக்காகட்டும். இது உமதிருப்பிடம். இது உங்களுக் காகட்டும். இந்த ஸோமனை வருணனுக்கும் மித்திரனுக்கும் ஸமர்ப்பிக்க ஸ்தாபிக்கிறோம். எங்கள் மந்திரங்களைக் கேளும். நான் உன்னை மித்திரனுக்கும் வருணனுக்கும் அளிக்க இப்பாத்திரத்தில் வைக்கிறேன்.

தேவர்கள் ஹவிர்பாகங்களால் சந்தோஷிப்பதுபோல் நாமும் செல்வங்களால் சந்தோஷிக்க வேண்டும். இந்திரனே! வருணனே! இது உங்கள் வீடு. வாருங்கள். எங்களுக்குப் பசுக்களைத் தாருங்கள். அச்விகளே! தங்கள் தேன்சொட்டும் மொழிகளால் யக்ஞத்தைப் பூர்த்திபண்ணுங்கள். உங்களின் யமநியமங்களுக்காக நாங்கள் உங்களை ஏற்கிறோம். இது உங்கள் வாஸஸ்தானம். உங்களுக்காக ஸோமம் உள்ளது.

ஸோமனே! நாங்கள் தங்கள் சக்திகளையும் முடிவற்ற செல்வங்களையும் அடையவேண்டும். உங்களுக்கிந்த ஹவிர்பாகம். அவரே முதல் ரிஷி. சக்திவாய்ந்த அந்த இந்திரனுக்கு ஸோமத்தை அளிக்கிறோம். யக்ஞம் செய்பவர்கள் ஹவிர்பாகத்தால் இந்திரனை த்ருப்தி செய்யட்டும். அக்னியை அடையட்டும்.

எந்த தேவர்கள் ஸ்வர்கத்திலும் உலகிலும் நீரிலும் உள்ளனரோ அவர்கள் இந்த யக்ஞத்தை ஏற்கட்டும். சந்தோஷிக்கட்டும்.இந்த ஸோமம் புரோஹிதருக்கும் யக்ஞம் செய்பவருக்கும் உள்ளது. உணவையும் சக்தியையும் அடைய இது உள்ளது. புவியையும் ஸ்வர்கத்தையும் த்ருப்திசெய்ய இதுவுள்ளது. உயர்ந்த வாழ்விற்கு இது உள்ளது. எல்லா தேவர்களுக்குமிது உள்ளது.

நான் உன்னை இந்திரனுக்காக ஏற்கிறேன். உன் வாஸஸ்தான மான விஷ்ணுவிற்காக ஏற்கிறேன். யக்ஞம் தீர்கமாய் இருக்கவும் தெய்வங்களின் ரக்ஷணைக்கும் உன்னை ஏற்கிறேன். நான் உன்னை மித்திரனுக்கும் வருணனுக்கும் ஏற்கிறேன். நான் உன்னை

*பலத்தாலும் வீசும்குணம் உள்ளதாலும் வரிக்கத்தகுந்தவர் என்பதாலும் ஆஸ்ரயிக்கத் தகுந்தவர் என்பதாலும் எல்லாம் ஒடுங்கிப்போகும் இடம் என்பதாலும் வாயு எனப்பெயர் என மத்வர் கூறுகிறார். வாயு ப்ராணனைக் குறிக்கும்.*

இந்திரனின் அக்னியின் ரக்ஷைக்காக ஏற்கிறேன். உன்னை இந்திரனுக்கும் ப்ருஹஸ்பதிக்கும் இந்திரனுக்கும் விஷ்ணுவிற்கும் அளிக்கிறேன்.

ரிஷியான மனிதர்களின் தேவனான சக்திவாய்ந்த வைச்வானராக்னியை தேவர்கள் உண்டுபண்ணினர். நீர் த்ருடமாய் ஸ்தாபிக்கப்பட்டவர். த்ருடமானவர்களுள் த்ருடமானவர். அசைக்கமுடியாதவர்களுள் சிறந்தவர். இது உமது வாஸஸ்தானம். நான் த்ருடமான மனதுடன் த்ருடமான பேச்சுடன் உங்களை மனிதநேயத்தின் தேவனாய் ஏற்கிறேன். இப்போது இந்திரன் நம்மை ஒரே இதயம் கொண்டவர்களாயும் ஒரே புத்திகொண்டவர்களாயும் ஆக்கட்டும்.

நீங்கள் யார்? எங்களுக்குள் நீங்கள் யார்? நீங்கள் எவரின் பிள்ளை? உங்கள் பெயரென்ன? உங்களை ஸோமத்தினால் ஆனந்தப்படுத்தவுள்ளோம். பூர்புவஸ்ஸுவர்லோகங்களை அடைந்து இந்த ராஷ்டிரத்தை சக்தி பெறச் செய்கிறேன்.

எங்கள் மந்திரங்களால் சந்தோஷிக்கும் இந்திரனே! அக்னியே! வாருங்கள். ஸோமபானம் பண்ணுங்கள். ஸோமனே! உன்னை இந்திரனுக்காகவும் அக்னிக்காகவும் இங்கு வைக்கிறேன். இந்திரனை நண்பராகக் கொண்ட த்ருடமான சித்தம்கொண்ட அக்னியை வைத்து யக்ஞம் செய்யும் சான்றோர்களே! வாரீர். உங்களை ஏற்று இந்திரனுக்கும் அக்னிக்கும் ஹவிர்பாகத்தைத் தங்கள் மூலமாய் ஸமர்ப்பிக்கிறோம்.

தேவர்களே! மனிதவர்கத்தின் ரக்ஷகர்களே! பக்தனின் ஹவிர் பாகத்தை ஏற்கவாரீர். உங்களுக்காக இது ஸமர்பிக்கப்படுகிறது.

மருத்துக்களுடன் கூடிய இந்திரனே! யக்ஞத்திற்கு வாரீர். ஸோமபானம் பண்ணுங்கள். மதுரமாய் மந்திரங்களை கானம் செய்யும் யக்ஞகர்தாக்கள் உங்களை வழிபடுகின்றனர்.

ரிஷிகள் இந்திரனை ரக்ஷிப்பிற்காக அழைக்கின்றனர். அவர் மருத்துக்களுடன் இருப்பவர். மனிதர்களின் தேவன். வீரத்தின் தேவன். சோகத்தைப் போக்குபவர். தேவராஜன். இது உங்கள் வாஸஸ்தானம். நான் உன்னை இந்திரனுக்காக ஏற்கிறேன்.

ஸூர்யன் தேவராஜன். மித்திரனுக்கும் வருணனுக்கும் அக்னிக்கும் அவரே கண். பூர்புவஸ்ஸுவர்லோகங்களை

இயக்குபவர். ஆத்மஸ்வரூபர். அவருக்கிந்த ஹவிர்பாகம்.

அக்னியே! நீங்கள் ஸகலமும் அறிந்தவர். தருமத்தின் மூலம் எங்களுக்கு நன்மையைச் செய்யுங்கள். தீங்கை விலக்கவும். உங்களுக்காக இந்த ஹவிர்பாகம். அக்னிதேவன் போர்களத்தில் இறங்கி தீயோர்களை அழிக்கட்டும். நமக்கு நன்மை செய்யட்டும். அவருக்கிந்த ஹவிர்பாகம். ஸ்வாஹா.

எட்டு:

தேவர்களின் நன்மைக்காக யக்ஞம் உள்ளது. ஆதித்யர்களே! அனுக்ரஹியுங்கள். மங்களத்தை அளித்து சோகத்தை அழியுங்கள். ஆதித்யர்களின் ப்ரியத்திற்காக உன்னை ஏற்கிறேன்.

ஆதித்யர்களே! இந்த ஸோமம் உங்களுக்கு. ஆனந்தியுங்கள். க்ருஹஸ்தர்களான கணவனும் மனைவியும் தார்மிகப்பாதையில் செல்லுகின்றார்கள். கடமைகளைச் செய்து நன்மை பெறுகிறார்கள். நல்ல ஸந்ததியைப் பெறுகிறார்கள். அந்தப் பிள்ளை செல்வங்களை சேர்த்து பாபமற்ற வாழ்வை வாழ்கிறான்.

ஸூர்யனே! ஒவ்வொருநாளும் எங்களுக்கு ஆனந்தத்தைத் தாரீர். எங்கள் ஞானத்தால் நாங்கள் விருப்பத்தை அடைவோம். நீங்கள் ஸூர்யனை வணங்குபவர். சந்தோஷத்தையும் உணவையும் தருபவர். யக்ஞத்தை வளர்ப்பீர். யக்ஞபலனைத் தருவீர். உங்களை நான் ஸூர்யனுக்காக ஏற்கிறேன்.

உயர்ந்த செயல்களைச் செய்பவரே! நீங்கள் ஆனந்தத்தின் இருப்பிடம். வழிபாடுகள் உமக்கு இருக்கட்டும். உம்மை தேவர்களுக்காக வைத்துள்ளேன். இது உம் வாஸஸ்தானம்.

ஜ்வலிக்கும் ஸோமனே! நீங்கள் ஆனந்தமளிப்பவர். யமநியமங்கள் கொண்டவர். உமக்காக என் உடலை சக்தி வாய்ந்ததாக ஆக்குகிறேன். ஸ்வர்கம் என்னைக் காக்கட்டும். ஸூக்ஷ்மதரிசிகளின் இதயத்திலுள்ள ஸத்யஸ்வரூபரான ஸூர்யன் நம்மைக் காக்கட்டும். சான்றோர்கள் தரும் ஸோமனைப் பெறுங்கள். ஆனந்தமயரான அக்னிதேவனே! நீங்கள் ப்ரஜாபதி. எனக்கு நல்ல ஸந்ததியை தாரீர்.

நீங்கள் தேவர்களுக்குச் செய்யப்படும் தீங்கை அழிப்பவர்.

மனிதர்களுக்குச் செய்யப்படும் தீங்கை அழிப்பவர். பித்ருக்களுக்குச் செய்யப்படும் தீங்கை அழிப்பவர். தனக்கே ஒருவன் செய்து கொள்ளும் தீங்கைஅழிப்பவர். தெரிந்தோ தெரியாமலோ செய்யும் தீங்கை அழிப்பவர்.

நாங்கள் எப்போதுமே தேஜோமயர்களாய் நல்ல உடலுடன் இருக்க வேண்டும். த்வஷ்டா எங்களை ஆசீர்வதித்து உடல் கெடுதியை நீக்கட்டும்.

இந்திரனே! எங்களை உங்களின் உயர்மனதுடன் பசுக்களிடமும் ரிஷிகளிடமும் செல்வங்களிடமும் அழைத்துச் செல்லுங்கள். எங்களை தெய்வீகச்செயல்களுக்கும் அன்பிற்கும் அழைத்துச் செல்லுங்கள்.

இந்த ஹவிர்பாகம் ஸூர்யனையும் அக்னியையும் ப்ரஜாபதியையும் விஷ்ணுவையும் சென்றடையட்டும். இந்த தேவர்கள் நமக்கு க்ஷேமத்தை அளிக்கட்டும்.

உங்களுக்காக வஸதியான ம்ருதுவான ஆஸனங்களைப் போட்டுள்ளோம். எங்களிடம் ப்ரீதி அடையும் தேவர்கள் யக்ஞத்திற்கு வரலாம். ஹவிர்பாகத்தைப் பெற்றுச் செல்வங்களை அளிப்பீர்.

அக்னியே! நீங்கள் இங்கு அழைத்து வந்த எல்லா தேவர்களையும் அவர்களின் ஸ்தானங்களுக்கு அனுப்பிவையுங்கள். நீங்கள் யாவரும் யக்ஞத்தில் ஹவிர்பாகங்களைப் பெற்று த்ருப்தி அடைந்ததால் ஸூர்யனின் ஜோதியை அடையலாம். ஸ்வாஹா.

அக்னியே! உங்களை யக்ஞத்திற்குத் தலைவராகக் கொண்டுள்ளோம். விக்னங்களைப் போக்கி யக்ஞத்தை நடத்தினீர். யக்ஞம் முடிந்ததால் தங்கள் வாஸஸ்தானத்திற்குச் செல்லவும்.

தேவர்களே! நீங்கள் நல்லபாதையை அறிந்தவர்கள். அதிலேயே செல்லுங்கள்.எண்ணங்களுடையவும் மனதினுடையவும் தேவதையே! நல்லபடி யக்ஞத்தை நடத்திவைக்கவும். ஸ்வாஹா.

யக்ஞமே! யக்ஞத்தை அணுகு. யக்ஞம் செய்பவனிடம் உனது வாஸஸ்தானத்தைக் கேட்பாய். இந்த யக்ஞம் பல ரிஷிகளால் செய்யப்பட்டது. அவர்கள் வேதமந்திரங்கள் ஓதி இதைச் செய்தார்கள். ஸ்லாஹா.

ஸாதகனே! பாம்பு போல் விஷம் கொண்டிராதே. வருணன் ஸூர்யனை அடையும் பாதையை அமைத்துள்ளார். அவர் அதை

ம்ருதுவாயும் ஸுலபமாயும் ஆக்கியுள்ளார். பாபத்தைப் போக்கும் அந்த வருணனுக்கு நமஸ்காரம்.

உன் இதயம் ஜலத்தாலும் ஸமுத்திரத்தாலும் உள்ளது. ஜலமும் மூலிகைகளும் உமக்காக க்ஷேமம் அளிக்கும். வேதமந்திரங்களால் நாம் யக்ஞதேவனை வழிபடுவோம்.

ஜலங்களே! இது உங்கள் இடம். கவனமாய் அவனை காண்பீர். ஸோமனே! இது உங்கள் வீடு. ஆனந்தித்து எங்களை ரக்ஷிப்பீர்.

நிச்சயமாக அவன் ரக்ஷகர்களான யக்ஞதேவர்களைக் கொண்டான், அவனின் யக்ஞத்தில் மருத்துக்கள் ஸோமபானம் பண்ணினார்கள்.

அகண்டு விரிந்த தம்பதியான ஜோதிஜகத்துக்கள் நமக்கு இந்த யக்ஞத்தின் போது மங்களத்தை வர்ஷித்து தீயோர்களிடமிருந்து காக்கட்டும்.

வ்ருத்திரஸம்ஹாரகரே! இந்திரனே! ரதத்தை ஸஜ்ஜமாக்குங்கள். யமநியமங்கள் கொண்டவரே! யக்ஞமந்திரங்களால் ஆகர்ஷிக்கப் படுவீர். இது உங்கள் வீடு. இங்கு உங்களை ஸ்தாபிக்கிறோம். ஸோமபானம் பண்ணுபவரே! ரதத்தை அதிவேகமாய் ஓட்டி வந்து எங்கள் மந்திரங்களைக் கேளும். புனிதத்தின் தேவர்களான இந்திரனும் வருணனும் முதன்மையானவர்கள். வாக்தேவியானவள் ஸோமனுடன் இந்த ஆஸனத்தில் அமர்ந்து ஸந்தோஷிக்கட்டும்.

ஸூர்யகிரணங்களால் மனிதர்கள் போல் யமநியமங்களால் நீ ஆகவேண்டும். ஸூர்யனுக்காக உன்னைப் பெறுகிறேன். இது உன் வாஸஸ்தானம். ஸூர்யனே! நீரே ஜ்வலிக்கும் தேவன். நான் ஜ்வலிப்பவனாக ஆகுக.

பசுவே! ஸோமபானம் பண்ணுவாய். ஸோமம் உன்னை வந்தடையட்டும். நீ எமக்குப் பால் கொடு. தேவர்களைப் பின்பற்றும் பாதையை எனக்கு காட்டு.

இந்திரனே! போர்க்களத்தில் தீயோர்களை அழித்து இருண்ட உலகில் தள்ளுங்கள். யமநியமங்களுக்காக உங்களை ஏற்கிறோம். இது உங்கள் வாஸஸ்தானம். நான் உன்னை தீயோர்களை வதைக்கும் இந்திரனுக்காக ஏற்கிறேன்.

இன்று உதவிநாடி நம் எண்ணங்களை அறியும் உயர்ந்த செயல்களைச் செய்யும் விச்வகர்மாவைத் துதிக்கிறோம். அவர் நம் துதியைக் கேட்டு நமக்கு க்ஷேமத்தை அருளட்டும். விச்வகர்மனே! நீங்கள் இந்திரனை ஸ்திரப்படுத்தினீர்.

ஜ்வலிக்கும் ஸோமனே! அக்னியின் உணவிற்குச் செல். இந்திரனின் உணவிற்குச் செல். எல்லா தேவர்களிடமும் செல். உயர்ந்த ஸேவைகளை செய்துகொண்டு இங்கேயே வாஸம் பண்ணுவீர். ஸந்ததியைத் தாரீர். அந்த ஸந்ததி நமக்கு நன்மையை வளர்க்கட்டும்.

நீரே யக்ஞத்தின் வளர்ச்சி. நாங்கள் உங்களின் அனுக்ரஹத்தால் அம்ருதத்தையும் ஞானத்தையும் அடைய வேண்டும். நாங்கள் ஸ்வர்கத்தை அடையவேண்டும்.

இந்திரனே! ஆயுதங்களால் தீயோர்களை அழிப்பீர். போர்க்களத்தில் நடக்கும் வீரர்களே! சத்ருக்கள் உங்கள் எதிரில் வருகையில் நாசம் பண்ணுங்கள். அவர்களைக் கிழித்தெறிவீர். இதனால் நாங்கள் க்ஷேமத்தை அடைவோம். இங்கு ஸோமம் உள்ளது.

வருணன் ஆஸனத்தில் அமர்ந்துள்ளார். அக்னியும் அமர்ந்துள்ளார். இந்திரனும் அமர்ந்துள்ளார்.

யக்ஞம் ஸ்வர்கத்தை அடைந்தது. தேவர்களை அடைந்தது. எனக்கு மங்களம் உண்டாகுக. யக்ஞம் மனிதர்களையும் பித்ருக்களையும் சென்றடைந்தது. எனக்கு மங்களம் உண்டாகுக.

யக்ஞத்தின் பலன் அகண்டு விரிந்தவொன்று. அது எட்டு திசைகளிலும் ஆகாசத்திலும் பரவியுள்ளது. யக்ஞமே! எனக்குயர்ந்த செல்வங்களைக் கொடு. நான் தருமவழியில் சாச்வதமாய் வாழ்வேன். ஸோமனே! பசுக்களிலும் உணவிலும் அறிவிலும் நாங்கள் உயரவேண்டும்.

**ஒன்பது:**

தேவஸவிதாவே! யக்ஞத்தை வர்தனம் பண்ணுங்கள். ஸாதகனின் செல்வத்தை வர்தனம் பண்ணுங்கள். மனதைப் பரிசுத்தப்படுத்துங்கள். வாசஸ்பதி நம் பேச்சை மதுரமாக்கட்டும். நான் வாழ்வின் சக்திகொண்ட ஜலத்தின் ரஸத்தை ஏற்கிறேன்.

ஜலரஸமே! நீ நன்மை செய்.

நீ இந்திரனின் வஜ்ரத்தைப் போல் சத்ருக்களை அழிப்பாய். உன்னால் இந்த மனிதன் போரில் வெல்லட்டும்.

செல்வங்களைப் பெற நான் அகண்டமான அதிதியை வழிபடுகிறேன். அவளிடம் வாழ்வு உள்ளது. ஸூர்யன் அதை ஸ்தாபிக்கட்டும். ஜலத்திலேயே அம்ருதமும் மருந்தும் உள்ளன. தெய்வீக ஜலங்களே! நீங்கள் தெய்வீக உணவளிப்பீர். உங்களின் அலைகள் மிகப்பெரியன. இந்த மனிதன் நன்மை அடையட்டும்.

குதிரையே! வாயுவேகத்தில் உள்ளாய். இந்திரனின் ரதத்தில் பூட்டப்பட்டுள்ளாய். மருத்துக்கள் உன்னை வளர்க்கட்டும். த்வஷ்டா உன் காலுக்கு வேகத்தை அளிப்பார்.

குதிரையே! உன் வேகம் எங்களுக்கு வரட்டும். நீ போரில் வெற்றி காண்பாய். எங்களுக்கு வெற்றியைத் தருவாய்.

ஸத்யஸ்வரூபரான ஸூர்யனின் தூண்டுதலால் நான் ப்ருஹஸ்பதியின் ஜோதியை அடைவேன். ஸத்யஸ்வரூபரான ஸூர்யனின் தூண்டுதலால் நான் இந்திரனின் ஜோதியையும் அடைவேன்.

ப்ருஹஸ்பதியே! போரில் வெற்றி பெறுங்கள். மனிதர்களே! ப்ருஹஸ்பதியை துதியுங்கள். இந்திரனே! போரில் வெற்றி பெறுங்கள். மனிதர்களே! இந்திரனை துதியுங்கள்.

நான் ஸூர்யனின் தூண்டுதலால் ப்ருஹஸ்பதியின் ஜோதியை அடைந்துவிட்டேன். நான் ஸூர்யனின் தூண்டுதலால் இந்திரனின் ஜோதியை அடைந்துவிட்டேன்.

ஸத்யஞானத்தை அளிக்கும் ஸூர்யனுக்கு அடிபணிந்து அவரின் தூண்டுதலால் நான் போரில் ஜயிப்பேன். போர்களில் வெல்லும் குதிரைகளே! சத்ருக்களின் வழியை தடுத்து வேகத்தால் திசைகளை வென்று நோக்கத்தின் அப்பால் செல்லுங்கள். இக்குதிரையை ஓட்டும்வீரன் ஆயுதங்களைத் தீயோர்களிடம் செலுத்தட்டும். எவன் அதிவேகமான குதிரைபோல் இலக்கை நோக்கி அதிவேகமாய் செல்வானோ த்ருடமான நம்பிக்கைக் கொண்டுள்ளானோ அவனே சத்ருக்களை வெல்லுவான்.

குதிரையே! மங்களம் செய். தேவஸபைக்குச் செல். அந்த தேவர்கள் சோகத்தைப் போக்கட்டும். குதிரைகளில் செல்லும்

வீரர்களே! யக்ஞம் செய்பவர்களே! என் வார்த்தைகளைக் கேளுங்கள். இந்த வீரர்கள் யக்ஞம் செய்து உணவைப் பெற்றவர்கள். குதிரையே! அம்ருதத்துவம் பெற்றவனே! அறிவாளியே! ஸத்தியத்தை அறிந்தவனே! எங்களுக்கு உணவையும் செல்வங்களையும் கொடு. ஸோமபானம் பண்ணு. த்ருப்தியாயிரு. தேவர்களின் பாதையில் செல்.

நன்மை என்னை வந்தடையட்டும். ஜோதியும் ஜகத்தும் என்னை வந்தடையட்டும். அன்னையும் தந்தையும் என்னை வந்தடையட்டும். அம்ருதம் என்னை வந்தடையட்டும். இதயத்தால் பரிசுத்தம் பெற்ற போரில் வெல்லுகின்ற வீரர்கள் உங்களை அடிபணிவார்கள்,

யக்ஞத்தினால் வாழ்வின் சக்திகளோங்கட்டும். யக்ஞத்தினால் கண்சக்தி ஓங்கட்டும். யக்ஞத்தினால் காதுகளின் சக்தி ஓங்கட்டும். யக்ஞத்தினால் யக்ஞத்தின் சக்தி ஓங்கட்டும். நாங்கள் ப்ரஜாபதியின் அபிஜனங்களாக வாழவேண்டும். நாங்கள் வெற்றி பெற்று தெய்வீக குணங்களுடன் தீர்கமான ஆயுள் கொண்டு ஸந்தோஷமாய் வாழவேண்டும்.

பூமித்தாயே! உங்கள் பலத்தையும் சக்தியையும் நாங்கள் பெறவேண்டும். புவிக்கு எங்கள் நமஸ்காரம். நீங்கள் புனிதத்தன்மை கொண்டு யாவரையும் அடக்கும் சக்தி கொண்டு அசைக்க முடியாதவளாய் உள்ளீர். நான் உங்களை உழவுக்காக வணங்குகிறேன். உலகின் க்ஷேமத்திற்காக ராஷ்டிரத்தின் செல்வம் அதிகரிக்க சாந்தி பெற மக்களின் க்ஷேமத்திற்காக வணங்குகிறேன்,

ஸோமனுக்கு எங்கள் நமஸ்காரம். அரசனான அக்னியையும் ஸூர்யனையும் ப்ருஹஸ்பதியையும் வணங்குகிறோம். எவர் எல்லா தேவர்களையும் எங்களது ரக்ஷிப்புக்காகத் தூண்டினாரோ அந்த ப்ரஜாபதிக்கு நமஸ்காரம். ஸ்வாஹா.

இந்திரனே! ப்ருஹஸ்ப்பதியே ! ஸரஸ்வதியே! விஷ்ணுவே! நமஸ்காரம். செல்வங்களைத் தாரீர். ஸ்வாஹா.

அக்னியே! யக்ஞத்தில் எங்களுக்கு நல்ல விஷயங்களைக் கற்றுத்தாரீர். எங்களுக்கு க்ஷேமத்தை அளியுங்கள். இது ஹவிர்பாகம்.

ஸூர்யனும் ப்ருஹஸ்பதியும் செல்வங்களை அளிக்கட்டும். வாக்தேவியான ஸரஸ்வதி விருப்பங்களை அளிக்கட்டும். இது அவர்களின் ஹவிர்பாகம்.

பூஷா ஐந்து திசைகளை வென்றார். நானும் வெல்கிறேன். ஸூர்யன் ஆறு ருதுக்களை வென்றார். நானும் வெல்கிறேன். மருத்துக்கள் ஏழு மிருகங்களை வென்றனர். நானும் வெல்கிறேன். ப்ருஹஸ்பதி காயத்ரியை வென்றார். நானும் வெல்லுகிறேன்.

தேவஸவிதாவின் தூண்டுதலால் அச்வினிபாஹுக்களால் பூஷணபுஜங்களால் இந்த ஹவிர்பாகத்தைத் தீயசக்திகளின் நாசத்தின் பொருட்டு அளிக்கிறேன். நீங்கள் தீய சக்திகளை அழித்தவர். நானும் அவ்வாறே செய்யவேண்டும்.

ஸூர்யன் உன்னை யக்ஞத்திற்காகத் தூண்டுவார். மூலிகைகளின் ஸோமனும் க்ருஹஸ்தர்களின் அக்னியும் வாக்தேவனான ப்ருஹஸ்பதியின் தலைமைக்கான இந்திரனும் பசுபதியான ருத்திரனும் ஸத்தியத்திற்கான மித்திரனும் தருமத்திற் கடங்கியிருக்க வருணனும் உன்னை யக்ஞத்திற்குத் தூண்டட்டும்.

இந்த மனிதனை தேவர்கள் சத்ருக்களற்று ஆக்கட்டும். உயர்ந்த ஆட்சி செய்பவனாயாக்கட்டும்.

மக்களே! இந்த மனிதன் உங்கள் அரசன். இவன் ஸோம தேவனைப்போல் ஆனந்தமளிப்பவனாய் இருக்கட்டும்.

**பத்து:**

மதுரமான ரஸமான சக்திதரும் ஜலத்தை தேவர்கள் கொண்டு வந்து வருணனையும் மித்திரனையும் அபிஷேகம் பண்ணினார்கள். சத்ருக்களை வெல்லும் இந்திரனைப் ப்ரோக்ஷித்தார்கள்.

அழுக்கற்றவை ஆனந்தமளிப்பவை வளர்ப்பவை இந்த ஜலங்கள். இவைகளில் வருணன் ஸான்னித்தியம் கொண்டுள்ளார்.

அரசனே! நீ அரசாட்சியின் சக்தியின் பலம். அரசாங்க சக்தியின் பிறப்பிடம். நீ தீயோர்களை அழிக்கும் இந்திரனின் பாஹு. மித்திரனின் ஆயுதம். பலத்தால் நீ தீயோர்களை அழிப்பாய். நீ கோட்டைகள் கட்டுபவன். சத்ருக்களை வெல்பவன். சட்டங்களைக் காப்பவன். வீரநாயகர்களே! அரசனை இடவலது புரங்களிலிருந்தும் எல்லா திசைகளிலிருந்தும் காப்பாற்றுங்கள்.

எல்லா மனிதர்களும் அவனைக் காக்கட்டும். கார்ஹபத்திய அக்னி அவனை அறியட்டும். புகழ்கொண்ட இந்திரன் அவனை அறியட்டும். மித்திரனும் வருணனும் அவனை அறியட்டும். ஜோதியும் ஜகத்தும் அவனை அறியட்டும். ஸூர்யனும் அதிதியும் அவனை அறியட்டும்.

விஷஜீவிகள் ஒழிந்தன. நீ கிழக்கு திசையை நோக்கிக் கிளம்பு. உன்னை மந்திரங்கள் காக்கட்டும். காயத்ரி உன்னைக் காக்கட்டும். வஸந்தகாலம் உன்னைக் காக்கட்டும்.

அரசே! தென்திசையை நோக்கிச் செல். உன்னை மந்திரங்கள் காக்கட்டும். த்ரிஷ்டுப் உன்னைக் காக்கட்டும். கோடைக்காலம் உன்னைக் காக்கட்டும்.

அரசே! மேல்திசையை நோக்கிப்போ. உன்னை மந்திரங்கள் காக்கட்டும். ஜகதீ உன்னைக் காக்கட்டும். . மழைக்காலம் உன்னைக் காக்கட்டும்.

அரசே! நீ வடதிசையை நோக்கிச்செல். உன்னை மந்திரங்கள் காக்கட்டும். அனுஷ்டுப் உன்னைக் காக்கட்டும். சரத்காலம் உன்னைக் காக்கட்டும்.

அரசே! மேலே நீ செல். மந்திரங்கள் உன்னைக் காக்கட்டும். பங்க்தி உன்னைக் காக்கட்டும். பனிக்காலம் உன்னைக் காக்கட்டும். தீயோர்களை ஒழிப்பாய்.

நீ ஸோமதேவனின் ஜோதி. என் ஜோதியும் உன்னைப்போல் ஜ்வலிக்கட்டும். சாவிலிருந்து என்னைக் காப்பாற்று. சக்தியையும் வெற்றியையும் வாழ்வையும் கொடு.

வருணனே! மித்திரனே! நீங்கள் ஜ்வலிக்கும் சரீரங்களுடன் மேலே உயருங்கள். முடிவையும் முடிவற்றதையும் காண ரதத்தை மேலே செலுத்துங்கள். மித்திரனே! நீங்கள் யாவருக்கும் நண்பர். வருணனே! நீங்கள் எதிரிகளை ஒழிப்பவர்.

அரசே! உன்னை அக்னிஜோதியாலும் ஸோமஜோதியாலும் இந்திரசக்தியாலும் அபிஷேகம் பண்ணுவேன். நீ ராஜாதி ராஜனாயிருந்து மக்களைக் காப்பாற்று.

ப்ரஜாபதியே! நீங்களே இந்த யாவையும் ஸ்ருஷ்டித்தீர். உங்களைப் பாடுகையில் எங்களின் விருப்பத்தைத் தாரீர். இவன் இன்னாருடைய தந்தை. இவன் இன்னாருடைய பிள்ளை. அதைப்

போல் நாங்கள் உங்களைத் தந்தையாக ஏற்றுக்கொண்டோம். நாங்கள் தருமவழியில் செல்வங்களைப் பெறவேண்டும். ருத்திரனே! உங்கள் திருநாமமும் திருமேனியும் எங்கள் சோகத்தை நீக்குகின்றன. உங்களை வீடுகளில் ஹவிர்பாகத்துடன் வணங்குகிறோம்.

நீ இந்திரனின் வஜ்ரம். உன்னை வருணனும் மித்திரனும் உள்ள திசைக்கு செலுத்துகிறேன். உன்னை மக்களின் கஷ்டத்தை நீக்க செலுத்துகிறேன். நாங்கள் மனதாலும் வீரத்தாலும் உன்னுடன் சேர்ந்திருக்க வேண்டும். உனக்கே வெற்றி.

எதிரிகளை வெல்லும் இந்திரனே! பக்தியற்று உங்களை அடையவேண்டாம். விவேகமற்று நாங்கள் இருக்கவும் வேண்டாம். உங்கள் ரதத்தில் வாருங்கள்.

அக்னிக்கு ஸ்தோத்திரம். அவர் வீடுகளின் தேவன். ஸோமனுக்கு ஸ்தோத்திரம். அவர் மூலிகைகளின் தேவன். மருத்துக்களுக்கு ஸ்தோத்திரம். இந்திரனுக்கு ஸ்தோத்திரம். பூமித் தாயே! என்னை ஹிம்ஸிக்காதே. நானும் உன்னை ஹிம்ஸிக்கக் கூடாது.

ஸூர்யனே! ஆகாசத்தில் ஜ்வலிப்பவரே! அந்தரிக்ஷத்தின் வஸுவே! யக்ஞத்தின் ஹோதாவே! வேதியில் இருப்பவரே! எங்கள் வீடுகளுக்கு அதிதியே! நீங்கள் நரச்ரேஷ்டர். ஸுரச்ரேஷ்டர். ஜலத்தில் உண்டானவை யாவும் நீரே.

பசுக்களில் உண்டானவை யாவும் நீரே. அறத்தில் உண்டானவை யாவும் நீரே. மலைகளில் உண்டானவை யாவும் நீரே. நீங்கள் ருதமாயும் ப்ருஹத்தாயும் உள்ளீர். நீங்கள் வாழ்வு. வாழ்வைக் கொடுங்கள். நீங்கள் வீரன். வீரத்தைக் கொடுங்கள். நீங்கள் சக்தி. சக்தியைக் கொடுங்கள். மித்திரனே! வருணனே! நீங்கள் இருவருமே இந்திரனின் இரு பாஹுக்கள்.

நீங்கள் ஸூர்யனை அடையும் பாதையை அமைத்துள்ளார். அவர் அதை ம்ருதுவாயும் ஸுலபமாயும் ஆக்கியுள்ளார். பாபத்தைப் போக்கும் அந்த வருணனுக்கு நமஸ்காரம்.

உன் இதயம் ஜலத்தாலும் ஸமுத்திரத்தாலும் உள்ளது. ஜலமும் மூலிகைகளும் உமக்காக க்ஷேமம் அளிக்கும். வேதமந்திரங்களால் நாம் யக்ஞதேவனை வழிபடுவோம்.

ஜலங்களே! இது உங்கள் இடம். கவனமாய் அவனை

காண்பீர். ஸோமனே! இது உங்கள் வீடு. ஆனந்தித்து எங்களை ரக்ஷிப்பீர்.

நிச்சயமாக அவன் ரக்ஷகர்களான யக்ஞதேவர்களைக் கொண்டான், அவனின் யக்ஞத்தில் மருத்துக்கள் ஸோமபானம் பண்ணினார்கள்.அகண்டு விரிந்த தம்பதியான ஜோதிஜகத்துக்கள் நமக்கு இந்த யக்ஞத்தின்போது மங்களத்தை வர்ஷித்து தீயோர்களிடமிருந்து காக்கட்டும்.

வ்ருத்திரஸம்ஹாரகரே! இந்திரனே! ரதத்தை ஸஜ்ஜமாக்குங் கள். யமநியமங்கள் கொண்டவரே! யக்ஞமந்திரங்களால் ஆகர்ஷிக்கப்படுவீர். இது உங்கள் வீடு. இங்கு உங்களை ஸ்தாபிக்கி றோம். ஸோமபானம் பண்ணுபவரே! ரதத்தை அதிவேகமாய் ஓட்டி வந்து எங்கள் மந்திரங்களைக் கேளும்.

புனிதத்தின் தேவர்களான இந்திரனும் வருணனும் முதன்மையானவர்கள். வாக்தேவியானவள் ஸோமனுடன் இந்த ஆஸனத்தில் அமர்ந்து ஸந்தோஷிக்கட்டும்.

ஸூர்யகிரணங்களால் மனிதர்கள் போல் யமநியமங்களால் நீ ஆகவேண்டும். ஸூர்யனுக்காக உன்னைப் பெறுகிறேன். இது உன் வாஸஸ்தானம். ஸூர்யனே! நீரே ஜ்வலிக்கும் தேவன். நான் ஜ்வலிப்பவனாக ஆகுக.

பசுவே! ஸோமபானம் பண்ணுவாய். ஸோமம் உன்னை வந்தடையட்டும். நீ எமக்குப் பால் கொடு. தேவர்களைப் பின்பற்றும் பாதையை எனக்கு காட்டு.

இந்திரனே! போர்க்களத்தில் தீயோர்களை அழித்து இருண்ட உலகில் தள்ளுங்கள். யமநியமங்களுக்காக உங்களை ஏற்கிறோம். இது உங்கள் வாஸஸ்தானம். அழகிய ஆஸனத்தில் அமருங்கள். நீங்கள் சக்தியின் பிறப்பிடம். வருணன் அவரின் மக்களிடையே அமர்ந்துள்ளார். சட்டங்களைக் கையாள்கிறார். அவர் ஜகத்திற்கு நன்மை புரிவார்.

நீங்கள் எதிரிகளை ஒழிப்பவர். இந்த பிரதேசங்கள் உமக்கு நலன் தரட்டும். நீங்கள் வீரம். ஞானத்தின் தேவன். அறத்தின் உதாரணம். நீரே வருணன். அவரின் வீரம் உண்மையே. நீரே இந்திரன். அவரின் பலமும் மக்களுக்காக. நீரே ருத்திரன். அவர் கருணைகொண்டு மங்களமானவர். நீரே வஜ்ஜிரம். எனக்கு வெற்றி

தாரீர். அக்னிதேவன் எவ்வாறு ஹவிர்பாகத்தை பெற்று ஸூர்யகிரணங்களுடன் சேருகிறாரோ அவ்வாறே அரசனும் நன்மக்களுக்கு நன்மை அளிக்க வேண்டும்.

எல்லா செல்வங்களையும் அளிக்கும் ஸூர்யனின் தூண்டுதலாலும் ஸரஸ்வதியாலும் இந்திரனாலும் ப்ருஹஸ் பதியாலும் வருணவீரத்தாலும் அக்னியொளியாலும் ஸோமராஜனா லும் விஷ்ணுவாலும் முன் செல்லுகிறேன்.

ஸூர்யனையும் சந்திரனையும் போல் நல்லதை போதியுங்கள். ஸரஸ்வதிக்காக வளருங்கள். புனிதத்தன்மையால் ரக்ஷிப்பைப் பெறுங்கள். வாயுவைப் போல் பரிசுத்தராயிருங்கள். தரும நெறியில் வாழ குணங்கள் கொண்டிருங்கள். யோகாப்யாஸம் பண்ணுங்கள். அரசே! உன்னை அச்வினிகளுக்காகவும், இந்திரனுக்காகவும், ஸரஸ்வதிக்காகவும் ஏற்கிறோம். இந்திரன் நமுசியை வதைக்க அச்வினிகளே! நீங்கள் உதவினீர்கள். பெற்றோர்கள் குழந்தையைக் காப்பதுபோல் அச்வினிகள் தங்கள் வீரத்தால் அருமையாய் இந்திரனைக் காத்தனர். இந்திரனே! நமுசியை வென்ற நீங்கள் ஸரஸ்வதிக்கு ப்ரியமான ஸோமபானம் பண்ணுங்கள்.

**பதினொன்று:**

ஸூர்யதேவனே! புவிக்கும் ஸ்வர்கத்திற்கும் ஜோதியைப் பரப்பினார். தேவஸவிதாவின் தூண்டுதலால் சுத்தமான மனதுகொண்டு ஸ்வர்கத்தைப் பெற முயலுகிறோம். எல்லா வற்றையும் ஸ்ருஷ்டி செய்ய ஸூர்யனே தெய்வீக சிந்தையையும் ஜோதியையும் கொண்டுள்ளார்.

வேதமறிந்த ஞானிகள் எண்ணங்களையும் மனதையும் ஆளுகிறார்கள். எல்லாமறிந்த அந்த தேவனே அவர்களின் லக்ஷியங்களை பூர்த்தி செய்கிறார். தேவனுக்கு ஸ்தோத்திரம்.
உன் மன்தை த்யானத்துடன் கடவுளுக்காகத் தூண்டுகிறேன். உங்களின் மந்திரங்கள் ஸ்வர்கத்தை அடையட்டும். அம்ருதரான ப்ரஜாபதியின் பிள்ளைகளே! ஸ்வர்கலோகத்து நாயகர்களே! கேளுங்கள்.

ஸ்ருஷ்டி செய்து இவ்வையகத்தை இயக்கும் தேவன் அவரவர் சக்திக்கேற்றவாறு தேவர்களால் பின்பற்றப்படுகிறார்.

ப்ரபஞ்சத்தையே அளந்து எங்கும் வ்யாபித்த சித்ஸ்வரூபன் தேவஸவிதாவேயாம். தேவஸவிதாவே! யக்ஞத்தையும் யக்ஞபலனையும் ஓங்கச் செய்யுங்கள். ஞானத்தின் தேவனே! எண்ணங்களைப் பரிசுத்தமாக்கும் நீங்கள் எங்கள் வார்த்தைகளை மதுரமாக்குவீர். நீங்கள் மிகவுயர்ந்தவர். உங்களின் அனுக்கிரஹத்தால் நாங்கள் அக்னியை அவரின் வாஸஸ்தானத்தில் வளர்க்கவேண்டும். தேவஸவிதா அக்னியை ஓங்கச் செய்யட்டும்.

குதிரையே! நீ பிறந்தது ஸ்வர்கத்திலே. வாஸம் பண்ணுவதோ புவியிலே. வேகமாய் இங்கு ஓடி வா. புவர்லோகமே உனது நாபிஸ்தானமாகும்.

குதிரையே! சத்ருக்களை வென்று வாயுவேகத்தில் ருத்திரனிடம் ஓடிவா. பூஷன் உன் ரக்ஷகராவார்.

எல்லாம் அறிந்த அக்னிதேவனே! ஜோதியையும் ஜகத்தையும் ஸூர்யனையும் திவத்தையும் ஜ்வலிக்கவைக்கிறாய்.

குதிரை வேகமாக வந்து தீயோர்களை அச்சுறுத்துவது போல் நீயும் ஆவாய். ஸாதகன் அக்னியைக்காண முயற்சிப்பதுபோல் நீயும் செய். குதிரையே! புவியில் இறங்கு. அக்னியிடம் ஆழமான விருப்பத்துடன் கேள். பிறகு எங்களை ஞானியிடம் நடத்திச் செல்.

ஆகாசமே உன் பிறப்பிடம். புவியே ஆஸனம். ஸமுத்திரமே உன் பிறப்பிடம். சத்ருக்களைக் கொல், குதிரையே! நாங்கள் அக்னியை புவியில் வளர்க்கையில் உயர்ந்த சிந்தையுடன் இருக்கவேண்டும். செல்வங்களுடைய வேகக்குதிரை புவிக்கு வந்துவிட்டது. புவியையே பரிசுத்தப்படுத்தியது. அழகுபடுத்தியது. நாங்கள் இப்புவியிலேயே அக்னியை வளர்த்து ஜோதியை அடைவோம். அக்னியே! எல்லா உலகங்களிலும் நீர் இறங்குகிறீர். நீர் வ்யாபித்தவர். உங்களை ஜோதியால் வளர்க்கிறோம். எல்லா திசைகளிலும் பரவுங்கள். சரண்யனான சக்திவாய்ந்த வ்யாபித்த அக்னியை அவமதிக்கக் கூடாது, அறிவிற்கும் உணவிற்கும் தேவன் ஸாதகனுக்கு வரங்களை அளித்துக்கொண்டு சஞ்சரிக்கிறார். ஞானியே! வெற்றி பெற்றவரே! பலவுருவங்கள் பெற்றவரே! அக்னியே! உங்களை வந்தடைந்தோம். நீங்கள் நீரிலிருந்தும் காடுகளிலிருந்தும் மூலிகைகளிலிருந்தும் தோன்றியவர்.

தேவஸவிதாவின் தூண்டுதலினாலே அச்வினிபாஹுக் களால் பூஷணபுஜங்களால் அங்கிரஸர்களைப் போல் அக்னியை வளர்க்கிறேன். ஜோதிர்மயமானவரே! அழகியவரே! பூமியிலிருந்து தோன்றிய நீங்கள் மக்களுக்கு சாந்தியை அளிக்கவும். அதர்வருக்கும், தத்யஞ்சருக்கும் ஆண்டவரே! அக்னியே! உங்களை வழிபட்டனர். அக்னியே யக்ஞத்தில் ஹோதாவாக ஆஸனத்தில் அமர்ந்து தேவர்களை யக்ஞத்திற்கு அழைத்துவருகிறார்.

அக்னியே! ஆண்டவரே! நீங்கள் தேவர்களின் பிரியர். எல்லோராலும் ஆச்ரயிக்கப்பட்டவர். இங்கு அமரவும். ஹவிர் பாகத்தால் வளரவும். ஜோதிர்மயமாகவும்.

பரிசுத்தமான ஜலங்களே! இங்கு உங்களை வைக்கிறேன். மூலிகைகள் எங்கள் வ்யாதிகளைப் போக்கட்டும். அக்னியே! எங்களை ரக்ஷிக்க எழுந்திருங்கள். நேராக நில்லுங்கள். உணவைக்கொண்டு வருபவரே! உங்களுக்கு ஸ்தோத்திரம். ஜோதியினுடையவும் ஜகத்தினுடையவும் குமாரா! அக்னியே! நீர் மூலிகைகளில் ஜ்வலிப்பவர். இருளைப் போக்குபவர்.

குதிரையே! திருடமாயும் பலத்தோடும் வேகமாயும் இரு. அக்னிதேவன் விரும்பும் விஷயங்களை தரிப்பாய். அக்னியே! மானுடத்தை ரக்ஷிக்கவும். பூர்புவஸ்ஸுவர்லோகங்களை ஹிம்ஸிக்க வேண்டாம். நாங்கள் அக்னியை வளர்த்து ஸத்யஸ்வரூபியான அவரை வரவேற்கிறோம். மூலிகைகளே! அக்னியை ஸ்வாகதம் பண்ணுங்கள். அக்னியே! எங்கள் கெட்ட எண்ணங்களையும் வ்யாதிகளையும் சோகத்தையும் போக்குவீர். புஷ்பபழங்களால் அலங்கரிக்கப்பட்ட மூலிகைகளே! ஸ்வாகதம். அக்னிதேவன் புராதனமாய் இங்கேயே உள்ளார். அக்னியே! உங்கள் பொலிவால் அஸுரர்களை ஒழியுங்கள். அக்னிதேவனை நான் ப்ரஸன்ன மாக்குவேன்.

வஸுக்கள் உம்மை காயத்ரியால் வளர்க்கட்டும். நீங்கள் த்ருடமானவர். நீங்களே உலகம். ஸாதகனான எனக்கு பசுக்களையும் செல்வங்களையும் பலத்தையும் அருளுவீர். ருத்திரர்கள் த்ரிஷ்டுப்பால் உங்களை வளர்க்கட்டும். நீங்கள் த்ருடமானவர். நீங்களே உலகம். ஸாதகனான எனக்குப் பசுக்களையும் செல்வங்களையும் பலத்தையும் அருளுவீர். ஆதித்யர்கள் உம்மை

ஜகதியால் வளர்க்கட்டும். நீங்கள் த்ருடமானவர். நீங்களே உலகம். ஸாதகனான எனக்கு பசுக்களையும் செல்வங்களையும் பலத்தையும் அருளுவீர்.

விச்வேதேவர்கள் உம்மை அனுஷ்டுப்பால் வளர்க்கட்டும். நீங்கள் த்ருடமானவர். நீங்களே உலகம். ஸாதகனான எனக்கு பசுக்களையும் செல்வங்களையும் பலத்தையும் அருளுவீர்.

வஸுக்கள் உங்களை காயத்ரியாலும் ருத்திரர்கள் உங்களை த்ரிஷ்டுப்பாலும் ஆதித்யர்கள் உங்களை ஜகதியாலும் புகழட்டும். இந்திரனும் வருணனும் விஷ்ணுவும் உங்களை மஹிமைப்படுத்திப் பேசட்டும்.

யாவருக்கும் வழிகாட்டும் உங்களை எல்லா மனிதர்களும் நட்பு கொள்ளட்டும். அன்னையே! த்ருடமான புத்திதாருங்கள். எங்களின் தாரணாசக்தியாகிய இலக்கை நீங்களும் உங்கள் குமரனாகிய அக்னியும் பூர்த்திபண்ணட்டும்.

பூமித்தாயே! உங்கள் சக்தி வளரட்டும். தேவர்கள் இந்த ஹவிர்பாகத்தை ஏற்கட்டும். தர்மஸ்வரூபியான அக்னியே! தேவர்களை அழைத்துவருபவரே! புராதனமானவரே! குதிரைகளின் நாயகரே! இங்கு வரவும். நாங்கள் ப்ரியம் வைக்கும் நீர் தீயோர்களை அழிப்பீர்.

என்றும் ஜ்வலிப்பவரே! பூமியின் நாபியில் வளர்பவரே! செல்வங்களை வர்தனம் பண்ணுங்கள். அயோக்கியர்களையும் திருடர்களையும் பொசுக்கவும். ஏமாற்றுக்காரர்களைப் பொசுக்கி இரண்டுகால் உயிரினங்களையும் நான்குகால் உயிரினங்களையும் உணவளித்துக் காத்தருள்வீர்களாக.

**பன்னிரெண்டு:**

அம்ருதத்துவம் பெற்ற சக்திவாய்ந்த ஜ்வலிக்கின்ற பலம்கொண்ட சோகத்தை அழிக்கும் அக்னியைப் போற்றுகிறோம். ஜோதிக்கும் ஜகத்திற்கும் நடுவே உள்ள ஸூர்யனை இரவும் பகலும் வளர்க்கட்டும். ஸூர்யனை தெய்வீக சக்திகள் காத்து வளர்க்கட்டும். தேவஸவிதா ஸர்வஸேவ்யர். எல்லாரையும் தன் பொலிவால் தெரியப்படுத்துகிறார். பக்ஷிஸ்வரூபரான அக்னியே! யக்ஞமே

உனது மத்திய பாகம். ப்ருஹத்தும் ரதந்தரும் உங்கள் இறக்கைகள். த்ரிவ்ருத்ஸ்தோமம் உங்கள் தலை. காயத்ரி உங்கள் கண்கள். கானங்களே உங்கள் அங்கங்கள். ஸோமனே உங்கள் சரீரம். யக்ஞஸாமனே உங்கள் புச்சம். அக்னியே! ஆண்டவரே! தேவ பக்ஷியே! ஜோதிக்கு பறந்து செல்லுங்கள். சக்தியுடன் வாழ்வுடன் உணவுடன் திரும்பிவாருங்கள்.

வருணனே! பாசங்களை அறுத்து எங்களைக் காப்பீர். நாங்கள் பாவமற்று அன்னை அதிதியை சேர்ந்தவர்களாய் ஆவோம்.

ஸூர்யன் ஆகாசத்தில் உதித்துவிட்டார். ஜ்வலிக்கும் கிரணங்களால் இருளைப் போக்குகிறார். ஹோதாவான அக்னி ஸத்யஜீவியாயும் க்ருஹபதியாயும் ஸர்வவ்யாபியாயும் ப்ராண சக்தியைத் தூண்டுபவராயும் மக்களின் மனதில் குடிகொண்டவராயும் மலைகளையும் உலகையும் ஸ்ருஷ்டித்தவராயும் உள்ளார். அவருக்கு நமஸ்காரம். ஸர்வக்ஞரான அக்னியே! உங்கள் அன்னையின் மடியில் அமருங்கள். குமரனே! அவளை ஹிம்ஸிக்கவேண்டாம். ஜ்வலித்தவராய் இருங்கள். அக்னி முதலில் ஸ்வர்கத்திலே பிறந்தார். பிறகு எங்களிடமிருந்து பிறந்தார். பிறகு ஜலத்திலே இருந்தார். அவரையே ஸாதகர்கள் வளர்க்கின்றனர்.

அக்னியே! மூன்று தலங்களிலுள்ள உமது மூன்று சக்திகளை அறிவோம். உங்களின் பல ரூபங்களை பல ஸ்தானங்களில் அறிவோம். உங்கள் ஸ்ரேஷ்டமான திருநாமத்தை அறிவோம். நீங்கள் உதித்த இடத்தையும் அறிவோம்.

வருணன் உங்களை ஜலங்களில் உதிக்கச் செய்தார். ப்ரஜாபதி ஸ்வர்கத்தில் ஜ்வலிக்கச் செய்தார். ஆம். நீங்கள் மூன்றாம் தலத்தில் விராஜமானம் பண்ணுகிறீர். உங்களை மருத்துக்கள் வர்தனம் பண்ணுகிறார்கள்.

ஸர்வசரண்யரான செல்வங்களை அளிப்பவரான ஞானத்தை அளிப்பவரான ஸோமனைக் காப்பவரான சக்தியின் குமரனான ஒரு தேவன் அருணோதய காலத்திலே ஜ்வலிக்கிறார்.

மர்த்யர்களில் அம்ருதரான பவித்திரரான சக்திகொண்ட தீய சக்திகளை ஒழிக்கும் அக்னி ஸ்தாபிக்கப்படுகிறார். ஜ்வலிக்கின்றவ

ராய் ஸ்வர்கம் செல்லுகிறார்.

சரண்யரான மனிதனின் உயர்ந்த நண்பரான ஸோமரக்ஷகரான அக்னி ஞானிகளால் போற்றப்படுகிறார். நாங்கள் நல்ல சந்ததிக்காக ஜோதியையும் ஜகத்தையும் அழைக்கிறோம்.

தெய்வீகஜலமே! நீ அக்னியை வணங்கு. அக்னியே! உங்கள் வீடு ஜலத்திலே உள்ளது. மூலிகைகளில் உள்ளது. நீங்களே மூலிகைகளின் பிறப்பிடம். மரங்களின் பிறப்பிடம். உயிரினங்களின் பிறப்பிடம். ஜலங்களின் பிறப்பிடம். அக்னியே! பேச்சாற்றலைத் தருவீர். இளைஞரே! தேவரே! நான் உங்கள் பக்தன். உங்களை வணங்குகிறேன். செல்வங்களை அருள்பவரே! சத்ருக்களைத் துரத்துவீர். ஹவிர்பாகத்தைப் பெறுவீர். ஸ்வாஹா.

அக்னியே! ருத்திரர்களும் ஆதித்யர்களும் வஸுக்களும் உங்களைத் தூண்டட்டும். புரோஹிதர்கள் மேலும் ஹவிர்பாகங்களால் உங்களை வளர்க்கட்டும். உங்கள் உருவை ஜோதியாலும் வளர்த்துக்கொள்ளுங்கள். ஸாதகனின் விருப்பம் நிறைவேரட்டும்.

ஸூக்ஷ்மதரிசியை நோக்கி யமன் வந்துள்ளார். அவர் இங்கு அமரட்டும். இதுவே அவருக்கு பித்ருக்கள் அளித்த ஆஸனம்.

அக்னியே! நீங்கள் சிறந்த ஞானத்தைத் தருபவர். உங்களுடைய விருப்பங்கள் என்னுடையதாயும் உங்களுடைய விருப்பங்களின் திருப்தி என்னுடையதாயும் ஆகட்டும். நீரே தீ. நீரே பஸ்மம்.

அக்னியே! பூர்புவஸ்ஸுவர்லோகங்களில் ஜ்வலிக்கும் உங்கள் ஜோதி மனிதவர்கத்தின் நன்மை தீமைகளைக் காண்கின்றது. அக்னியே! தேவலோகம் செல்லுங்கள். தேவர்களைத் தூண்டுங்கள். இந்திரனும் ப்ருஹஸ்பதியும் அக்னியும் இந்த த்ருடமான ஸ்தானத்தில் உன்னை ஸ்தாபித்துள்ளார்கள்.

உணவின் தேவனான வீரத்தின் தேவனான ஸமுத்திரம்போல் அகண்டு விரிந்த இந்திரனை ரிக் யஜுஸ் ஸாமம் யாவும் மகிமைப்படுத்துகின்றன.

எல்லாம் அறிந்த அக்னியே! எங்களுக்கு மங்களம் தாரீர். யக்ஞம் நாசமடையக் கூடாது. யக்ஞம் செய்பவனும் நாசமடையக் கூடாது.

நிர்ருதியே! அழிவின் தேவரே! தீயோர்களையும் திருடர்க

ளையும் அழியுங்கள். யக்ஞரக்ஷகரே! ஸத்யரக்ஷகரே! செல்வங்களை சேர்ப்பவரே! அக்னியே! ரூபங்களை நீங்கள் வெளிப்படுத்துகிறீர்.

சந்தோஷமாய் எருதுகள் நிலத்தை செழிப்படையச் செய்யட்டும். சந்தோஷமாய் நீங்கள் உழவர்களைப் பின்பற்றுங்கள். வாயுவும் ஆதித்யனும் எங்கள் ஹவிர்பாகத்தால் திருப்தி அடையட்டும். அனுக்ரஹிக்கும் கலப்பையே! ஸோமனை உண்டுபண்ணுபவரே! க்ஷேமத்தை அளியுங்கள். வருஷம் பக்ஷங்கள் மாஸங்கள் ஸூர்யோதயம் அச்வினிகள் ஸூர்யன் அக்னி யாவரும் மங்களம் அளிக்கட்டும்.

ஆதியில் தோன்றிய மூலிகைகளே! தேவர்களுக்கும் முன்பு தோன்றியவைகளே! உங்களை வணங்குகிறேன். அன்னையரான நீங்கள் ஸஹஸ்ரநாமங்கள் கொண்டு ஸஹஸ்ரஸ்தானங்களில் வளருபவைகள். ஆயிரம் சக்திவாய்ந்த நீங்கள் நோயிலிருந்து காத்தருளவும். வெற்றி தரும் மூலிகைகளே! புஷ்பபழங்கள் கொண்டவைகளே! மங்களம் தாரீர்.

அன்னையரான மூலிகைகளே! நான் வ்யாதியற்ற உடலையும் பசுவையும் குதிரையையும் அடையவேண்டும். உங்களின் வாஸஸ்தானம் ப்ராணவ்ருக்ஷமாகும். களத்தைத் தேடிவரும் அரசனைப் போல் மூலிகைகளைத் தேடிவரும் மனிதன் நல்லோர்களின் வ்யாதிகளை குணமாக்குக. ஸோமரஸம் பொழியும் மூலிகைகளே! நாங்கள் வ்யாதிகளிலிருந்து குணம் பெறவேண்டும். புஷ்பப்பழங்கள் கொண்ட இந்த மூலிகைகள் யாவும் வ்யாதியைப் போக்க ப்ருஹஸ்பதியாலும் ஸ்ருஷ்டிக்கப்பட்டவை. அவை நம் வ்யாதிகளை நீக்கட்டும். மூலிகைகள் ஸோமனுடன் பேசுகின்றன. 'ஸோமராஜனே! எங்களை ஏற்கும் நல்லோன் நோயற்றிருக்கட்டும்.' ஸ்வர்கத்தில் தோன்றிய மூலிகைகள் கூறுவது என்னவென்றால் 'நாங்கள் எவனை அடைகிறோமோ அவனை எந்த நோயும் அடையாது.' யாருக்காக நீங்கள் எடுக்கப்படுகிறீர்களோ யார் உங்களை எடுக்கிறார்களோ அந்த இருகால் ஜீவிகளும் நான்குகால் ஜீவிகளும் நோயற்று வாழட்டும்.

கந்தர்வர்கள் உங்களைத் தோண்டி எடுத்தனர். இந்திரனும் ப்ருஹஸ்பதியும் அவ்வாறே. உங்களைத் தோண்டி எடுப்பவனும் எவனுக்காக எடுக்கப்பட்டீரோ அவனும் நீங்களும் வெகுகாலம்

வாழுங்கள்.

அம்ருதத்துவம் வாய்ந்த அக்னியே! எங்களுக்காக செல்வங்களைத் தாரீர். உங்களின் ஜோதிரூபம் மிக அழகியது. அதைக் காண உங்களுக்கான யக்ஞத்தை வர்தனம் பண்ணுக. ஸத்யரான வீரரான தேவர்களின் நண்பரான உங்களை அவர்கள் முதலில் ஸ்தாபித்தனர்.

ஸோமனே! நீங்கள் சாவற்று ஸ்வர்கத்திலுள்ளீர். நீங்கள் தீயோர்களை அழிப்பீர். நீங்கள் சக்திவாபோர்செய்து வளருங்கள். எங்களுக்கானந்தம் அளித்துத் தோழராகுங்கள்.

அக்னியே! உங்கள் பக்தன் உங்களின் மனதை ஆகர்ஷிக் கிறான். நீங்கள் ஜ்வலிக்கிறீர். எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்யுங்கள்.

**பதிமூன்று:**

நான் அக்னியை எனது மங்களத்திற்காகவும் பலத்திற் காகவும் என் வீட்டில் ஸ்தாபிக்கிறேன். தேவர்கள் இதை அனுமதிக்கட்டும். நீங்கள் ஜலங்களை வளர்ப்பவர். தீயை வர்திப்பவர். ஸ்திரமானவர். சக்திகொண்டவர். தலத்தில் உள்ளவர். விரிந்த ஆகாயத்தில் உள்ளவர்.

புகழ் கொண்ட ஸூர்யன் ஆதியில் கிழக்கே தோன்றி பிறகு முழுமையாய் வ்யாபிக்கிறார்.

ஹிரண்யகர்பரே! ஸ்ருஷ்டிகர்த்தாவே! விழித்தெழுங்கள். ஸ்ருஷ்டிக்கு முன் அவர் இருந்தார். ஜோதியையும் ஜகத்தையும் இயக்குபவர். ஹவிர்பாகத்துடன் அவரை வழிபடுவோம்.

உன் சக்தியை வளர்த்துக்கொள். அம்புகளை அஸுரர்கள் மேல் வீசிக்கொல்.

அக்னியே! உங்கள் அதிவேகமான கிரணங்கள் காற்றில் வளரட்டும். உங்களின் நாக்கு தீயோர்களை வதைக்கட்டும்.

அக்னியே! உங்கள் ஸேனையை தீயோர்களை அழிக்க அனுப்புங்கள். எங்களுக்கு ரக்ஷிப்பைத் தாரீர். தீயோர்களின் சக்தி உங்களை ஒன்றும் செய்யாதிருக்கட்டும்.

அக்னியே! எங்களை எதிர்த்து நிற்கும் தீயோர்களைக் கொளுத்துங்கள். உங்களின் அம்புகள் கூர்மையானவை.

சத்ருக்களைத் தூண்டிவிடுபவனை அடக்குங்கள்.

சத்ருக்களின் ஆயுதங்களை அழித்து உங்களின் சக்திகளைக் காட்டுங்கள். எங்களுக்கு தெரிந்தவர்களான தெரியாதவர்களான தீயோர்களை அழியுங்கள்.

அக்னியே ஸ்வர்கத்தின் தலைவர். புவியை இயக்குபவர். இந்திரசக்தியால் உங்களை நான் ஸ்தாபிக்கிறேன்..

நீங்கள் யக்ஞத்தின் தேவர். ஸ்வர்கத்தின் தேவர். ஹவிர்பாகத்தை ஏந்த ஜ்வலிக்கும் நாக்கு பெற்ற நீங்கள் ஆதித்யனை ஆகாயத்தில் த்ருடமாக்குவீர். உங்களின் கணங்களுடன் மங்களமான எங்கள் யக்ஞத்திற்கு வாரீர். பூமித்தாயே! உங்களை ஸமுத்திரம் ஹிம்ஸிக்கவேண்டாம். அசைக்க முடியாதவளே! த்ருடமானவளே! காற்று உங்களை ஹிம்ஸிக்க வேண்டாம்.

ப்ரஜாபதி உங்களை ஜலங்களில் ஸ்தாபிக்கட்டும். நீங்கள் விசாலமானவர். ஸமுத்திரத்தில் உள்ளீர். பூமித்தாயே! ஹிம்ஸிக்காதீர். அவள் உயிரினங்களை ரக்ஷிப்பவர். அன்புடன் அவளைக்காண். அவள் த்ருடமாயிருக்கட்டும்.

அக்னியே! தங்கள் ஜோதி வானத்தில் பரவியுள்ளது. எங்களையும் ஸந்ததிகளையும் காப்பீர்களாக. இந்திரனே! ப்ருஹஸ்பதியே! அக்னியே! தங்கள் ஜோதி பசுக்களிலும் குதிரைகளிலும் உள்ளது. எங்களை அது வளர்க்கட்டும்.

வஸந்தகாலத்து மதுமாஸமும் மாதவமாஸமும் ஜோதியும் ஜகத்தும் ஜலங்களும் மூலிகைகளும் அக்னியும் என் வளர்ச்சியில் உதவட்டும். அக்னி தேவர்களுடன் என் உபாஸனையில் வந்தமரட்டும்.

வஸந்தகாலத் தென்றல் மதுரமாய் வீசுகிறது. யக்ஞம் செய்பவனுக்கு ஓடைகள் மதுரமாய் ப்ரவஹிக்கின்றன. மூலிகைகள் மதுரமானவை. இரவுகள் மதுரமானவை. பகல்களும் மதுரமானவை. தேவலோகம் மதுரமானது. மரங்களின் பழங்கள் மதுரமானவை. க்ஷீரம் மதுரமானது. ஸூர்யன் மதுரமானவர்.

காயத்ரி த்ரிஷ்டுப் அனுஷ்டுப் முதலிய சந்தங்களுடன் கூடிய ஹவிர்பாகங்களை அக்னிதேவன் தேவதைகளுக்குத் தெரிவிக்கட்டும். அவர் யக்ஞரஹஸ்யங்களை அறிந்தவர்.

அக்னியே! எங்களுக்கு அன்னம் தனம் சக்தி க்ஷீரம் க்ருதம் எல்லாம் தாரீர். நீங்கள் லோகநாதர். தேஜோமயர். ஸரஸ்வதியின் மனதும் பேச்சும் உங்களை ரக்ஷிக்கட்டும். தேவனே! அதிவேகமான உங்கள் குதிரைகளைத் தூண்டுங்கள். அவை எங்கள் யக்ஞத்திற்கு உங்களைக் கொண்டு வரட்டும்.

அக்னியைப் போற்றுங்கள். அவர் தேவர்களின் ஜன்மஸ்தானம். ஸ்ருஷ்டிகர்த்தா. உலகின் ஒளி. அக்னியால் எல்லா வ்யாதிகளும் நீங்கப் பெற்று தீர்காயுளைப்பெறுவாய்.

ஸூர்யன் எழுந்துள்ளார். அவரே தேவர்களின் பலம். அவரே அக்னிக்கும் மித்திரனுக்கும் வருணனுக்கும் கண். சராசரங்களின் ஆத்மா. பூர்புவஸ்ஸுவர்லோகங்களை தன் ஒளியால் பூரிக்கச்செய்பவர்.

அக்னியே! யக்ஞத்தின் சதுஷ்பாதங்களையும் த்விபாதங்களையும் ஹிம்ஸிக்க வேண்டாம். பசுக்களை ரக்ஷியுங்கள். உங்கள் திருவுருவை வெளிப்படுத்தி மகிமைப்படுத்துங்கள். தீயோர்கள் துயரம் பெறட்டும்.

**பதினான்கு:**

அக்னியே! சத்ருக்களைத் துரத்துவீர். கோபமற்று எங்களைக் காத்தருள்வீர். அதனால் நாங்கள் வெகுகாலம் வாழ்வோம். ரஹஸ்யமாக எங்களைத் தாக்கும் தீயோர்களை உங்கள் பலத்தால் துரத்துங்கள். எண்ணத்தால் உயர்ந்தவரே! நாங்கள் வெகுகாலம் வாழுவோமாக.

அக்னியே ஜோதியின் தலையாயும் புச்சமாயும் இருக்கிறார். ஜகத்தின் நாயகர். ஜலத்தை இயக்குபவர். அன்னம் தனம் சந்தோஷம் எல்லாவற்றினுடையவும் யஜமானன். யக்ஞத்தின் தலைவர். நீங்கள் ஒளிபெறும் ஸூர்யனை தரிப்பவர். உங்கள் நாக்கு தேவர்களுக்கு ஹவிர்பாகத்தை தெரிவிக்கிறது.

கன்று பசுவைக்காண விரும்புவதுபோல் நாங்கள் உங்களைக் காணவிரும்புகிறோம். ஜோதியில் உள்ள ஸூர்யனை உடைய அக்னிக்கு ஞானிகள் மந்திரங்களை ஜபிக்கின்றனர்.

அக்னியே முதலில் வழிபடவேண்டிய தேவர். அவரையே ப்ருகுக்கள் வளர்த்து வழிபட்டனர். உயிரினங்களின் ரக்ஷகரவர்.

எப்போதும் விருவிருப்பானவர். ஸ்திரமானவர். க்ருதத்தால் வளர்க்கப்பட்டு ஸ்வர்கம் வரை ஜ்வாலை விட்டு வளர்கிறார். அங்கிரஸர்களின் ப்ரியரே! நீங்கள் ஒளிந்திருக்கையிலேயே அவர்களே உங்களை வெளிப்படுத்தினர். மனுஷர்கள் அக்னிக்கு ஹவிர்பாகமளித்துப் போற்றி வணங்குகின்றனர். அக்னியே! நீங்கள் யக்ஞபலன்களை எல்லாம் உங்கள் நண்பரான யக்ஞஸாதகனுக் களிக்கிறீர்.

யாவருக்கும் ப்ரியமான அக்னியே! புகழ்பெற்ற ஆச்சர்யகரமான உங்களை மக்கள் வீடுகளில் வழிபடுகின்றனர். உங்கள் முடிகள் ஜ்வாலைகள். உங்களை அவர்கள் ஹவிஸை தரிப்பவராகக் கூறுகின்றனர். தேவதூதரான ஹவிர்பாகங்களை ஏற்கின்ற அம்ருதரான ப்ரியரான பலத்தின் புதல்வரான அக்னியை மதிப்பிற்குரிய புகழ்பாடலால் போற்றுகிறேன், அவர் ஸ்தோத்திரம் பண்ணப்படுகையில் குதிரைகளைத் தூண்டி அதன் மூலம் அதிவேகமாய் வருகிறார்.

அக்னியை வழிபடுங்கள். அக்னியை ஸ்வாகதம் பண்ணுங்கள், அப்போதே ஸாதகன் சரியான முடிவையும் சந்தோஷஸாதனையையும் உயர்ந்த வரங்களையும் பெறுகிறான். சக்தியின் புதல்வரே! எல்லாமறிந்தவரே! செல்வங்களின் அதிபதியே! எங்களுக்கு அருள் புரியுங்கள். ஜ்வலிப்பவரே! அறிஞரே! மேலோனே! இந்த மந்திரங்களால் எங்களிடம் ஜ்வலியுங்கள். இரவும் பகலும் ஜ்வலிப்பவராய் கூர்மையான பற்களைக் கொண்ட தீயோர்களைப் பொசுக்கி பஸ்மமாக்குங்கள். சரண்யரான அக்னியே! அனுக்ரஹியுங்கள். இந்த யக்ஞம் ஆனந்தமளிக்கட்டும்.

•

உறுதியான மனம் கொண்டவரே! எந்த சக்தியால் நீங்கள் தீயோர்களை அடித்து வீழ்த்தினீரோ அந்த சக்தியை இங்கு காட்டுங்கள். எங்கள் மந்திரங்கள் எங்களுக்கு ஆனந்தத்தைக் கொண்டுவரட்டும்.

குதிரைகளும் பசுக்களும் எவரை க்ருஹமாக நினைக்கின்றனவோ அந்த க்ருஹபதியான அக்னியை வழிபடுகிறேன். நீங்கள் வழிபடுபவர்களுக்கு அன்னஸம்ருத்தியை அளிக்கவும்.

எவரை பசுக்கள் வந்து வழிபடுகின்றனவோ எவரை அரசர்கள் வந்து வழிபடுகின்றனரோ எவரைக் குதிரைகள் வந்து வழிபடுகின்றனவோ அந்த அக்னிக்கடவுளை வழிபடுகின்றேன். நீங்கள் வழிபடுபவர்களுக்கு அன்னஸம்ருத்தியை அளிக்கவும். ஓ சந்தோஷம் தரும் அக்னியே! நீங்கள் வாக்கில் க்ருதத்தை தரிக்கிறீர். எங்களையும் தனஸம்ருத்தி உடையவர்களாயாக்குங்கள். நீங்கள் வழிபடுபவர்களுக்கு அன்னஸம்ருத்தியை அளிக்கவும். அக்னியே! நீங்கள் மஹாரதர். மனோபலமும் உடல்பலமும் வாய்ந்தவர். ஸூர்யன் கிரணங்களைப் பரப்பி வருவதுபோல் எங்கள் மந்திரங்களுக்கு சந்தோஷிக்கும் நீங்கள் இங்கு வரவும்.

யக்ஞத்தின் தேவரான ஜாதவேதஸரான தருமத்திற்காக ஸ்தாபித்து வழிபடப்பட்ட க்ருதமருந்திய அக்னியை ஆஸ்ரயிக்கிறேன். அக்னியே! எங்கள் மிக நெருங்கிய நண்பராயும் ரக்ஷகராயும் அடிமைத்தனத்திலிருந்து நீக்குபவராயும் இருங்கள். எங்களுக்கு ஆனந்தம் அளியுங்கள். ஜ்வலிக்கும் அக்னியை ஆனந்தத்தின் பொருட்டு தனத்தின் பொருட்டு அணுகுகிறோம்.

ரிஷிகள் அக்னியை எந்த ஸ்ரத்தையுடன் ஆனந்தத்திற்காக ஸ்தாபித்தனரோ அதனுடன் நானும் அக்னியை ஸ்வர்கத்திலே ஸ்தாபிக்கிறேன். அவரை ஞானிகள் ஸர்வவ்யாபி என்கின்றனர். தேவர்களே! நாங்கள் அக்னியை எங்கள் மனைவிகளுடனும் பிள்ளைகளுடனும் சகோதரர்களுடனும் பந்துக்களுடனும் வழிபடுகிறோம். இதனால் நாங்கள் உயர்ந்த பண்புகளையும் ஜோதியின் உச்சத்தையும் அடைகிறோம்.

வேதமந்திரங்களின் ரகசியங்களை அறியும் அக்னி நல்லோர்களைக் காப்பவர். தீரர்களின் தேவன், விருவிருப்பானவர். பூமியில் ஸ்தாபிக்கப்பட்டவர். எங்களுடன் போர்செய்யும் தீயோர்களை கால்களில் போட்டு மிதிப்பவர்.

ஹவிர்பாகங்களை தரிப்பவர். வீரன்,. வீரச்செயல்கள் பல புரிந்தவர். அழியாத ஒளி கொண்டவர். மனுஷர்களே! இங்கு வாரீர். அக்னியை வழிபடுவீர். பரம்பொருளை நோக்கிச் செல்லும் பாதையை அக்னியே! உங்கள் ஒளியால் எங்களுக்குத் தெரியப்படுத்துங்கள்.

அக்னியே! எழுந்திருங்கள். ஸாதகனை எழுப்புங்கள.

அவனின் விருப்பங்களை பூர்த்திசெய்வீர். இந்த ஸாதகன் ஜோதியின் உச்சத்தை அடையட்டும்.

**பதினைந்து: ருத்திரம்**

(எங்கும் வ்யாபித்துள்ள பரம்பொருளே சிவமாகும். அதுவே ருத்திரன். அதை ஒருரூபத்தில் ஒரு பெயரில் ஒருத்தன்மையில் கட்டுப்படுத்த முடியாது. அது அகண்டம். எல்லாமாயும் உள்ளது. அதை எல்லாமாயும் வேதம் புகழ்பாடுவதையே இங்கு காண்கிறோம்.)

பகவானான ருத்திரனுக்கு வணக்கம். அவரின் கோபத்திற்கும் சுடுசரத்திற்கும் வணக்கம். வில்லிற்கும் புஜத்திற்கும் வணக்கம். க்ஷேமம் அளிக்கும் பாணமும் வில்லும் தூணீரமும் நன்மை பயக்கட்டும் .

லோகநாதரான மஹாதேவரான முக்கண்ணரான த்ரிபுரத்தின் காலனான காலாக்னியான நீலகண்டனான காலகாலனான மரணத்தை வென்ற ஸர்வேச்வரரான மஹாதேவருக்கு வணக்கம்.

ஹிரண்மயபுஜங்கள் கொண்ட ஸேனாபதியான திசைகளின் பதியான ஹரிகேசரான மரங்களின் வடிவிலுள்ள பசுபதியான மஞ்சள் மேவிய சென்னிறம் கொண்ட வளரும் ஒளிகொண்ட உபாஸகர்களின் ரக்ஷகரான காளைவாகனரான நிலவிரோதிகளை வெல்பவரான அன்னங்களின் பதியான நரையற்ற கேசம் கொண்ட புஷ்டியானோரின் பதியான நன்மையின் ஹேதுவான ஜகத்தின் ஈசனான சோகத்தை நசிக்கும் ரக்ஷகரான வயல்களின் பதியான வில்லேந்தியவரான தேரோட்டியான அழியாத தருவுரு கொண்ட வனஸ்பதியான சென்னிறத்தினராக இருந்து யாவரையும் காப்பவரான நன் மந்திரியான சிறந்தவணிகரான சிறந்தகாட்டரசரான மக்களை புவியில் வளர்ப்பவரான அன்பரின் அன்பரான தாவரங்களின் ரக்ஷகரான கம்பீரமான சப்திப்பவரான பகைவர்களை அலறச் செய்பவரான காலாட்படைத்தலைவரான வ்யாபித்தவரான யோகிகளின் ரக்ஷகரான தெய்வத்திற்கு வணக்கம்.

துஷ்டர்களை அடக்குபவரான துஷ்டஸம்ஹாரகரான நற்குணங்களும் உயர்ந்த மகிமைகளும் கொண்ட கத்தி ஏந்தியவரான கள்வர்களின் தலைவரான துஷ்டர்களின் வஞ்சகரான கள்ளர்களின்

கள்ளரான தலைப்பாகை அணிந்தவரான மலைகளில் சஞ்சரிப் பவரான வில்லில் நாணை ஏற்றுபவரான அம்பினைத் தொடுத்தடிப் பவரான இலக்கைநோக்கி அம்பை பிரயோகிக்கிறவரான இலக்கை பாணத்தால் பிளப்பவரான அமர்ந்தவரான படுத்தவரான உறங்குபவரான விழித்தவரான நின்றிருப்பவரான ஓடுபவரான ஸபையில் அமர்ந்த ஸபாபதியான குதிரைகளாயும் குதிரைகள் மேல் அமர்ந்து ஓட்டுபவராயும் விளங்குபவரான தெய்வத்திற்கு வணக்கம்.

தாக்குதல் செய்கிறவர்களுக்கும் சுற்றி சூழ்ந்து துன்புறச் செய்கிறவர்களுக்கும் சக்திகணங்களுக்கும் கணங்களுக்கும் கணபதிகளுக்கும் கொள்கைகளில் ஸ்திரமானவர்களுக்கும் விரூபர்களுக்கும் விச்வரூபர்களுக்கும் பெரியோர்களுக்கும் சிறியோர்களுக்கும் ஸேனைகளுக்கும் ஸேனாபதிகளுக்கும் ரதங்களுக்கும் ரதபதிகளுக்கும் தேர்களைசெய்யும் தச்சர்களுக்கும் நயவர்களுக்கும் கொல்லர்களுக்கும் வேடர்களுக்கும் மீனவர்களுக்கும் சஸ்திரங்கள் செய்பவர்களுக்கும் நாய்களின் பதிகளுக்கும் வணக்கம்.

மங்களகரரான ருத்திரரான சர்வரான பசுபதியான நீலகண்டரான சிதிகண்டரான சடையணிந்தவரான மொட்டையடித் தவரான ஆயிரம் கண்களைக் கொண்டவரான மலைத்தலைவரான சிதிகண்டரான வர்ஷிப்பவரான குள்ளரான உயரரான குறைந்தவரான முதியவரான குழந்தையான ஆதியான புராதன தவரான விரைபவரான பரம்பொருளான அருவியான வெள்ளமான அலைகளான அமைதியான நீரான ஓடைகளான தீவில் இருப்பவரான தெய்வத்திற்கு வணக்கம்.

மூத்தவரான இளையவரான ஆதியாயுமான அந்தமாயுமான அனாதியாயுமான அனந்தமாயுமான உயிர்களின் வயிற்றிலும் மரங்களின் வேர்களிலும் உள்ளவரான இயற்கைவடிவினரான பாவிகளை தண்டிப்பவரான நல்லோர்களுக்கு நன்மை பயப்பவரான வயல்களிலும் பயிர்களிலும் இருப்பவரான வேதம்போற்றுபவரான மண்புதராயும் செடிகொடிகளாயும் இருப்பவரான தெய்வத்திற்கு வணக்கம்.

ஜயபேரிகையின் முழக்கமான கோலான போர்களத்தில்

திரும்பாததீரனான நற்போர்வீரரான நற்தூதரான நற்சேவகரான ஒற்றையடிப்பாதையில் செல்பவரான உயர்ந்த பாதையில் வழிப்போக்கரான நீரில் சிறுகற்களாய் இருப்பவரான மடுநீர் அருவிநீர் நதிநீர் ஏரி நீர் கிணற்று நீர் சுனைநீர் மேகநீர் பொழியும்நீர் இவைகளில் உள்ளவரான மேகம் மின்னல் சரத்காலம் மழைக்காலம் கோடைக்காலம் புயல் இவ்வுருவங்கள் கொண்ட தெய்வத்தை வணங்குகிறேன்.

ஸோமனான ருத்ரனான அருணனான வெண்மைநிறனான உக்ரனான பீமனான குருவான பித்ருக்களான சிற்றின்பமான பேரின்பமான உப்பரிகை படுக்கை இவைகளில் அமர்ந்தவரான குகைகளில் உள்ளவரான பனித்துளி மீது உள்ளவரான தூசிகளிலும் புழுதிகளிலும் உள்ளவரான காய்ந்த மரக்கட்டைகளிலும் ஈரக்கட்டைகளிலும் இருப்பவரான கட்டாந்தரையிலும் புல்தரைகளிலும் பச்சிலைகளிலும் உள்ளவரான தேவர்களின் ஹ்ருதயமான தெய்வத்திற்கு வணக்கம்.

ருத்திரனே! மக்களுக்கும் மாக்களுக்கும் ஸகலசராசரங் களுக்கும் தீங்கு வராமல் நன்மை பயக்கிக் காத்தருள்வீராக, ஆயிரக்கணக்கில் ஆயிரவகையில் உள்ள புவியிலும் அந்தரிக்ஷத்திலும் ஸுவர்லோகத்திலும் எங்கும் வ்யாபித்த ருத்திரர்களுக்கு எங்கள் வணக்கம். புஷ்டியை வளர்த்திடும் த்ரயம்பக ருத்திரனை உபாஸிக்கிறேன். அவர் எங்களை ம்ருத்யுவிலிருந்து விடுபடச் செய்வார்.

**பதினாறு: சமகம்**

அகண்டமான பரம்பொருளை வழிபடவேண்டிய ஸாமக்ரிகளைப் பற்றி கீழே உள்ள மந்திரங்கள் கூறுகின்றன. இவையின் வளர்ச்சியே வழிபாட்டின் பலனாம்.

அக்னியும் விஷ்ணுவும் ஒருமித்த மனதுடன் ஒளிகளாகிய செல்வங்களை எடுத்துக் கொண்டு இங்கு வரட்டும். வாக்கை செழிக்கச் செய்யட்டும்

ஸம்ருத்தியும் அன்னமும் ஈகையும் அறிய உற்சாகமும் அன்னரக்ஷணமும் ஸங்கல்பமும் ஸ்வரமும் ஸ்லோகமும் கேள்வியும் ஜோதியும் ப்ராணனும் அபானனும் வ்யானனும்

சித்தமும் செவிச்செல்வமும் வாக்கும் மனதும் நற்பார்வையும் ஸ்ரோத்திரமும் நல்விவேகமும் வலிமையும் ஓஜஸும் பொலிவும் ஆயுளும் ஜீர்ணமும் ஆத்மாவும் உடலும் கவசமும் உடல் உருப்புகளும் எனக்கு வேண்டும்.

முதன்மையும் தலைமையும் நன்மைக்கான கோபமும் அறிவும் மனதும் இனிய ஜலங்களும் வெற்றியாற்றலும் மகிமையும் திருவும் கல்வியும் கனிவும் செல்வமும் வீடும் வயலும் வாழ்வும் புத்திர பௌத்திரர்களும் வித்யையும் உண்மைநாட்டமும் தன்னம்பிக்கையும் தாவரஜங்கமங்களும் ஆகர்ஷணமும் வினயமும் காந்தியும் ஆடல் பாடல் களிப்புகளும் யோகக்ஷேமங்களும் நிதியும் புண்ணியமும் நற்புரமும் நல்வழியும் தீர்கதரிசனமும் ராஜவித்யையும் காத்தலும் துணிவும் எனக்கு வேண்டும்.

ஜகத்தின் இன்பமும் ஜோதியின்பமும் ப்ரியமும் காமமும் நன்மனதும் ஸ்ரேயசும் புலனடக்கமும் புகழும் தைரியமும் தன்மானமும் விச்வமும் ஞானமும் ருதமும் அம்ருதமும் எதிரிகள் இல்லாத்தன்மையும் அச்சமற்றத்தன்மையும் நல்லுறக்கமும் நன்நடையும் எனக்கு வேண்டும்.

அன்னமும் நல்வார்த்தைகளும் பாலும் தெளிதேனும் தெளிவான நெய்யும் உற்றார் உறவினரோடு விருந்துண்டு மகிழ்தலும் உழவும் உழைப்பும் மழையும் நன்நிலமும் செடிகொடிகளும் மரங்களும் புஷ்டியும் தானியச்சிறப்பும் மேன்மையும் ஏராளமும் உயர்வும் பூர்ணத்துவமும் மேல்நிலையும் அன்னமும் பசிநீங்கிடுதலும் நெல் கோதுமைப் பயறு வகைகளும் எனக்கு வேண்டும்.

கல்லும் மண்ணும் குன்றுகளும் மலைகளும் தங்கமும் வனஸ்பதிகளும் ஓஷதிகளும் தாமிர உலோகங்களும் தீயும் நீரும் கொடிகளும் தொண்டால் விளைந்தப் பயிர்களும் இயற்கையாய் வளரும் பயிர்களும் ஆரண்ய க்ராமிய பசுக்களும் செயலும் சக்தியும் சித்தியும் சுத்தியும் எனக்கு ஸாதனைகளால் ஓங்கட்டும். விவேகவொளியான அக்னியும் தார்மிக ரஸனையான ஸோமனும் ஆத்மாவான ஸூர்யனும் அனுபூதியான ஸரஸ்வதியும் பேரறிவான ப்ருஹஸ்பதியும் அன்பான மித்திரனும் தூய்மையான வருணனும்

ஆனந்தமான அச்விகளும் சிந்தனாசக்திகளான மருத்துக்களும் உடலான பூலோகமும் ப்ராணனான புவர்லோகமும் மனதான ஸுவர்லோகமும் எனக்கு மனோபலமான இந்திரனுடன் சேர்ந்து விளங்கட்டும்.

எண்களும் சடங்குகளும் க்ரஹங்களும் இயற்கையும் எனக்கு தெய்வீகஸாதனைகளால் ஓங்கட்டும்.

பதினேழு:

ஸோமம் ஒருயர்ந்த பானம். மனிதர்கள் அதன் நண்பர்கள். ஜலங்களால் பவித்திரமானது. ப்ரவஹிக்கிறது. இந்திரனின் மிகவும் நண்பர். வாயுதேவனால் பரிசுத்தப்படுத்தப்பட்டது. ப்ரவஹிக்கிறது. ஸோமனே! யமநியமங்களால் நீங்கள் அடையப்படுபவர். என் இதயம் உங்கள் ஸ்தானம். ஸரஸ்வதியின் சக்தியையும் இந்திரனின் வீரத்தையும் கொண்டவர், உங்களை ஆனந்தத்திற்காக ஏற்கிறேன்,. நீங்களே ஜோதி. ஜோதியைத் தருவீர். நீங்களே சக்தி. சக்தியைத் தருவீர். நீங்களே பலம். பலத்தைத் தருவீர். நீங்களே தருமம். தருமத்தைத் தருவீர். நமுசியால் மறைக்கப்பட்ட ஸோமத்தை அச்விகள் இங்கு எடுத்துவந்துள்ளனர். அதை ஸரஸ்வதி இந்திரனுக்குத் தந்தாள். அதை இந்த யக்ஞத்திலே பருகுகிறேன். அறிஞர்களே! என்னை பவித்திரமாக்கவும். என் மனதையும் அறிவையும் ஆன்மாவையும் பவித்திரமாக்கவும். அக்னியே! உங்கள் ஒளியால் பவித்திரமாக்கவும். பவமானன் எங்களை இன்று பவித்திரமாக்கட்டும். ஸூர்யனே! எல்லாபக்கத்திலிருந்தும் எங்களை உங்கள் ரூபங்களாலும் இந்த யக்ஞத்தாலும் பவித்திரமாக்குங்கள். அதர்வாக்கள் அங்கிரஸர்கள் ப்ருகுக்கள் யாவருக்கும் ஸோமத்தையளிப்போம். இந்தப் புராதன பித்ருக்களின் பாதையைப் பின்பற்றுவோம். புராதன பித்ருக்கள் யக்ஞத்திற்கு வரட்டும். அவர்களுடன் யமன் ஹவிர்பாகங்களைப் பெறட்டும். ஸோமனே! நீங்கள் ஞானத்தைக் கொண்டவர். அந்த அறிவுடன் தேவர்களின் பாதையில் நேராகச் செல்லவும். பித்ருக்கள் உங்கள் அறிவாலும் வழிகாட்டுதலாலும் உயர்ந்தவற்றை அடைந்துள்ளனர். பித்ருக் களுடன் கூடிய ஸோமனே! ஜோதியிலும் ஜகத்திலும் தங்களை மஹிமைப்படுத்துங்கள். பித்ருக்களே! உங்களுக்கு இவ்வாஸனங்கள்.

இங்கு வாரீர். சாந்தியையும் ஆனந்தத்தையும் ரக்ஷிப்பையும் தாரீர். பித்ருக்கள் எங்களை அவர்களின் உபதேசத்தால் அறிஞர்களாக்கி ரக்ஷிக்கட்டும்.

பித்ருக்களுக்கு ஹவிர்பாகங்களை அளிக்கிறோம் . அவர்கள் ஞானவ்ருத்தர்கள். நற்பண்புகள் கொண்ட மனிதர்களுடன் வசிப்பவர்கள். அக்னியே! புராதன பித்ருக்கள் உங்களை வழிபட்டு பரிசுத்தர்களாய் ஸத்யஜீவிகளாய் ஞானிகளாய் இருந்து வாஸஸ்தானத்தைப் பெற்றனர். அக்னியே! நீங்கள் அக்ஞானத்தையும் இருளையும் போக்குவீர்.

**பதினெட்டு:**

க்ஷத்திரத்தின் பிறப்பிடம் நீர். க்ஷத்திரத்தின் நாபி. உங்களை யாரும் ஹிம்ஸிக்கவேண்டாம். என்னை நீங்கள் ஹிம்ஸிக்காதீர். தேவஸவிதாவின் தூண்டுதலாலும் அச்வினிபாஹுக்களாலும் பூஷண புஜங்களாலும் உமக்கு சக்தியைத் தருகிறேன். ஸரஸ்வதியின் குணப்படுத்தும் சக்தியால் உனக்கு வீரமும் அன்னமும் கிடைக்கட்டும். இந்திரபலத்தால் நீ தனத்தையும் உடல் வலிமையையும் புகழையும் அடைவாய். என் தலை அனுக்ரஹமாய் இருக்கட்டும். வாய் கீர்த்தியாய் இருக்கட்டும். முடிகள் தேஜஸாய் இருக்கட்டும். மூச்சு சாவற்றதாய் இருக்கட்டும். கண் அரசனாய் இருக்கட்டும். காது இளவரசனாய் இருக்கட்டும்.

என் நாக்கு ஆனந்தமாயிருக்கட்டும். பேச்சு சக்தியாய் இருக்கட்டும். மனம் தருமமாய் இருக்கட்டும். அறிவு ஒளியாயிருக்கட்டும். வெல்லும் சக்தியே என் நண்பனாயிருக்கட்டும். என் புஜங்கள் இந்திரனின் பலமாய் இருக்கட்டும். எனது ஹஸ்தங்கள் வீரச்செயல்களாய் இருக்கட்டும். எனது இதயம் தாக்குதலை தாங்கும் கவசமாய் இருக்கட்டும். எனது அங்கங்கள் மங்களமாய் இருக்கட்டும்.

நான் க்ஷத்திரத்தின் சக்தியால் ஸ்திரமாய் நிற்கிறேன். குதிரைகளையும் பசுக்களையும் ஆஸ்ரயித்துள்ளேன். ஜோதியையும் ஜகத்தையும் ஆஸ்ரயித்துள்ளேன்.

தேவர்களிடம் இருப்பதான ஸூர்யவொளியைக் கண்டு இருளிலிருந்து விலகவேண்டும். எங்கு அக்னியும் தேவர்களும்

உள்ளனரோ எங்கு வேதியர்களும் வேந்தர்களும் சரியாக தங்கள் ஸேவைகளைச் செய்கின்றனரோ அந்த சமூகம் உயர்ந்த சரியான சமூகமாய் இருப்பதாய் நான் எண்ணுகிறேன்.

உன் இதயம் தேவனுடன் தூண்டப்படட்டும். உனது எல்லா அங்கச்சேர்ப்புகளும் சக்திவாய்ந்ததாய் இருக்கட்டும். அழியாத ஆனந்தமாய் இருக்கட்டும். ஸோமன் உமது ரக்ஷகராவார்.

இந்திரனைப் போற்றுங்கள். வ்ருத்திரஸம்ஹாரகர். அவருடன் கூடியே இருளை ஒழிக்கும் ஸூர்யனை தேவர்கள் உதிக்கச் செய்தனர்.

எவரை ஜகத்து ஆஸ்ரயித்துள்ளதோ அந்த உயிரினங்களின் தேவரைப் போற்றுவோம். அவர் அரசர். பலம் வாய்ந்தவர். அவரின் பலத்தால் உன்னை நான் ஏற்று இதயத்தில் வைக்கிறேன். காலையில் ஒளிகொண்ட ஸூர்யன் உதிக்கிறார், சுருசுருப்பானவர். உறுதியானவர். முப்பத்திமூன்றுதேவர்களுடன் இந்திரன் எங்கள் யக்ஞத்திற்கு வரட்டும்.

குதிரைகளின் நாயகன் இந்திரன். கிரணங்களைக் கொண்டவர். அகண்டன். ஆதித்யர்களுடனும் வஸுக்களுடனும் இவ்வாஸஸ் தானத்தில் அமர்ந்து ஹவிர்பாகங்களை ஏற்கட்டும். இந்திரனைச் சூழ்ந்து வீரர்களின் ஸேனைகள் நின்று தீயோர்களை அழிக்கின்றன.நிசாதேவியும் உஷாதேவியும் இந்திரனை ஆஸ்ரயிக்கட்டும். அச்சமற்ற வீரனான இந்திரன் ரக்ஷிப்பிற்காகப் போற்றப்படுகிறார். நீங்கள் எங்கள் நண்பனாய் இருங்கள். உங்கள் சக்திகள் ஸூர்ய னைப் போல் பலப்பட்டு வளரட்டும். இந்திரன் ரக்ஷிப்பிற்காக அரு கேயிருந்தும் தூரத்திலிருந்தும் வரட்டும். அவர் விருப்பங்களைத் தருபவர். பலத்தின் தேவர். மனிதர்களின் ரக்ஷகர். வஜ்ரபாணி. சத்ருஸம்ஹாரகர். இந்திரன் குதிரைகளில் வரட்டும். எங்களுக்கு செல்வங்களை அளித்து ஆசீர்வதிக்கட்டும்.

அச்விகளே! ஒளிகொண்ட அக்னி வளர்க்கப்பட்டுள்ளது. இந்திரனுடைய ஸோமம் ஸரஸ்வதியால் பிரவஹிக்கச்செய்யப் பட்டுள்ளது.

அச்விகளே! ஸரஸ்வதியே! தேவவைத்தியர்களே! இரவிலும் பகலிலும் ரக்ஷிப்பீர்கள். ஸோமம் ப்ரவஹிக்கையிலேயே இந்திரனை ரக்ஷிப்பீர்கள். நமுசியையும் வலனையும் வதைக்கும் இந்திரனையும்

ஹவிர்பாகங்களால் அச்விகளும் ஸரஸ்வதியும் வலுப்படுத்தியுள்ளனர். ஹவிசுகளை அளித்து அச்விகளும் ஸரஸ்வதியும் இந்திரனைப் புகழ்பாடியுள்ளனர்.

இந்திரன் நமுசியிடமிருந்து பலத்தையும் செல்வங்களையும் மீட்டார். ஸூர்யனும் வருணனும் பலத்தையும் செல்வங்களையும் ஸாதகனுக்களிக்கின்றனர். தருமகாரியங்கள் செய்யும் ஒளிமயமான அச்விகளும் அறிவை இயக்கும் ஸரஸ்வதியும் சத்ருஸம்ஹாரகரான இந்திரனும் எங்களை ரக்ஷிக்கட்டும். பரிசுத்தமான பரிசுத்தமாக்கும் தூய அனுபூதியமான ஸரஸ்வதி எங்கள் யக்ஞத்தை வளர்க்கவும். அறிவை ஜோதிர்மயமாக்குபவள் அவள்.

**பத்தொன்பது:**

உதவி நாடுகிறேன். வருணனே! மந்திரத்தைக் கேளீர். அனுக்ரஹியுங்கள். ஞானஸ்வரூபியான ஸர்வசரண்யரான ஹவிர்பாகங்களை தரிக்கும் அக்னியே! வருணனின் கஷ்டத்தை எங்களிடமிருந்து நீக்கவும்.

எங்களை நிந்திப்பவர்களை விலக்கவும். உஷையின் காலத்திலே எங்களிடம் மிக நெருக்கமாயிருங்கள். வருணனைக் கொண்டுவாருங்கள். அன்புகாட்டி எங்கள் துதிகளைக் கேட்கவும். தார்மீகர்களின் ஜன்மஸ்தானமான, தாக்குதல்களிலிருந்து காக்கும் புராதனமான, ஸத்தியத்தை உயர்த்தும், ஆனந்தத்தின் உருவான, அகண்ட அதிதியை ரக்ஷிப்பிற்காக அழைக்கிறேன்.

அக்னியே! வாயுவே! இந்திரனின் நண்பர்களான அச்விகளே! ஆயுளையும் ஆரோக்கியத்தையும் தரவும். தார்மிகரான இந்திரனுக்கு ஸரஸ்வதி ஆனந்தத்தை அளித்துள்ளார். அச்விகள் கண்களுக்கொளியைப் போல் இந்திரனுக்கு பலத்தை அருளினர். இந்திரனைக்கொண்ட யக்ஞம் செய்தனர். அவ்வாறே இந்திரதேவதாகமான யக்ஞத்தை நீயும் செய்.

தேவலோகக்கதவுகளான அச்விகள் இந்திரனுக்கு வாழ்வையும் பலத்தையும் அளித்துள்ளனர். யக்ஞம் செய்துள்ளனர். அவ்வாறே நீயும் செய். அச்விகளும் ஸரஸ்வதியும் இந்திரனுக்கு வாக்கையும் வலுவையும் அளித்தனர். யக்ஞம் செய்துள்ளனர். அவ்வாறே நீயும் செய். அச்விகளும் ஸரஸ்வதியும் இந்திரனுக்குப்

புகழையும் நுட்பசக்திகளையும் அளித்துள்ளனர். யக்ஞம் செய்தனர். அவ்வாறே நீயும் யக்ஞம் செய்.

அச்விகளும் ஸரஸ்வதியும் இந்திரனுக்குக் காவலாளிகளை ஸ்ருஷ்டித்தனர். யக்ஞத்தின் மூலம் பலத்தையும் ஒளியையும் அளித்தனர். அவ்வாறே நீயும் செய்.

**இருபது:**

நீர் ஜோதி. அம்ருதம். வாழ்வின் ரக்ஷகர். அதனால் என் வாழ்வை ரக்ஷிப்பீர். உம்மை நான் தேவஸவிதாவின் தூண்டுதலாலும் அச்வினிபுஜங்களாலும் பூஷணஹஸ்தங்களாலும் ஏற்கிறேன். தேவனே! நீர் புகழ்பெற்றவர். நீரே ப்ரபஞ்சம். அடக்குபவர். இயக்குபவர். ஸாதக்னே! அக்னியை த்யானிப்பாய். ஸூர்யனின் பண்புகளை நாங்கள் மனதால் ஆழ்ந்து த்யானிக்கிறோம். அதனால் அவர் நம் எண்ணங்களை உயர்த்தட்டும். ரக்ஷிப்பிற்காக நான் ஸ்ருஷ்டிகர்த்தாவான ஜோதிர்மயமான தேவஸவிதாவைத் தூண்டுகிறேன். அவர் எல்லாம் அறிந்தவர். தேவர்களுக்கு ஆஸ்ரயர். ஸத்தியம் எது? அஸத்தியம் எது? என்கின்ற ஞானத்தை அடைய நாங்கள் ஸர்வஸாக்ஷியான தேவஸவிதாவை வழிபடுகிறோம்.

அழியாத ஞானஸ்வரூபியான தேவதூதனான அக்னியை எதிரே ஸ்தாபித்துள்ளேன்..அவர் தேவர்களை இங்கு அழைத்து அமர்த்தட்டும். ஸர்வவ்யாபியான பவித்திரரான பவமானரே! நீங்கள் ஜலங்களை பலப்படுத்தி இயக்குகிறீர். க்ஷீரத்தைத் தருகிறீர்.

சத்ருஸமஹாரகக்குதிரையே! நீ வாயு. வீரகுணம் கொண்டாய். ஆதித்யர்களின் பாதையைப் பின்பற்று. தேவர்களே! நற்பண்புகள் கொண்டவர்களே! இந்தக் குதிரையை ரக்ஷியுங்கள். இங்கே ஆனந்தம். இங்கே சந்தோஷம். இங்கே மனத்திருப்தி.

ப்ரஜாபதிக்கு ஸ்வாஹா. உயர்ந்த ப்ரஜாபதிக்கு ஸ்வாஹா. இது ப்ரஜாபதிக்கு. நம் மனதறிந்த ஆதித்யர்களுக்கிது. அதிதிக்கு ஸ்வாஹா. ஆனந்தமளிக்கும் அதிதிக்கு ஸ்வாஹா. ஸரஸ்வதிக்கு ஸ்வாஹா. பரிசுத்தமாக்கும் ஸரஸ்வதிக்கு ஸ்வாஹா. பலம் வாய்ந்த ஸரஸ்வதிக்கு ஸ்வாஹா. பூஷாவிற்கு ஸ்வாஹா. விஷ்ணுவிற்கு ஸ்வாஹா. ரக்ஷகரான விஷ்ணுவிற்கு ஸ்வாஹா, ஸர்வவ்யாபியான

அவரை நாங்கள் சிறந்தவராயும் சராசரங்களின் தேவராயும் கூறுகிறோம். எங்களின் ரக்ஷகரான அந்த ஸூர்யன் எங்கள் தனத்தை நன்மைக்காக வர்தனம் பண்ணட்டும். குதிரைகள் போன்று வேகமான, த்ருடமான, ஜோதியில் வ்யாபித்த, மேகங்களை இயக்கு கின்ற, அக்னியை நாக்காகக் கொண்ட ஸூர்யனைக் கண்ணாகக் கொண்ட மருத்துக்களை ரக்ஷிப்பிற்காக அழைக்கிறோம்.

தேவர்களே! நன்மையையே நாங்கள் காதுகளால் கேட்கவேண்டும். கண்களால் பார்க்கவேண்டும். எங்கள் உடல் உறுப்புகளால் தேவர்கள் அளித்த வாழ்வை வாழுகிறோம்.

ஜோதியில் அதிதி. ஜகத்தில் அதிதி. அன்னை அதிதி. தந்தை அதிதி. மைந்தன் அதிதி. விச்வேதேவர்களும் பஞ்சஜனங்களும் அதிதி. மக்களும் மாக்களும் பிறந்தவர்களும் பிறக்கப்போகிற வர்களும் யாவும் அகண்டஜோதியான அதிதியேயாம்,

ப்ருஹஸ்பதியே! ருதத்தின் புதல்வனே! தீயோர்கள் அடையமுடியாத ஒளியை அருளும். சதக்ரதுவே!(நூறு நற்சங்கல்பங்களும் ஸாதனைகளும் கொண்டவரே) இந்திரனே! வ்ருத்திரஸம்ஹாரகரே! ஸோமபானம் பண்ணவும். பசுக்களைச் செல்வமாகக்கொண்ட இந்திரனுக்காக நான் உன்னை ஏற்கிறேன். இது தங்கள் ஸ்தானம். அவருக்காக உன்னை ஏற்கிறேன்.

வைச்வானரனுக்கு ஸ்தோத்திரம். அவர் அழியாதவர். ஒளிக்கும் யக்ஞத்திற்கும் தேவன். ஸத்தியஜீவி. நீ யமநியமங்களைக் கொண்டவன். பசுக்களை செல்வங்களாகக் கொண்ட வைச்வானர னுக்காக உன்னை ஏற்கிறேன். இது உன் இடம்.

ஸோமனே! முக்தியை அறிந்தவரே! இந்திரனுக்காக ப்ரவஹிக்கவும். வருணனுக்காக ப்ரவஹிக்கவும். நாங்கள் புஷ்டி துஷ்டியாய் இருக்கவேண்டும். உயர்ந்த புத்திரர்களைப் பெறவேண்டும். பசுக்கள் குதிரைகளுடன் இருக்கவேண்டும். தேவர்கள் எங்களை ரக்ஷித்து யக்ஞத்தை நடத்திவைக்கவேண்டும். இந்திரனே! எங்களிடம் வாரீர். இது உங்களுக்கான ஸோமம். விடாமல் இதைப் பருகவும். இவ்வாஸனத்தில் அமர்ந்து ஸோமத்தைப் பருகவும். ஸோமமே! மதுரமான ஆனந்தரஸமான ஓடையாகப் பிரவஹிப்பாய்.

அக்னியே! வருடங்களும் பக்ஷங்களும் அயனங்களும்

ருதுக்களும் உங்களை பலப்படுத்தட்டும். ஜோதியின் நான்கு திசைகளையும் ஜ்வலிக்கச்செய்பவராய் ஜ்வலியுங்கள். க்ஷேம த்திற்காக ஓங்கவும். ஸாதகனை ஞானியாக்கவும். வழிபடுபவன் ஹிம்ஸிக்கப்படக்கூடாது.

அறிஞர்கள் உங்களைத் தலைவர்களாய் கொண்டனர். அவர்களை ஆசீர்வதிக்கவும். தீயோர்களை அறவே ஒழிக்கவும். உங்கள் ஸ்தானத்திலே விழித்திருக்கவும். எங்களை எதிர்க்கும் நெஞ்சம்கொண்ட தீயோர்களையும் விலக்கவும். எங்கும் ஒளிமயமாக்கி சோகத்தைப் போக்கவும். க்ஷேமத்தை அளிக்கவும். ப்ருஹஸ்பதியே! ஸூர்யனே! அறிவை அளித்து அறிவை ஓங்கச்செய்வீர். மேலும் மேலும் ஓங்கச்செய்யுங்கள்.

அவனிடம் தேவர்கள் சந்தோஷிக்கட்டும், பாவங்களிலிருந்து விடுபடச்செய்க. யமனிடம் உள்ள அச்சத்தை நீக்குக. அச்விகளும் அக்னியும் ம்ருத்யுபயத்தைப் போக்கட்டும். எங்கள் ரக்ஷகரான அக்னி எங்கள் பாதையை க்ருதம் கொண்டதாய் ஆக்கட்டும். தூண்டப்பட்ட அக்னி சுடர்விட்டு ஒளிமயமாய் எரிகிறார். அவரின் ஜ்வாலைகள் எங்கும் வ்யாபிக்கின்றன.

நிசாதேவியும் உஷாதேவியும் எங்கள் யக்ஞத்தைக் காக்கட்டும். அக்னியும் வாயுவும் எங்கள் யக்ஞத்தைக் காக்கட்டும். இளாவும் ஸரஸ்வதியும் பாரதியும் யக்ஞத்தைக் காக்கட்டும். இங்கு அமரட்டும். ஏதோவோர் ஆன்மா இயற்கை முழுவதிலும் உள்ளது. நாங்கள் அந்தக் கடவுளை ஹவிர்பாகத்துடன் அணுகுவோம். அந்த தேவ னே ஜீவஜலத்தினை ஜீவிக்கச்செய்து இயக்கினார். அவரே தேவர்களில் சிறந்தவர். அவருக்கு ஈடு யாருமில்லை. நாங்கள் அந்த தேவனை ஹவிசால் அணுகுவோம்.குதிரைகளுடன் வரும் வாயுவே! யக்ஞம் செய்பவரை நாடுகிறீர். உங்கள் குதிரைகளால் எங்களிடம் வந்து வரங்களை அளிக்கவும். சதகணங்களை ஸஹஸ்ரகணங்களை உடைய தேவனே! வாயுவே! யக்ஞத்திற்கு வாரீர். ஸோமத்தைப்பருகுவீர். ஸோமம் உள்ள வீட்டை அணுகுவீர்.

இந்திரனே! ஈடு இணையற்றவரே! உங்களைப் போரில் வீரர்கள் உதவிக்கு நாடுகிறார்கள், யக்ஞத்திற்கு வாரீர். நீரே உங்கள் நண்பர்களின் தலைவர். வஜ்ரபாணி.

யக்ஞத்தில் அக்னியைப் போற்றவும். பலத்தைப் பெறலாம்.

க்ருஹத்தை அளிப்பவர். பலத்தின் புதல்வர். நம் தோழர். நம் போர்களத்தில் உதவுபவர். அக்னியே! நீரே வருடமாயும் அயனமாயும் பக்ஷமாயும் மாதமாயும் காலஸ்வரூபராயும் உள்ளீர்.

இருபத்தி மூன்று:

யக்ஞத்தின் ஸ்தானம் புவியின் நாபியாம். அங்கு ஹோதா இந்திரனை வழிபடுகிறார். அக்னி ஸ்வர்கத்தின் உச்சி வரை தூண்டடப்பட்டு மிளிர்கிறார். அவர் க்ருதத்தை அனுபவிக்கட்டும்.

வீரனான ஸ்வயம்புவான ரக்ஷகரான தன்னை அறிந்தவரான தார்மிகரான ஆனந்தஸ்வரூபியான இந்திரனை ஹோதா வழிபடுகிறார். அவர் க்ருதத்தை அனுபவிக்கட்டும்.

அம்ருதத்துவம் வாய்ந்த வீரனான சத்ருசம்ஹாரகரான வஜ்ரபாணியான இந்திரனை ஹோதா வழிபடட்டும். அவர் க்ருதத்தை அனுபவிக்கட்டும்.

தர்பங்களிலே அமர்ந்துள்ள தேவக்காளையான வீரச்செயல்புரியும் இந்திரனை ஹோதா வழிபடட்டும். அவர் எட்டு வஸுக்களுடன் பன்னிரண்டு ஆதித்யர்களுடன் இவ்வாஸனத்தில் அமரட்டும்.

இந்திரனின் இரு பசுக்களான அன்னைகளான இரவையும் பகலையும் ஹோதா வழிபடுகிறார். அவர்கள் தங்கள் கன்றான இந்திரனை வலுப்படுத்தியுள்ளனர்.

தேவவைத்தியர்களான இந்திரநண்பர்களான ஸூக்ஷ்ம தரிசிகளான இந்திரனை குணப்படுத்தி பலப்படுத்தியவர்களான அச்விகளுக்கு ஸாதகன் யக்ஞம் செய்கிறான்.

இளா, ஸரஸ்வதி, பாரதி என்ற தேவதைக்ளுக்கு ஸாதகன் க்ருதத்தாலே யக்ஞம் செய்கிறான். சாந்தியை அளிக்கும் இந்திரஸகரான வீரச்செயல்கள் புரிபவரான வனஸ்பதிக்கு ஸாதகன் யக்ஞம் செய்கிறான். அவர் ஹவிர்பாகத்தை அனுபவித்து நம் பாதையை ம்ருதுவாக்கட்டும்.

---

சஞ்சரிப்பதால் (ப்ரவஹிப்பதால்) ஸரஸ்வதி எனப்பெயர் என மத்வர் கூறுகிறார். இவள் அனுபூதி தேவதை.
போற்றத்தகுந்தவள் என்பதால் இளா என்றுப் பெயர் என மத்வர் கூறுகிறார்.

இந்திரசக்தியை வலுப்படுத்திய இரவும் பகலும் செல்வங்களை அருளட்டும். ஒருவள் சோகத்தைப் போக்கட்டும். மற்றொருவள் செல்வமளிக்கட்டும். இவ்விருவரும் இந்திரனை பாலூட்டிப் புஷ்டிப்படுத்தினார்கள்.

மூன்று தேவதைகளுமே இந்திரபலத்தை ஓங்கச்செய்தனர். பாரதி ஸ்வர்கத்தைத் தொட்டாள். ருத்திரர்களின் ஸரஸ்வதி யக்ஞதனத்தை வலுப்படுத்தினாள். இளா புவியைத் தொட்டாள். விருப்பங்களை பூர்த்தி செய்யும் ஜ்வலிக்கும் அக்னி இந்திரபலத்தை வலுப்படுத்தியது. பலத்தை அளிக்கும் இந்திரனுக்கும் அக்னிக்கும் ஸாதகன் யக்ஞம் செய்துள்ளான். ஸாதகன் இந்திரனுடன் க்ருதத்தை அனுபவிக்கட்டும்.

தூண்டிவிடப்பட்டு சுடர்விட்டெறியும் அக்னியே! ஸர்வஞரே! எது தேவர்களுக்குப் பிரியமோ அதை அவர்களுக்கு அளிப்பீர். தேவர்களிடம் போகும் பாதையிலே க்ருதத்தைப் பரப்பி குதிரை தேவர்களிடம் செல்லுகிறது. குதிரையே! உன்னை ஜோதியில் உள்ளவர்கள் உபசரிக்கட்டும். நீ ஸாதகனுக்கு அன்னஸம்ருத்தியை அளிப்பாய். குதிரையே! நீ ஆச்ரயிக்கத்தக்கவன். பலசாலி. யக்ஞத்தில் புனிதமானவன். வஸுக்களும் அக்னியும் உன்னை ஜோதிக்கழைத்துச் செல்லட்டும். அகண்டமான கட்டுக்கடங்காத அதிதி தெய்வசக்திகளுடன். இவ்வாஸனத்தில் அமர்ந்து எங்களை பலப்படுத்தட்டும்.

உஷா தேவியும் நிசாதேவியும் வருணனுக்கும் மித்திரனுக்கும் மத்தியில் உள்ளவர்களாய் இந்த யக்ஞத்திலே ஸத்தியத்தின் ஸ்தானத்தை ஸ்தாபிக்கட்டும்.

பாரதி ஆதித்யர்களுடன் இந்த யக்ஞத்தை வளர்க்கட்டும்,. ஸரஸ்வதி ருத்திரர்களுடன் க்ஷேமமளிக்கட்டும். இளா யக்ஞத்தை ரக்ஷிக்கட்டும்.

குதிரையே! பரக்கும் பக்ஷி என்று உன் ஆத்மாவை நான் அறிவேன். அழகிய அழுக்கற்ற பாதையிலே முன்னேற முயற்சிக்கும் உன் தலையைக் கண்டேன். அதன் கொம்புகள் தங்கமாயும் அடிகள் அயமாயும் உள்ளன. நீ அதிவேகன். அன்னப்பறவைபோல் பறந்து ஜோதியில் ஸூர்யரதத்தை ஓட்டுகிறாய். உன்னைப் பலர் பின்தொடருகின்றனர்.

ஒளியற்ற இடத்தை ஒளிமயமாக்கு. உருவற்றதற்கு உருகொடுத்துக்கொண்டே உஷையுடன் அக்னி பிறந்தார். ஒரு வீரன் போருக்குப் போகையில் அவன் இடிகொண்ட மேகமண்டலம்போல் உள்ளான், வீரனே! வெற்றி உனக்கு. உனக்கு ரக்ஷிப்பு இருக்கட்டும். கதவுகளை தேவர்களுக்காகத் திறந்து வைக்கவும். பூஷித்தக் காதலி ப்ரியமான காதலனை வரவேற்பதுபோல் கதவு தேவர்களை வரவேற்கட்டும். நிசாதேவியே! உஷாதேவியே! நீங்கள் ஜ்வலிப்பவர்கள். ஒருவருக்கொருவர் அருகே அமரவும். பாரதி இளா ஸரஸ்வதி இம்மூவரும் இந்த யக்ஞத்திற்கு வரட்டும். ஆசீர்வதிக்கட்டும்.

அதிதியே! போர்க்களத்தில் எங்களைக் காத்தருளவும். எங்களுக்கு ஜோதியினுடையவும் ஜகத்தினுடையவும் ஜலத்தினுடையவும் சக்தியைத் தாரீர். ஜயபேரிகையே! சத்ருக்களைத் துரத்தவும். சக்தியால் உண்டாகும் சப்தத்தை ஜோதியிலும் ஜகத்திலும் வ்யாபிக்கும்படி பண்ணவும்.

**இருபத்தினான்கு:**

ஆதிகாலத்திலே அக்னி வழிபாடே இருந்தது. அது மிகவும் எளிதானது. வேதிகையில் அக்னி வளர்க்கப்படும். அதில் ஸமித்துக்களும் நெய்யும் ஸமர்ப்பிக்கப்படும். அக்னி என்றால் என்ன என்பதை ரிக்வேதத்தின் முதல் ஸூக்தமே நன்கு தெளிவுபடுத்திவிட்டது. அக்னியை கவிக்ரது என்கிறது முதல் ஸூக்தம். கவி என்றால் ஸூக்ஷ்மதரிசி. ஸூக்ஷ்மதரிசியன் ஸங்கல்பமே அக்னி. க்ரது என்றால் ஸங்கல்பம். ஸூக்ஷ்மதரிசி என்பது விவேகியைக் குறிக்கும் சொல். விவேகியின் ஸங்கல்பம் அல்லது இச்சை அல்லது உந்துதல் எதுவாயிருக்கும்? அது விவேகவொளியேயாகும். அறவொளியேயாகும். இதை மற்ற பல்லாயிரம் மந்திரங்கள் வேதத்தில் தெளிவு படுத்துகின்றன. அக்னி என்பது விவேகவொளியேயாம். விவேகவொளி என்றால் என்ன? தருமம் என்றால் என்ன? வேதம் முழுவதும் என்ன என்ன செயல்கள் விவரிக்கப்படுகின்றனவோ அவையே தருமம், விவேகவொளி. வேதம் முழுவதும் தேவர்களின் செயல்கள் விவரிக்கப்படுகின்றன. வேதம் விவரித்தபடி தேவர்களின் செயலை

நிரூபித்துள்ளனர். இவ்வாறு சுற்றுப்புரத்தில் உள்ள காற்று மாசற்று ஆவதால் கடுமையான வ்யாதிகள் கூட சுற்றுப்புரத்தில் பரவுவது இல்லை என அவர்கள் கருதுவர். இவ்வெளபாஸனத்தைப் பற்றிய விளக்கம் பெரிதாக முன்பேயே கூறப்பட்டுவிட்டது. இதைத் தவிர பிறப்பிலிருந்து இறப்பு வரை நடக்கும் கல்யாணம் முதலிய சில முக்கியமான ஸம்பவங்களில் அக்னி வழிபாடு அல்லது சடங்கு நடத்துவர். இச்சடங்குகள் மூலம் தங்கள் ஒவ்வொரு வாழ்க்கைச் சம்பங்களிலும் தாங்கள் அக்னியோடிருப்பதை தெரிவுபடுத்திக் கொள்கின்றனர். அக்னியற்று எந்த யக்ஞமும் இல்லை. யக்ஞமே செயல்களாகிய ஸமித்துக்களையும் சிந்தைகளாகிய நெய்யையும் விவேகவொளியான தீக்கு ஸமர்ப்பித்தல் என்பதேயாம். இதுவொரு ஸாதனை. இது யோகம். இது ஈசனின் ப்ரீதி என்பதால் இதுவே பக்தி. இது அருள்வதோ ஞானத்தையாகும். இத்தத்துவங்களையே அன்றாடம் வாழ்வில் கொண்டவர்கள் இதை எளியச் சடங்குகளாக அன்றாட வாழ்விலும் கல்யாணம் முதலிய முக்கிய நிகழ்ச்சிகளிலும் நிகழ்த்துவர்.)

**கர்பாதானம்:**

நாம் பலசாலிகளாய் இருந்து வெகுகாலம் வீரியம் கொண்ட ப்ரஜைகளை உண்டுபண்ணுவோம். அக்னியைப்போல் ஸத்புத்திரன் உண்டாகட்டும். ரிஷிகளின் நன்மைக்காக ஸத்புத்திரனை நான் உருவாக்குகிறேன். நற்செல்வங்கள் நிறைந்த ஆண்பெண்களை உருவாக்குவோம். நாம் யாசகர்களுக்கு தனம் அளித்து விடுதலை பெறுவோம். நம் உருவம், ஸந்ததி ஏற்பட சக்தியுள்ளதாய் இருக்கட்டும். விஷ்ணு உன்னை கர்பாதானத்திற்கேற்றவளாகச் செய்யட்டும். ப்ரும்ஹா என் வீரியத்தை உன்னிடம் ப்ரவஹிக்கச் செய்யட்டும். தாதா அதைக் கருவாக்கட்டும். த்வஷ்டா அவயவங் களைச் செய்யட்டும். ஸரஸ்வதி வஸிக்கும் உன்னிடம் அச்விகள் கருவை உருவாக்கட்டும். அச்விகளைப்போல் அழகாகக் குழந்தை உருவாகட்டும். பூமி மழையால் பயிர்களை உண்டுபண்ணுவதுபோல் நீ நற்குழந்தைகளைப் பெறு. பூமி அக்னியையும் ஸுவர்லோகம் இந்திரனையும் தரிப்பதுபோல் நீ கருவை தரிப்பாய். விஷ்ணுவே! இவளிடம் குழந்தையை அருள்வீர். மனைவியே! நீ எனது சக்தியை

வைப்பவர்கள். யக்ஞும் செய்பவனே யஜமானன். அவனே இவ்வித யோகத்தைச் செய்கிறான். அவனை உத்தேசித்தே இவர்கள் யக்ஞும் செய்வர்.

இவ்வித யக்ஞத்தில் யஜமானன் செயல்களாகிய ஸமித்துகளையும் தெளிவான சிந்தைகளாகிய க்ருதத்தையும் விவேகவொளியான அக்னிக்கு ஸமர்ப்பிக்கிறான். இவ்விதம் ஸமர்ப்பிக்கப்பட்ட இப்பொருட்கள் மனோபலமான இந்திரனையும் ப்ராணனான வாயுவையும் தூய்மையான வருணனையும் மற்றும் பலதேவர்களையும் சென்றடைகின்றன. அவைகளைப் பெற்ற தேவர்கள் ப்ராணக்குதிரைகளையும் அறக்காளையையும் சைதன்யபசுக்களையும் ஆன்மீகச்செல்வங்களையும் வீடுபேறையும் அவனுக்கு அருள்கிறார்கள். இதுவே யக்ஞும். இதுவே வெளிச்சடங்குகளாக செய்துகாட்டப்படுகிறது.

இச்சடங்குகளே நாளடைவில் பல்கிப் பெருகி ப்ராம்ஹணத்திலும் மீமாம்ஸகர்களிடமும் பெரிய பெரிய யாகயக்ஞாதிகளாயும் தந்த்ரங்களிலும் ஆகமங்களிலும் பெரியபெரியச் சடங்குகளாகவும் ப்ரும்மாண்டமான ஆலய வழிபாடுகளாகவும் பரிணமித்தது. இது காலப்போக்கில் நடந்த ஒன்றாகும்.

மிகவும் பண்டைய காலங்களில் சடங்குகளுக்கு மிக விஸ்தாரமான முக்கியத்துவம் இருந்ததில்லை. அதன் தத்துவங்களுக்கே இருந்தது. அதாவது பண்டைய காலமக்கள் தருமப்படி வாழ்ந்து ஸாதனையில் வளர்ச்சி பெறுவதையே மிகமுக்கியமாய் கருதினர். அதற்கு எளிய சடங்குகளையும் சிறிய அங்கமாகக் கொண்டிருந்தனர். அவர்களின் சடங்குகளுக்கு தர்பைகளும் ஸமித்துக்களும் அக்னியும் நெய்யும் ஓதுவதற்கு வேதமந்திரங்களும் போதுமானவையே. பெரிதான ஆடம்பரங்கள் ஏதுமில்லை. அக்னியோடேயே தங்கள் வாழ்வு உள்ளது எனக்காட்ட தினந்தோறும் சில நிமிடங்கள் அக்னி வளர்த்து சில வேதமந்திரங்களை ஓதுவர். இதற்கு ஔபாஸனம் என்று பெயர். அக்னியின் புகை, ஸமித்துக்கள் முதலிய பொருட்களோடு கலந்து எங்கும் வ்யாபித்து தனது பவித்திர கந்தத்தால் சுற்றியுள்ள மாசுபாடுகளை நீக்குகிறது என தற்காலத்திலும் விஞ்ஞானவாதிகள்

நிரூபித்துள்ளனர். இவ்வாறு சுற்றுப்புரத்தில் உள்ள காற்று மாசற்று ஆவதால் கடுமையான வ்யாதிகள் கூட சுற்றுப்புரத்தில் பரவுவது இல்லை என அவர்கள் கருதுவர். இவ்வௌபாஸனத்தைப் பற்றிய விளக்கம் பெரிதாக முன்பேயே கூறப்பட்டுவிட்டது. இதைத் தவிர பிறப்பிலிருந்து இறப்பு வரை நடக்கும் கல்யாணம் முதலிய சில முக்கியமான ஸம்பவங்களில் அக்னி வழிபாடு அல்லது சடங்கு நடத்துவர். இச்சடங்குகள் மூலம் தங்கள் ஒவ்வொரு வாழ்க்கைச் சம்பங்களிலும் தாங்கள் அக்னியோடிருப்பதை தெரிவுபடுத்திக் கொள்கின்றனர். அக்னியற்று எந்த யக்ஞமும் இல்லை. யக்ஞமே செயல்களாகிய ஸமித்துக்களையும் சிந்தைகளாகிய நெய்யையும் விவேகவொளியான தீக்கு ஸமர்ப்பித்தல் என்பதேயாம். இதுவொரு ஸாதனை. இது யோகம். இது ஈசனின் ப்ரீதி என்பதால் இதுவே பக்தி. இது அருள்வதோ ஞானத்தையாகும். இத்தத்துவங்களையே அன்றாடம் வாழ்வில் கொண்டவர்கள் இதை எளியச் சடங்குகளாக அன்றாட வாழ்விலும் கல்யாணம் முதலிய முக்கிய நிகழ்ச்சிகளிலும் நிகழ்த்துவர்.)

**கர்பாதானம்:**

நாம் பலசாலிகளாய் இருந்து வெகுகாலம் வீரியம் கொண்ட ப்ரஜைகளை உண்டுபண்ணுவோம். அக்னியைப்போல் ஸத்புத்திரன் உண்டாகட்டும்.. ரிஷிகளின் நன்மைக்காக ஸத்புத்திரனை நான் உருவாக்குகிறேன். நற்செல்வங்கள் நிறைந்த ஆண்பெண்களை உருவாக்குவோம். நாம் யாசகர்களுக்கு தனம் அளித்து விடுதலை பெறுவோம். நம் உருவம், ஸந்ததி ஏற்பட சக்தியுள்ளதாய் இருக்கட்டும். விஷ்ணு உன்னை கர்பாதானத்திற்கேற்றவளாகச் செய்யட்டும். ப்ரும்ஹா என் வீரியத்தை உன்னிடம் ப்ரவஹிக்கச் செய்யட்டும். தாதா அதைக் கருவாக்கட்டும். த்வஷ்டா அவயவங் களைச் செய்யட்டும். ஸரஸ்வதி வஸிக்கும் உன்னிடம் அச்விகள் கருவை உருவாக்கட்டும். அச்விகளைப்போல் அழகாகக் குழந்தை உருவாகட்டும். பூமி மழையால் பயிர்களை உண்டுபண்ணுவதுபோல் நீ நற்குழந்தைகளைப் பெறு. பூமி அக்னியையும் ஸுவர்லோகம் இந்திரனையும் தரிப்பதுபோல் நீ கருவை தரிப்பாய். விஷ்ணுவே! இவளிடம் குழந்தையை அருள்வீர். மனைவியே! நீ எனது சக்தியை

வைப்பவர்கள். யக்ஞம் செய்பவனே யஜமானன். அவனே இவ்வித யோகத்தைச் செய்கிறான். அவனை உத்தேசித்தே இவர்கள் யக்ஞம் செய்வர்.

இவ்வித யக்ஞத்தில் யஜமானன் செயல்களாகிய ஸமித்துகளையும் தெளிவான சிந்தைகளாகிய க்ருதத்தையும் விவேகவொளியான அக்னிக்கு ஸமர்ப்பிக்கிறான். இவ்விதம் ஸமர்ப்பிக்கப்பட்ட இப்பொருட்கள் மனோபலமான இந்திரனையும் ப்ராணனான வாயுவையும் தூய்மையான வருணனையும் மற்றும் பலதேவர்களையும் சென்றடைகின்றன. அவைகளைப் பெற்ற தேவர்கள் ப்ராணக்குதிரைகளையும் அறக்காளையையும் சைதன்யபசுக்களையும் ஆன்மீகச்செல்வங்களையும் வீடுபேறையும் அவனுக்கு அருள்கிறார்கள். இதுவே யக்ஞம். இதுவே வெளிச்சடங்குகளாக செய்துகாட்டப்படுகிறது.

இச்சடங்குகளே நாளடைவில் பல்கிப் பெருகி ப்ராம்ஹணத்திலும் மீமாம்ஸகர்களிடமும் பெரிய பெரிய யாகயக்ஞாதிகளாயும் தந்த்ரங்களிலும் ஆகமங்களிலும் பெரியபெரியச் சடங்குகளாகவும் ப்ரும்மாண்டமான ஆலய வழிபாடுகளாகவும் பரிணமித்தது. இது காலப்போக்கில் நடந்த ஒன்றாகும்.

மிகவும் பண்டைய காலங்களில் சடங்குகளுக்கு மிக விஸ்தாரமான முக்கியத்துவம் இருந்ததில்லை. அதன் தத்துவங்களுக்கே இருந்தது. அதாவது பண்டைய காலமக்கள் தருமப்படி வாழ்ந்து ஸாதனையில் வளர்ச்சி பெறுவதையே மிகமுக்கியமாய் கருதினர். அதற்கு எளிய சடங்குகளையும் சிறிய அங்கமாகக் கொண்டிருந்தனர். அவர்களின் சடங்குகளுக்கு தர்பைகளும் ஸமித்துக்களும் அக்னியும் நெய்யும் ஓதுவதற்கு வேதமந்திரங்களும் போதுமானவையே. பெரிதான ஆடம்பரங்கள் ஏதுமில்லை. அக்னியோடேயே தங்கள் வாழ்வு உள்ளது எனக்காட்ட தினந்தோறும் சில நிமிடங்கள் அக்னி வளர்த்து சில வேதமந்திரங்களை ஓதுவர். இதற்கு ஔபாஸனம் என்று பெயர். அக்னியின் புகை, ஸமித்துக்கள் முதலிய பொருட்களோடு கலந்து எங்கும் வ்யாபித்து தனது பவித்திர கந்தத்தால் சுற்றியுள்ள மாசுபாடுகளை நீக்குகிறது என தற்காலத்திலும் விஞ்ஞானவாதிகள்

செய்து வைத்து ஏற்கிறார். உபனயனம் என்றால் ஸமீபத்திற்கு அழைத்துச்செல்லுதல் என்றே பொருள். அக்னியிடம் அழைத்துச் செல்லுதலே ஆகும். குருவே ஒரு அக்னிதான். குரு வித்யையாகிய அக்னியின் ஸமீபம் அழைத்துச் செல்லுகிறார்.

இதன் சடங்கு புண்யாஹவாசனத்தில் ஆரம்பம். அடுத்தது யஞ்க்யோபவீதத்தை சீடனுக்கு தரிக்கச்செய்தல். யஞ்யோபவீதம் என்பது பூனூலாகும். இது வாழ்வைக் குறிக்கும். ஓங்காரத்தின் பொருள் அ உ ம - பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் - உடல் உயிர் உள்ளம் - விழிப்புணர்வு கணவுணர்வு உறக்கவுணர்வு என்ற மூன்றைக்கொண்ட வாழ்வு ப்ரும்ஹத்தில் முடிகிறது. ப்ரும்ஹத்தில் துவங்குகிறது. ப்ரும்ஹத்தை மையமாய் கொண்டது. உபவீதத்திலுள்ள ப்ரும்ஹ முடிச்சே ப்ரும்ஹம். மூன்று நூல்கள் வாழ்வின் மூன்று ஸ்திதிகளைக் குறிக்கும், இவ்வாறு பூனுலின் தத்துவத்தைச் சான்றோர்கள் கூறுவர். இப்பூனுலை தரிப்பதற்கான மந்திரம் கீழே உள்ளது.)

யக்ஞ்யோபவீதம் பரிசுத்தமானது. சிறந்தது. ப்ரஜாபதியுடன் சேர்ந்து தோன்றியது. ஆயுள் அளிக்க வல்லது. முதன்மையைத் தரவல்லது. ஒளியானது. அதை அணிகிறேன். பலமும் தேஜஸும் எனக்கிருக்கட்டும்.

(அடுத்தது குமாரபோஜனம். உப்புக்காரம் இல்லாமல் நெய்யும் பாலும் சேர்ந்த அன்னத்தால் குமாரனுக்கு போஜனம் செய்விக்க வேண்டும். அடுத்த க்ரியை வபனம். மந்திரம் கூறி சிகையை நாற்புறமும் வபனம் செய்யவேண்டும்.)

எதனால் இவன் எல்லாரையும்விடச் சிறந்து விளங்குவானோ தேவஸவிதாவை காண்பானோ அவ்வண்ணம் இவன் ஆயுள் புகழ் மங்களம் வளர வபனம் செய்கிறேன்.

(மாட்டின் சாணியில் யவம் அல்லது நெல்லை சேர்த்து அதை கேசங்களையும் தர்பைகளையும் போட்டு கீழ்கண்ட மந்திரத்தைச் சொல்லி அத்தி மரத்தடியில் வைத்து விட வேண்டும்.)

வருணனுடைய கேசங்களை சேதித்தப்பின் அவற்றை வைப்பதற்குறிய இடத்தைப் பற்றி யோசித்து அவைகளை விட்டுவிட்டு ப்ருஹஸ்பதி ஸவிதா ஸோமன் அக்னி முதலியோர்

வழக்கத்தில் இருந்து வருகின்றன.)

## இருபத்தாறு: உபனயனம்

(வேதவழிபாடும் கடவுளிடம் அதன் அணுகுமுறையும் மிகவும் இயற்கையானது. ஒவ்வொரு மனிதனும் பிறக்கையில் ஒருதெய்வீக அக்னியுடன் சேர்ந்தே பிறக்கிறான். அவ்வக்னி அவனிடம் மறைந்து கிடக்கிறது. அது குழந்தைப் பருவத்தில் நன்கு வெளிப்பட்டுத் தெரியவில்லை. அவன் வளர வளர அவனின் அறிவு வளர வளர அவ்விவேகவொளியான அக்னியும் வளருகிறது. அக்னியும் பெரும்பாலும் நற்பழக்கவழக்கங்களாலேயே வளருகிறது. நற்பழக்கவழக்கங்கள் நற்சேற்கையாலேயே பெரும்பாலும் வருகிறது. வேதத்தை வாழும் ஒரு முனிவரை வேதியரை அணுகி அவருடன் சிறிது நாட்கள் வாழ்ந்து நற்பழக்கவழக்கங்களைக் கற்றுக்கொள்ளலாம். இதனால் குழந்தைப்பருவத்தில் உள்ளேயே அடங்கிக் கிடந்த அக்னி வளர்ச்சி பெறும். இதற்காகவே குழந்தை ஓரளவிற்கு விவரம் தெரிந்து வாக்ஸ்பஷ்டமும் மனதின் ஓரளவு வளர்ச்சியும் பெற்றபிறகு ஏழெட்டு பிஞ்சுப்ராயத்திலேயே கல்வி பெறுவதற்காக வேதியனிடம் முனிவரிடம் செல்கிறான். வேதத்தை வாழும் அம்முனிவர் இவனைப்போன்ற பல மாணவர்கள் பயிலுவதற்காக ஒரு வித்யாசாலை வைத்துள்ளார். அதற்கே குருகுலம் எனப்பெயர். குலம் என்பதற்கு கூட்டாக சேர்ந்து ஒரு குறிப்பிட்ட கலாசாரத்தையும் பழக்கவழக்கங்களையும் கொண்டு வாழுதல் எனப் பொருள். குருவிடம் வேதவாழ்வை வாழும் முனிவரிடம் இச்சிறுவன் செல்கையில் அவர் அவனிடமே புதைந்துள்ளத் தீயை அவனுக்கு அறிமுகப்படுத்துகிறார். அவனின் அந்தரங்கமான அதையே அவனுக்கு வளர்க்கக் கற்றுத்தருகிறார். இதுவே உண்மைக் கல்வி. வெளியிலிருந்து ஏதோவொன்றைத் திணிப்பது கல்வியாகாது. உள்ளொளி பெருக்குவதே கல்வி. தான்தன்னை அறிதல் கல்வியில் மிகவும் முக்கியம். தன்னையறியாமல் வெளிப் பொருட்களை எவ்வளவுதான் அறிந்தாலும் பயனேது?

குருகுலத்தில் போய்சேருகையில் குரு சீடனுக்கு உபனயனம்

செய்து வைத்து ஏற்கிறார். உபனயனம் என்றால் ஸமீபத்திற்கு அழைத்துச்செல்லுதல் என்றே பொருள். அக்னியிடம் அழைத்துச் செல்லுதலே ஆகும். குருவே ஒரு அக்னிதான். குரு வித்யையாகிய அக்னியின் ஸமீபம் அழைத்துச் செல்லுகிறார்.

இதன் சடங்கு புண்யாஹவாசனத்தில் ஆரம்பம். அடுத்தது யஞ்க்யோபவீதத்தை சீடனுக்கு தரிக்கச்செய்தல். யஞ்யோபவீதம் என்பது பூனூலாகும். இது வாழ்வைக் குறிக்கும். ஓங்காரத்தின் பொருள் அ உ ம - பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் - உடல் உயிர் உள்ளம் - விழிப்புணர்வு கணவுணர்வு உறக்கவுணர்வு என்ற மூன்றைக்கொண்ட வாழ்வு ப்ரும்ஹத்தில் முடிகிறது. ப்ரும்ஹத்தில் துவங்குகிறது. ப்ரும்ஹத்தை மையமாய் கொண்டது. உபவீதத்திலுள்ள ப்ரும்ஹ முடிச்சே ப்ரும்ஹம். மூன்று நூல்கள் வாழ்வின் மூன்று ஸ்திதிகளைக் குறிக்கும், இவ்வாறு பூனுலின் தத்துவத்தைச் சான்றோர்கள் கூறுவர். இப்பூனுலை தரிப்பதற்கான மந்திரம் கீழே உள்ளது.)

யக்ஞ்யோபவீதம் பரிசுத்தமானது. சிறந்தது. ப்ரஜாபதியுடன் சேர்ந்து தோன்றியது. ஆயுள் அளிக்க வல்லது. முதன்மையைத் தரவல்லது. ஒளியானது. அதை அணிகிறேன். பலமும் தேஜஸும் எனக்கிருக்கட்டும்.

(அடுத்தது குமாரபோஜனம். உப்புக்காரம் இல்லாமல் நெய்யும் பாலும் சேர்ந்த அன்னத்தால் குமாரனுக்கு போஜனம் செய்விக்க வேண்டும். அடுத்த க்ரியை வபனம். மந்திரம் கூறி சிகையை நாற்புறமும் வபனம் செய்யவேண்டும்.)

எதனால் இவன் எல்லாரையும்விடச் சிறந்து விளங்குவானோ தேவஸவிதாவை காண்பானோ அவ்வண்ணம் இவன் ஆயுள் புகழ் மங்களம் வளர வபனம் செய்கிறேன்.

(மாட்டின் சாணியில் யவம் அல்லது நெல்லை சேர்த்து அதை கேசங்களையும் தர்பைகளையும் போட்டு கீழ்கண்ட மந்திரத்தைச் சொல்லி அத்தி மரத்தடியில் வைத்து விட வேண்டும்.)

வருணனுடைய கேசங்களை சேதித்தப்பின் அவற்றை வைப்பதற்குறிய இடத்தைப் பற்றி யோசித்து அவைகளை விட்டுவிட்டு ப்ருஹஸ்பதி ஸவிதா ஸோமன் அக்னி முதலியோர்

வழ்க்கத்தில் இருந்து வருகின்றன.)

## இருபத்தாறு: உபனயனம்

(வேதவழிபாடும் கடவுளிடம் அதன் அணுகுமுறையும் மிகவும் இயற்கையானது. ஒவ்வொரு மனிதனும் பிறக்கையில் ஒருதெய்வீக அக்னியுடன் சேர்ந்தே பிறக்கிறான். அவ்வக்னி அவனிடம் மறைந்து கிடக்கிறது. அது குழந்தைப் பருவத்தில் நன்கு வெளிப்பட்டுத் தெரியவில்லை. அவன் வளர வளர அவனின் அறிவு வளர வளர அவ்விவேகவொளியான அக்னியும் வளருகிறது. அக்னியும் பெரும்பாலும் நற்பழக்கவழக்கங்களாலேயே வளருகிறது. நற்பழக்கவழக்கங்கள் நற்சேற்கையாலேயே பெரும்பாலும் வருகிறது. வேதத்தை வாழும் ஒரு முனிவரை வேதியரை அணுகி அவருடன் சிறிது நாட்கள் வாழ்ந்து நற்பழக்கவழக்கங்களைக் கற்றுக்கொள்ளலாம். இதனால் குழந்தைப்பருவத்தில் உள்ளேயே அடங்கிக் கிடந்த அக்னி வளர்ச்சி பெறும். இதற்காகவே குழந்தை ஓரளவிற்கு விவரம் தெரிந்து வாக்ஸ்பஷ்டமும் மனதின் ஓரளவு வளர்ச்சியும் பெற்றபிறகு ஏழெட்டு பிஞ்சுப்ராயத்திலேயே கல்வி பெறுவதற்காக வேதியனிடம் முனிவரிடம் செல்கிறான். வேதத்தை வாழும் அம்முனிவர் இவனைப்போன்ற பல மாணவர்கள் பயிலுவதற்காக ஒரு வித்யாசாலை வைத்துள்ளார். அதற்கே குருகுலம் எனப்பெயர். குலம் என்பதற்கு கூட்டாக சேர்ந்து ஒரு குறிப்பிட்ட கலாசாரத்தையும் பழக்கவழக்கங்களையும் கொண்டு வாழுதல் எனப் பொருள். குருவிடம் வேதவாழ்வை வாழும் முனிவரிடம் இச்சிறுவன் செல்கையில் அவர் அவனிடமே புதைந்துள்ளத் தீயை அவனுக்கு அறிமுகப்படுத்துகிறார். அவனின் அந்தரங்கமான அதையே அவனுக்கு வளர்க்கக் கற்றுத்தருகிறார். இதுவே உண்மைக் கல்வி. வெளியிலிருந்து . ஏதோவொன்றைத் தினிப்பது கல்வியாகாது. உள்ளொளி பெருக்குவதே கல்வி. தான்தன்னை அறிதல் கல்வியில் மிகவும் முக்கியம். தன்னையறியாமல் வெளிப் பொருட்களை எவ்வளவுதான் அறிந்தாலும் பயனேது?

குருகுலத்தில் போய்சேருகையில் குரு சீடனுக்கு உபனயனம்

இங்கேயே நன்மை அடைந்து இருப்போமாக.

(தர்பையின்மேல் மேற்குநோக்கி நிற்கச் செய்து கூறவேண்டிய மந்திரம்.)

ஸமுத்திரத்திலிருந்து தேன்மையமாய் வெளிக்கிளம்பிய அலையினால் நான் மரணத்தைக் கடக்கிறேன். இந்தத்திவிலைகள் ஸூர்யனின் ஒளிபிந்துக்களே. இவற்றால் ரிஷிகள் உம்மை அடைந்தனர்.

(இம்மந்திரத்தைக் கூறி சீடனை மும்முறை ப்ரோக்ஷிக்கவும். சீடனையும் சொல்லச் செய்யவும்.

ஸமுத்திரத்தின் விளக்கம் ரிக்வேதத்தின் நான்காம் மண்டலத்தில் வந்தது. ஸமுத்திரம் இதயமே. அதிலிருந்து கிளம்பும் மதுமயமான அலை தெய்வீக அனுபூதிகளே. ஸூர்யகிரணங்கள் ஸாதனாஸாமக்ரிகளான சைதன்யசக்திகளே.)

சீடனே! நான் உன் கையைப் பிடிக்கையில் அக்னிதேவனே உன் கையைப் பிடிக்கிறார். ஸோமனும் ஸூர்யனும் ஸரஸ்வதியும் பூஷா அர்யமா பகன் மித்திரன் முதலியோரும் உன் கையை பிடிப்பார்கள். நீ அக்னியின் நண்பனாகிறாய். தருமத்தால் அக்னி உனது குரு.

(இம்மந்திரத்தைச் சொல்லி குரு சீடனின் கையைப் பிடிக்கவும். இவ்வாறு உறுதியைக் குறிக்கும் கல்லில் ஏற்றி பிறகு ரக்ஷிப்பைக்குறிக்கும் ஆடைகளை அணிவித்து தேவர்களுக்கு அவனை அறிமுகப்படுத்தி பிறகு தேவர்களிடமே அவனை குரு ஸமர்ப்பிக்கிறார். அப்போது கூற வேண்டியது.)

அக்னி ஸோமன் ஸவிதா ஸரஸ்வதி ம்ருத்யு யமன் ஜலங்கள் ஒஷதிகள் புவி யாவருக்கும் உன்னை ஸமர்பிக்கிறேன்.

(அடுத்தது தன்னருகே அழைத்துக் கொள்ளுதல்.)

தேவஸவிதாவின் தூண்டுதலால் உன்னை என் அருகில் சேர்த்துக்கொள்கிறேன்.

(என்கிற மந்திரத்தைச் சொல்லி சீடனை தன்னருகே அழைத்து )

நன்மக்களை உடையவனாயும் வீரர்களால் நல்லவீரனாயும் புஷ்டியும் பொலிவும் கொண்டு ஆவாய். (என்று வலதுகாதில் ஜபிக்கவும்.)

நீ நீண்டகாலம் வாழ்வாய். பொலிவு புஷ்டி செல்வம் இவைகளுடன் நூறு வருடங்கள் வாழ்வாய்.

(வஸ்திரம் உடுத்தியவுடன் கூறவேண்டிய மந்திரம்.)

சீடனே! எல்லா க்ஷேமத்தின் பொருட்டும் இவ்வுடையை அணிந்தாய். உன்னை சூழ்ந்தவர்களின் சோகத்தைப் போக்கி ரக்ஷிப்பவனாய் விளங்குவாய். பலவழிகளில் செல்வத்தைப் பெற்று நல்வழியில் பிறித்துத் தந்து நூறாண்டு வாழ்வாய்.

(அம்ருதமயமான ஒளிசக்திகளான தேவர்கள் தனது புத்தியிலிருந்தே எழுந்தவர்கள். அந்த புத்திசக்திகளிலிருந்தே எழுந்த ரக்ஷிப்பு இப்போது உறுதி பெற்ற ஸாதகனை சூழ்ந்துகொள்கிறது. தீயசக்திகளிலிருந்து காக்கிறது. இப்படி அவனை சூழ்ந்து ஆவரித்து நிற்கும் ரக்ஷிப்புசக்தியையே வஸ்திரம் குறிக்கிறது.)

(மூன்றிழை தர்பங்களாலான மேகலையை மும்முறை சுற்றி கட்டிவிடவும். அப்போது சீடனை இம்மந்திரங்களைச் சொல்லவைக்கவும்.)

இந்த மேகலை தீயப்பேச்சிலிருந்து காக்கும். வீடுபோன்று நம் சிறந்த சரீரத்தைக் காக்கும். ப்ராணனுக்கும் அபானனுக்கும் பலமளிப்பது. பாக்கியம் வாய்ந்தது. தேவர்களுக்கு பிரியமானது. அறத்தைக் காக்கிறது. தவத்தை விளக்கும். தீயசக்திகளை ஒழிக்கிறது. அப்படிப்பட்ட நீ எங்களைச் சுற்றி ரக்ஷிக்கவும். உன்னை ரக்ஷிப்பாக தரிக்கும் நாங்கள் அழியோம்.

(மாந்தோலாலான உத்தரீயத்தை அணியச்செய்க. அப்போது கூறவேண்டிய மந்திரம்.)

உத்தரீயமான இந்த மான்தோலை அணிகிறேன். இது மித்திரனின் (ஸூர்யனின்) கண்ணாயும் பலமான பொலிவாயும் புகழ் கொள்வதாயும் த்ருடமாயும் தீயோர் அணுகமுடியாததாயும் புஷ்டிதருவதாயும் உள்ளது.

(அக்னிக்கு வடக்கில் தர்பைகளைப் பரப்பி அதன் மேல் சீடனை நிருத்தச்செய்யவேண்டும். பிறகு இம்மந்திரத்தைச் சொல்லவைக்கவேண்டும்.)

வந்திருக்கும் குருவோடு சேர்ந்து மரணத்தை அப்புறப்படுத்துவோம். கெடுதி வராமல் தருமத்திலேயே சஞ்சரிப்போம். க்ருஹஸ்தாஸ்ரமத்தை அடையும்வரை நாங்கள்

இங்கேயே நன்மை அடைந்து இருப்போமாக.

(தர்பையின்மேல் மேற்குநோக்கி நிற்கச் செய்து கூறவேண்டிய மந்திரம்.)

ஸமுத்திரத்திலிருந்து தேன்மையமாய் வெளிக்கிளம்பிய அலையினால் நான் மரணத்தைக் கடக்கிறேன். இந்தத்திவிலைகள் ஸூர்யனின் ஒளிபிந்துக்களே. இவற்றால் ரிஷிகள் உம்மை அடைந்தனர்.

(இம்மந்திரத்தைக் கூறி சீடனை மும்முறை ப்ரோக்ஷிக்கவும். சீடனையும் சொல்லச் செய்யவும்.

ஸமுத்திரத்தின் விளக்கம் ரிக்வேதத்தின் நான்காம் மண்டலத்தில் வந்தது. ஸமுத்திரம் இதயமே. அதிலிருந்து கிளம்பும் மதுமயமான அலை தெய்வீக அனுபூதிகளே. ஸூர்யகிரணங்கள் ஸாதனாஸாமக்ரிகளான சைதன்யசக்திகளே.)

சீடனே! நான் உன் கையைப் பிடிக்கையில் அக்னிதேவனே உன் கையைப் பிடிக்கிறார். ஸோமனும் ஸூர்யனும் ஸரஸ்வதியும் பூஷா அர்யமா பகன் மித்திரன் முதலியோரும் உன் கையை பிடிப்பார்கள். நீ அக்னியின் நண்பனாகிறாய். தருமத்தால் அக்னி உனது குரு.

(இம்மந்திரத்தைச் சொல்லி குரு சீடனின் கையைப் பிடிக்கவும். இவ்வாறு உறுதியைக் குறிக்கும் கல்லில் ஏற்றி பிறகு ரக்ஷிப்பைக்குறிக்கும் ஆடைகளை அணிவித்து தேவர்களுக்கு அவனை அறிமுகப்படுத்தி பிறகு தேவர்களிடமே அவனை குரு ஸமர்ப்பிக்கிறார். அப்போது கூற வேண்டியது.)

அக்னி ஸோமன் ஸவிதா ஸரஸ்வதி ம்ருத்யு யமன் ஜலங்கள் ஒஷதிகள் புவி யாவருக்கும் உன்னை ஸமர்பிக்கிறேன்.

(அடுத்தது தன்னருகே அழைத்துக் கொள்ளுதல்.)

தேவஸவிதாவின் தூண்டுதலால் உன்னை என் அருகில் சேர்த்துக்கொள்கிறேன்.

(என்கிற மந்திரத்தைச் சொல்லி சீடனை தன்னருகே அழைத்து )

நன்மக்களை உடையவனாயும் வீரர்களால் நல்லவீரனாயும் புஷ்டியும் பொலிவும் கொண்டு ஆவாய். (என்று வலதுகாதில் ஜபிக்கவும்.)

நீ நீண்டகாலம் வாழ்வாய். பொலிவு புஷ்டி செல்வம் இவைகளுடன் நூறு வருடங்கள் வாழ்வாய்.

(வஸ்திரம் உடுத்தியவுடன் கூறவேண்டிய மந்திரம்.)

சீடனே! எல்லா க்ஷேமத்தின் பொருட்டும் இவ்வுடையை அணிந்தாய். உன்னை சூழ்ந்தவர்களின் சோகத்தைப் போக்கி ரக்ஷிப்பவனாய் விளங்குவாய். பலவழிகளில் செல்வத்தைப் பெற்று நல்வழியில் பிறித்துத் தந்து நூறாண்டு வாழ்வாய்.

(அம்ருதமயமான ஒளிசக்திகளான தேவர்கள் தனது புத்தியிலிருந்தே எழுந்தவர்கள். அந்த புத்திசக்திகளிலிருந்தே எழுந்த ரக்ஷிப்பு இப்போது உறுதி பெற்ற ஸாதகனை சூழ்ந்துகொள்கிறது. தீயசக்திகளிலிருந்து காக்கிறது. இப்படி அவனை சூழ்ந்து ஆவரித்து நிற்கும் ரக்ஷிப்புசக்தியையே வஸ்திரம் குறிக்கிறது.)

(மூன்றிழை தர்பங்களாலான மேகலையை மும்முறை சுற்றி கட்டிவிடவும். அப்போது சீடனை இம்மந்திரங்களைச் சொல்லவைக்கவும்.)

இந்த மேகலை தீயப்பேச்சிலிருந்து காக்கும். வீடுபோன்று நம் சிறந்த சரீரத்தைக் காக்கும். ப்ராணனுக்கும் அபானனுக்கும் பலமளிப்பது. பாக்கியம் வாய்ந்தது. தேவர்களுக்கு பிரியமானது. அறத்தைக் காக்கிறது. தவத்தை விளக்கும். தீயசக்திகளை ஒழிக்கிறது. அப்படிப்பட்ட நீ எங்களைச் சுற்றி ரக்ஷிக்கவும். உன்னை ரக்ஷிப்பாக தரிக்கும் நாங்கள் அழியோம்.

(மாந்தோலாலான உத்தரீயத்தை அணியச்செய்க. அப்போது கூறவேண்டிய மந்திரம்.)

உத்தரீயமான இந்த மான்தோலை அணிகிறேன். இது மித்திரனின் (ஸூர்யனின்) கண்ணாயும் பலமான பொலிவாயும் புகழ் கொள்வதாயும் த்ருடமாயும் தீயோர் அணுகமுடியாததாயும் புஷ்டிதருவதாயும் உள்ளது.

(அக்னிக்கு வடக்கில் தர்பைகளைப் பரப்பி அதன் மேல் சீடனை நிருத்தச்செய்யவேண்டும். பிறகு இம்மந்திரத்தைச் சொல்லவைக்கவேண்டும்.)

வந்திருக்கும் குருவோடு சேர்ந்து மரணத்தை அப்புறப்படுத்துவோம். கெடுதி வராமல் தருமத்திலேயே சஞ்சரிப்போம். க்ருஹஸ்தாஸ்ரமத்தை அடையும்வரை நாங்கள்

கருமமும் அருள்வீர்.

(பிறகு சீடனை குரு கைதூக்கிவிட்டு எழுப்புகிறார். அப்போது கூறவேண்டிய மந்திரம். சீடனையும் கூறவைக்க வேண்டும்.)

அம்ருதபானம் செய்த தேவர்களைப் பின்பற்றி ஓஷதிகளின் ரஸத்துடன் மழைபலத்துடன் வளரும் எனது ஆயுளைப்போற்றி நீண்ட ஆயிளுடன் எழுகிறேன்.

(ஸூர்யனைத் துதிக்கும்மந்திரம்.)

ஸத்யமான ஒளியுடன் ஸூர்யன் வருகிறார். தேவர்களையும் மனிதர்களையும் அவரவர் ஸாதனைகளில் ஈடுபடுத்துகிறார். தங்கமயமான ரதத்தில் வருகிறார். புவனங்களை நோக்குகிறார். நாங்கள் இருளிற்கப்பாலுள்ள ஒளியைக் காண்கிறோம்.

(குரு சீடனின் வலதுகையைப்பிடித்துக் கூறவேண்டிய மந்திரம்.) எவரிடம் இறந்தகாலமும் எதிர்காலமும் உலகங்கள் யாவும் அடங்குமோ அவரருளால் நான் உன்னைப் பற்றுகிறேன். எனக்காக ஏற்கிறேன். ப்ரஜாபதியால் பற்றுகிறேன்.

(அடுத்து ஸமிதாததானம் செய்யவேண்டும். பிறகு குரு சீடனை ஆணையிடுதல்.)

குரு: நீ ப்ரும்ஹசாரீ.

சீடன்: ஆம்.

கு: ஆபோசனம் செய்.

சீ: செய்கிறேன்.

கு:. உறங்காதே.

சீ: சரி

(விழுமின். விழித்தே இரு. எனப்பொருள்.)

இத்துடன் உபநயனம் முடிகிறது.

(சீடன் தினந்தோறும் தானே நான்கு வீடுகளில் அன்னத்தைக் கேட்டுப் பெற வேண்டும். அதுவே அவனின் ஆகாரவஸதியாகும். அக்காலத்தில் வீடுகளிலும் மாணவர்களுக் கென்று மிகவும் ஸ்ரத்தையுடன் அன்னமளிப்பர். இவ்வாறே அவன் கல்வியை கற்று முடிக்கும்வரை அவனது காலக்ஷேபம். கல்வியை மிகவும் ஸ்ரத்தையுடன் கற்க வேண்டும். விவேகவொளியை குருகுலத்தில் வாழ்ந்து வளர்த்துக்கொள்கிறான். வேதம் பயில்கிறான்.

புவர்லோகத்திற்கு ஹோமம் செய்கிறேன். வாயுவிற்கிது. எனக்கல்ல.

(பிறகு கூர்ச்சத்தை எடுத்து சீடன் குருவிடம் தர குரு கூறுகிறார்.)

கூர்ச்சமே! நீ ராஷ்ட்ரத்தை தரிக்கிறாய். குருவாகிய என்னைத் தாங்குவாய். என்னை விட்டு பிறியாமல் இருப்பாய்.

(இவ்வாறு கூறி அக்னிக்கு மேற்கில் கிழக்கு நோக்கி கூர்ச்சத்தில் குரு அமரவேண்டும். சீடன் குருவின் பாதங்களைக் கழுவி அர்ச்சித்து வலது கரத்தால் குருவின் வலது காலைப் பிடித்துப் பின்வருமாறு ப்ரார்த்திக்கவும்.)

குருவே! ஸாவித்ரி மந்திரத்தை அடியேனுக்கு அருளவேண்டும்.

(குரு ஸாவித்ரி மந்திரத்தை இருமுறை உபதேசிக்கிறார். (இந்நூலில் ஸாவித்ரி மந்திர அர்த்தமும் அதன் மகிமையும் ரிக்வேத விளக்கத்திலேயே விச்வாமித்திரர் எனும் பகுதியிலேயே கூறப்பட்டுவிட்டது.) பிறகு பெரியோர்கள் மகிழ்ந்து சீடனை ஆசீர்வதிக்க வேண்டும். பிறகு சீடன் மேல் உதட்டை தொட்டுக் கொண்டு சொல்லும் மந்திரம்.)

ப்ரியனான ப்ராணனே! நான் வளர்ச்சி பெற்றுள்ளேன். என்னுடைய இந்த செல்வத்தை நீ காத்தருளவேண்டும். நீங்கள் வேதத்தில் நிலை பெறவும்.

(என்கிற மந்திரத்தை காதுகளைத் தொட்டுக் கொண்டு ப்ரார்த்திக்கவும்.)

அப்ராக்ருதமான திவ்யசப்தத்தைக் கேட்பவரே! என்னை திவ்யசப்தத்தைக் கேட்கச் செய்யவும். நீங்கள் திவ்யசப்தத்தைக் கேட்பவராய் இருப்பதைப் போல் நானும் ஆக வேண்டும். நீங்கள் தேவர்களின் செல்வத்தைக் காப்பவராய் இருப்பதைப் போல் நான் வேதியர்களின் செல்வமான வேதத்தைக் காப்பவனாய் இருக்க வேண்டும். (இந்த மந்திரத்தை கூறி பலாச தண்டத்தை தரிக்க வேண்டும். குரு சீடனை இந்தமந்திரத்தைச்சொல்லவைக்கிறார்.)

நினைக்கத்தகுந்ததில் நினைவும் நினைக்கத்தகாததில் மறதியும் இகழத்தக்கதில் இகழ்ச்சியும் போற்றத்தக்கதில் இகழ்ச்சியின்மையும் தருமத்தில் ஸ்ரத்தையும் அதருமத்தில் அஸ்ரத்தையும் ஞானமும்

கருமமும் அருள்வீர்.

(பிறகு சீடனை குரு கைதூக்கிவிட்டு எழுப்புகிறார். அப்போது கூறவேண்டிய மந்திரம். சீடனையும் கூறவைக்க வேண்டும்.)

அம்ருதபானம் செய்த தேவர்களைப் பின்பற்றி ஓஷதிகளின் ரஸத்துடன் மழைபலத்துடன் வளரும் எனது ஆயுளைப்போற்றி நீண்ட ஆயிளுடன் எழுகிறேன்.

(ஸூர்யனைத் துதிக்கும்மந்திரம்.)

ஸத்யமான ஒளியுடன் ஸூர்யன் வருகிறார். தேவர்களையும் மனிதர்களையும் அவரவர் ஸாதனைகளில் ஈடுபடுத்துகிறார். தங்கமயமான ரதத்தில் வருகிறார். புவனங்களை நோக்குகிறார். நாங்கள் இருளிற்கப்பாலுள்ள ஒளியைக் காண்கிறோம்.

(குரு சீடனின் வலதுகையைப்பிடித்துக் கூறவேண்டிய மந்திரம்.) எவரிடம் இறந்தகாலமும் எதிர்காலமும் உலகங்கள் யாவும் அடங்குமோ அவரருளால் நான் உன்னைப் பற்றுகிறேன். எனக்காக ஏற்கிறேன். ப்ரஜாபதியால் பற்றுகிறேன்.

(அடுத்து ஸமிதாததானம் செய்யவேண்டும். பிறகு குரு சீடனை ஆணையிடுதல்.)

குரு: நீ ப்ரும்ஹசாரீ.

சீடன்: ஆம்.

கு: ஆபோசனம் செய்.

சீ: செய்கிறேன்.

கு:. உறங்காதே.

சீ: சரி

(விழுமின். விழித்தே இரு. எனப்பொருள்.)

இத்துடன் உபநயனம் முடிகிறது.

(சீடன் தினந்தோறும் தானே நான்கு வீடுகளில் அன்னத்தைக் கேட்டுப் பெற வேண்டும். அதுவே அவனின் ஆகாரவஸதியாகும். அக்காலத்தில் வீடுகளிலும் மாணவர்களுக் கென்று மிகவும் ஸ்ரத்தையுடன் அன்னமளிப்பர். இவ்வாறே அவன் கல்வியை கற்று முடிக்கும்வரை அவனது காலக்ஷேபம். கல்வியை மிகவும் ஸ்ரத்தையுடன் கற்க வேண்டும். விவேகவொளியை குருகுலத்தில் வாழ்ந்து வளர்த்துக்கொள்கிறான். வேதம் பயில்கிறான்.

புவர்லோகத்திற்கு ஹோமம் செய்கிறேன். வாயுவிற்கிது. எனக்கல்ல.

(பிறகு கூர்ச்சத்தை எடுத்து சீடன் குருவிடம் தர குரு கூறுகிறார்.)

கூர்ச்சமே! நீ ராஷ்ட்ரத்தை தரிக்கிறாய். குருவாகிய என்னைத் தாங்குவாய். என்னை விட்டு பிறியாமல் இருப்பாய்.

(இவ்வாறு கூறி அக்னிக்கு மேற்கில் கிழக்கு நோக்கி கூர்ச்சத்தில் குரு அமரவேண்டும். சீடன் குருவின் பாதங்களைக் கழுவி அர்ச்சித்து வலது கரத்தால் குருவின் வலது காலைப் பிடித்துப் பின்வருமாறு ப்ரார்த்திக்கவும்.)

குருவே! ஸாவித்ரி மந்திரத்தை அடியேனுக்கு அருளவேண்டும்.

(குரு ஸாவித்ரி மந்திரத்தை இருமுறை உபதேசிக்கிறார். (இந்நூலில் ஸாவித்ரி மந்திர அர்த்தமும் அதன் மகிமையும் ரிக்வேத விளக்கத்திலேயே விச்வாமித்திரர் எனும் பகுதியிலேயே கூறப்பட்டுவிட்டது.) பிறகு பெரியோர்கள் மகிழ்ந்து சீடனை ஆசீர்வதிக்க வேண்டும். பிறகு சீடன் மேல் உதட்டை தொட்டுக் கொண்டு சொல்லும் மந்திரம்.)

ப்ரியனான ப்ராணனே! நான் வளர்ச்சி பெற்றுள்ளேன். என்னுடைய இந்த செல்வத்தை நீ காத்தருளவேண்டும். நீங்கள் வேதத்தில் நிலை பெறவும்.

(என்கிற மந்திரத்தை காதுகளைத் தொட்டுக் கொண்டு ப்ரார்த்திக்கவும்.)

அப்ராக்ருதமான திவ்யசப்தத்தைக் கேட்பவரே! என்னை திவ்யசப்தத்தைக் கேட்கச் செய்யவும். நீங்கள் திவ்யசப்தத்தைக் கேட்பவராய் இருப்பதைப் போல் நானும் ஆக வேண்டும். நீங்கள் தேவர்களின் செல்வத்தைக் காப்பவராய் இருப்பதைப் போல் நான் வேதியர்களின் செல்வமான வேதத்தைக் காப்பவனாய் இருக்க வேண்டும். (இந்த மந்திரத்தை கூறி பலாச தண்டத்தை தரிக்க வேண்டும். குரு சீடனை இந்தமந்திரத்தைச்சொல்லவைக்கிறார்.)

நினைக்கத்தகுந்ததில் நினைவும் நினைக்கத்தகாததில் மறதியும் இகழத்தக்கதில் இகழ்ச்சியும் போற்றத்தக்கதில் இகழ்ச்சியின்மையும் தருமத்தில் ஸ்ரத்தையும் அதருமத்தில் அஸ்ரத்தையும் ஞானமும்

வெறுக்கத்தக்கது ஒன்றுமே இல்லை. காமம் வெறுக்கத்தக்கதன்று. காஞ்சனமும் வெறுக்கத்தக்கதன்று. இவ்விரண்டுமே தருமத்தின்பொருட்டு விவேகவொளியின் பொருட்டு அவசியம் ஏற்கவேண்டிய விஷயமாயிருப்பதால் இவை மூலம் அறநெறிகள் நடக்குமாகில் இவ்விரண்டுமே மிகவும் போற்றத்தக்கதே. ஆதலாலேயே இவ்விரண்டையுமே மஹாபுருஷர்களும் கொண்டிருந்தனர். தாம்பத்திய வாழ்வு ஸாமானியனுக்கு ரஸனையையும் ப்ரியத்தையும் இதயத்தோடிதயம் கலத்தலையும் தருவதாகும். இவைகளை அறத்திற்கு அர்ப்பணித்து வாழ்ந்தால் விவேகவொளி வலுபெறும். அது எவ்வளுவுக்கெவ்வளவு வலுபெறுகிறதோ அவ்வளுவுக்கவ்வளவு கடவுளின் அருகாமையில் நாம் வாழ்வதை அறிந்துகொள்ளவேண்டும். விவேகவொளி மிகஅதிகமாக வளர்கையில் அது கடவுளின் தரிசனத்திற்கு திவ்யஞானத்திற்கு ஹேதுவாகிறது. க்ருஹஸ்தாஸ்ரமத்திலேயே விவேகவொளியாகிய அக்னியை ஒரு ஸாமானியன் நன்கு நிறைவாக உபாஸிக்க முடியும் என்பதால் அவ்வக்னிக்கே ஔபாஸனாக்னி எனப்பெயர். அதற்கு முன்பு ஏகதேசமே ஸாமானியனால் வளர்க்கமுடியும் என்பதால் அதற்கு லௌகிகாக்னி எனப்பெயர். இதயவேதியின் அக்னி ஓரளவிற்கே வளர்ச்சிபெற்றால் அது மானுடமே. இவ்வுலகத்ததே. . அவ்வக்னி மேலும் மேலும் செயல்களாலும் சிந்தைகளாலும் உபாஸனைசெய்யப்பட்டால் அது தெய்வீக அக்னியாக ஔபாஸனாக்னியாக மிளிர்கிறது. ஸாமானியனுக்கு உபாஸனைக்கு வேண்டிய ரஸனை இதயம் ப்ரியம் இவைகளின் சின்னமான ஸோமமூலிகை குடும்பதருமத்திலேயே தாம்பத்தியவாழ்விலேயே கிடைப்பதால் க்ருஹஸ்த அக்னிக்கே ஔபாஸனாக்னி என்றப் பெயர் பொதுவாக வழங்கப்படுகிறது. பெண்கேட்டுச் செல்லுகிற தனக்கு நன்மையளிக்க எண்ணும் பெரியோர்களான உற்றார் உறவினரைப் செல்கையில் வரன் கூறவேண்டிய மந்திரங்கள். இவை வேதத்தில் அச்விகளைப்பற்றியவை. இல்லறத்தால் ஸோமம் பெருகுவதால் ஸோமவிஷயமாய் அச்விகளிடம் கூறப்படும் மந்திரம் இங்கு ஓதப்படுகிறது. அச்விகளே ப்ராணனுடையவும் ஆனந்தத் தினுடையவும் தேவர்கள். அவர்களைப் பற்றி இல்லறத்தைக் குறித்து இம்மந்திரத்தை வரன் ஓதுகிறான். )

மிக்க வேகமாயும் நன்றாகவும் செல்பவர்களே! த்யானவ்ருத்திகளால் முடிவெடுக்கும் நீங்கள் மறுகணத்தில் உயர்ந்த வழிகளால் உயர்ந்தோர்களிடம் செல்வீர்கள். எதனால் இந்திரன் ஸோமத்தை ஆவலுடன் அறிகிறாரோ அதனால் எங்களுடைய சேர்க்கையையும் அடைகிறார்.

தேவர்களே! எங்கள் நண்பர்கள் எந்த வழிகளால் உயர்ந்ததைக் குறித்துச் செல்லுகின்றனரோ அந்த பாதைகள் தடையற்று ஒழுங்காக இருக்கட்டும். அர்யமனும் பகனும் எங்களை நன்கு சேர்த்து வைக்கட்டும். எங்களுடைய தாம்பத்தியம் நன்றாகவும் நன்கு சேர்க்கப்பட்டதாயும் இருக்கட்டும்.

(வரனுடைய (கணவனுடைய) சகோதரர்கள் பெண்ணைப் பற்றி பிரார்த்திக்கும் மந்திரம். )

வருணக்கடவுளே! சகோதரர்களுக்கு தீங்கை விளைவிக்காத மங்களத்தைக் கொடுப்பீர். ப்ருஹஸ்பதியே! கணவனுக்கு கேடு விளைவிக்காத க்ஷேமத்தை அருள்வீர். இந்திரதேவனே! புத்திரர்களை நசிக்காத செல்வத்தைத் தருவீர். தேவஸவிதாவே! இவளுக்கு க்ஷேமத்தை அருள்வீர்.

(கல்யாணத்தில் பண்டையகாலங்களில் மணப்பெண்ணிற்கே மணமகனை விட முக்கியத்துவம் அதிகம். மணமகன் ஒரு வழிபடுபவன் போலும். மணமகளோ ஒரு தேவதை போலும் இச்சடங்குகளிலே தென்படுகின்றனர். பெரும்பாலான மந்திரங்கள் மணமகன் ஓதவேண்டியதாயும் அதுவும் மணப்பெண்ணை நோக்கி ஓதுவேண்டியதாயும் அமைகிறது. மணப்பெண்ணிற்கு க்ஷேமத்தை பிரார்த்திப்பதாயே உள்ளது. தன் க்ஷேமத்தையும் அவள் மூலமாகப் பெற ப்ரார்த்திப்பதாய் உள்ளது. மணப்பெண் தன் மணமகனோடு வாழ்வாகியப் பெருங்கடலில் இரங்கி தெய்வீகஸாதனயை விசேஷமாகச் செய்யப்போவதால் அப்படித்தன் துணைவியாக தன்னோடு சேருகிற அப்பெண்ணை மனம் நிறைந்து வரவேற்பது போலும் இச்சடங்கு அமைகிறது. அவள் செய்யப்போகும் தாம்பத்திய வாழ்வின் தெய்வீகத்தை மஹிமைப்படுத்தும்படி இம்மந்திரங்கள் அமைகின்றன. கீழேயுள்ள மந்திரத்தைக் கூறிக் கொண்டு வரன் பெண்ணை காணவேண்டும்.)

கடும் பார்வையற்றும் கணவனுக்கு கேடுவிளைவிக்காமலும்

வளர்ச்சி பெறுவாய். கணவனுக்கு க்ஷேமத்தை தருபவளாயும் நல்ல மனதும் தீர்காயுளும் தேஜஸும் கொண்டு நம்முடைய மனிதர்களுக்கும் கால்நடைகளுக்கும் நன்மை பயக்குபவளாய் இரு. கணவனுக்குத் தீங்களிக்கும் அமங்களத்தை உன்னிடமிருந்து நான்போக்குகிறேன்.

(கட்டைவிரலாலும் பவித்திரவிரலாலும் தர்பையைப் பிடித்து கன்னிகையின் புருவங்களின் நடுவை துடைத்துப் பின்புறமாய் போட்டுவிட வேண்டும். அப்போது. கூறவேண்டிய மந்திரம்.)

(பெண்வீட்டுக்காரர்கள் பெண்ணை விட்டுப் பிரியப் போவதால் கண் கலங்கியிருக்கையில் வரன் கூறும் மந்திரம்.)

எவர்கள் பித்ருக்களின் பொருட்டு மங்களமாய் உள்ளதும் கன்னிகையின் பரிரம்பணத்திற்கும் உள்ளதான இந்த விவாஹகர்மாவை நடத்திவைப்பரோ அந்த மனிதர்கள் வாழுகிற கன்னிகையைக் குறித்து யக்ஞம் செய்கின்றனர். ஏங்குகின்றனர். தீர்கமான சேர்கையை அவர்கள் மனதில் கொள்ளட்டும்.

(கன்னிகை மங்களஸ்னானம் செய்ய நீரை கொண்டுவர வேதியர்களை அனுப்புகையில் கூறப்பட வேண்டிய மந்திரம். நீர் தூய்மையையும் அனுபூதிரஸத்தையும் குறிப்பதால் தெய்வீகதாம் பத்தியத்தை ஸாதகனுடன் துவங்க இருக்கும் இவளுக்கு இச்சடங்கு விசேஷமாகச் செய்யப் படுகிறது.)

க்ரூரமானது வெளியேறட்டும். ஜலங்கள் ப்ரவஹிக்கட்டும். இவளுக்கு வேதியர்கள் ஸ்னானஜலத்தைக் கொண்டு வரட்டும். தார்மீகர்களான வீரர்களை வதைக்கா ஜலங்கள் வெளிக்கிளம்பட்டும்.

(தர்பையை வட்டமாகச் செய்து அதை கன்னிகையின் சிரஸில் வைக்கும்போது கூறவேண்டிய மந்திரம்.)

மாமியாரும் மைத்துனர்களும் அர்யமனின் அக்னியை சீக்கிரம் அடைந்து சூழ்ந்து நின்று எதிர்பார்க்கட்டும்.

(தர்பையை சிரஸில் வைத்து அதன் மீது நுகத்தடியின் வலப்புரத் துவாரத்தை வைக்கும்போது கூற வேண்டிய மந்திரம்.)

இந்திரனே! அபாலையை சக்கரத்தின் த்வாரத்திலும் ரதத்தின் த்வாரத்திலும் நுகத்தடியின் த்வாரத்திலும் மும்முறை பரிசுத்தம் செய்து ஸூர்யவொளி கொண்டவளாய் செய்தீர்.

(அபாலை ஒரு ரிஷிகை. பொதுவாக வேதத்தில் ரதம்

வாழ்வுப்பயணத்தில் செல்லுவதைக் குறிக்கும். கல்யாணச்சடங்கு முழுவதிலுமே வாழ்வுப்பயணம் என்கிற தத்துவம் இருப்பதைக் காணலாம். இங்கும் அதை அனுஸரித்தே இங்கு கூறப்படும் மூன்று த்வாரங்களையும் வாழ்வுப்பயணத்தின் ப்ரதீகங்களாக சின்னங்களாகவே ஏற்கவேண்டும். தெய்வீக வாழ்வுப்பயணத்தில் சலனசக்தியைத் தந்து இந்திரன் அபாலையை பரிசுத்தப்ப டுத்தியதாயே பொருள்.)

(கன்னிகை ஸ்னானம் செய்கையில் கூறவேண்டிய மந்திரங்கள்.)

தங்கவர்ணம் கொண்டு பரிசுத்தமான சுத்தி செய்கிற ஜலங்கள் தோஷத்தைத் தள்ளிவிட்டு செல்லுகின்றன. ஏராளமான பரிசுத்த சக்திகள் பரவியுள்ள ஜலங்களால் உன்னை தேவஸவிதா பரிசுத்தப்படுத்தட்டும்.

(கன்னிகைக்கு மங்களஸ்னானம் செய்வித்துப் பிறகு கன்னிகை ஆடையணிகையில் கூறவேண்டிய மந்திரம். )

மந்திரங்கள் பெரியோர்களை ஸேவிக்கும் உன்னை எல்லா பக்கமும் சூழ்ந்து காக்கவும். வளருகிற மந்திரங்கள் உன்னை அடையட்டும். உன்னால் அடையப்படட்டும்.

(வரன் பெண்ணின் இடுப்பில் தர்பைக்கயிறு கட்டுகையில் ஓதும் மந்திரம்.)

இவள் நன்மனதையும் நற்ப்ரஜையையும் நன்மையையும் நற்சரீரத்தையும் ப்ரார்த்தித்தவளாய் அக்னியை அனுஸரித்தவளாய் இருக்கிறாள். இவளை நற்செயலுக்காக தர்பையால் கட்டுகிறேன்.

(தர்பை அவளின் மானுடவாழ்வைக் குறிக்கிறது. பிறகு கன்னிகையின் வலது கையைப் பிடித்து அக்னிக்கருகே மேற்பாகத்தில் வடக்கு நுனியாக விரிக்கபட்டப் புதுப் பாயில் வரன் வடக்குப் புறமாகவும் வதூ தென்புறமாகவும் உட்காருகையில் கூறவேண்டிய மந்திரம்.)

ஸூர்யதேவன் உன்னைக் கைப்பிடித்து இங்கிருந்து அழைத்துச் செல்லட்டும். அச்வினிகுமாரர்கள் உன்னைத் தேரில் அழைத்துச் செல்லட்டும். வீட்டிற்குச் செல். வீட்டின் தலைவியாகி ஆண்டு தருமகாரியத்தைத் தெரிவிப்பாய்.

(அக்னியைப் பிரதிஷ்டை செய்த பிறகு வரன்

கூறவேண்டிய மந்திரங்கள்.)

முதலாவதாக ஸோமன் உன்னை அடைந்தார். பிறகு கந்தர்வன். மூன்றாவது அக்னி. நான்காவது மனிதன். ஸோமன் கந்தர்வனுக்கும் கந்தர்வன் அக்னிக்கும் தந்தனர். அக்னிதேவன் ரயியையும் புத்திரர்களையும் உன்னையும் எனக்குத் தந்தார்.

(ஸோமன் தார்மிகரஸனையையும் கந்தர்வன் அழகையும் குறிப்பவர்கள். இருவருமே கலாதேவதைகள். இருவருமே மிகவும் தொடர்புடையவர்கள். அழகு ரஸம் இன்பம் இதயம் ஆனந்தம் இவைகளின் தேவதைகள். கணவன் அவளுடன் ரமிப்பதும் அவள் கணவனுடன் ரமிப்பதும் ஸோமனையும் கந்தர்வனையுமே குறிக்கும். இவர்களுடன் அக்னியும் அவளை ஏற்பவராயிருக்கிறார் அல்லவா? இல்லறமே விவேகத்திற்காகவும் அறநெறிகளுக்காகவுமல்லவோ உள்ளது! ஆதலால் இம்மூன்று தேவதைகளின் சொந்தமாகி அவள் கணவனின் சொந்தமாகிறாள் என்று உயர்ந்த தத்வரீதியில் கூறப்படுகிறது.)

(வாழ்வாகிய தெய்வீகஸாதனையில் இனி எவ்வளவு கஷ்டம் வந்தாலும் ஒருவருக்கொருவர் சார்ந்து அதை தாங்குவர். ஒருவருக்கொருவர் பகிர்வதால் இருவரும் ஒருவருக்கொருவர் தைர்யமாயிருப்பர். இதை வலியுருத்த அடுத்தக் கிரியை. கீழே உள்ள மந்திரங்களைக் கூறி கணவன் கன்னிகையின் வலக்கரத்தைப் பற்ற வேண்டும்.)

உன் கையை மக்கள்பேருக்காக கணவனான என்னோடு எக்கஷ்டத்தையும் ஜீர்ணிக்கும் சக்தி கொண்டு எப்படியாவாயோ அவ்விதம் பிடிக்கிறேன். பகன் அர்யமா ஸவிதா இந்திரன் முதலிய தேவர்கள் உன்னை எனக்கு கார்ஹபத்திய அக்னிக்காக தரட்டும்.

எந்த க்ருஹஸ்தாஸ்ரமத்தில் முன்னாலேயே பகனும் அக்னியும் இருந்தனரோ அவர்கள் உன்னை எனக்குத் தந்தனர். பாக்கியம் தரும் ஸம்ருத்திகொண்ட ஸரஸ்வதியே! இதை நன்கு ரக்ஷிப்பீர். உம்மை நாங்கள் எல்லா ப்ராணிகளின் முன்னிலையிலும் துதிபாடுகிறோம்.

எந்த பரிசுத்தமாகும் வாயுதேவன் எல்லா திசைகளையும் உபதிசைகளையும் அடைகிறாரோ ஜ்வலிக்கும் கரம் கொண்ட அக்னியைச் சார்ந்த அவ்வாயு உன்னை என்னிடம் மனம்

கொண்டவளாய் ஆக்கட்டும்.

(இங்கு ஒருவருக்கொருவர் கைகளைப் பற்றுவது தைரியமாய் கஷ்டங்களை பகிர்ந்து சேர்ந்து ஜீர்ணிப்பதைக் குறிக்கும் செயல். இதற்காக இயக்கிவைக்கும் ப்ராணனைக்குறிக்கும் வீரத்தெய்வமான வாயுவும் ப்ரார்த்திக்கப்படுகிறார். இவ்வாறு கஷ்டங்களையும் நெறுக்கடிகளையும் எதிர்த்து நிற்கும் ஜீர்ணிக்கும் சக்தியைப் பெற்றபின் வாழ்வாகிய பெரியப் பாதையிலே அடிகள் எடுத்துவைத்து தைரியமாக ஆற்றலுடனும் உறுதியுடனும் நடக்க வேண்டும். அதற்கானச் சடங்கு நிகழ்த்தப்படுகிறது. கன்னிகையை அக்னிக்கு வடக்காக வலக்காலால் கிழக்கு அல்லது வடக்கு திசையைக் குறித்து நடக்கவைக்க வேண்டும். அப்போது கூற வேண்டிய மந்திரம்.)

ஓரடிதூரம் அன்னஸம்ருத்தியளிக்க விஷ்ணு உன்னைப் பின்பற்றி வரட்டும்.

ஈரடிதூரம் உடல் வலிமையளிக்க விஷ்ணு உன்னைப் பின்பற்றி வரட்டும்.

மூவடிதூரம் ஸ்திரமான கொள்கையை அளிக்க விஷ்ணு உன்னைப் பின்பற்றி வரட்டும்.

நான்கடிதூரம் த்ருப்தி ஏற்பட விஷ்ணு உன்னைப் பின்பற்றி வரட்டும்.

ஐந்தடிதூரம் பசுக்கள் அளிக்க விஷ்ணு உன்னைப் பின்பற்றி வரட்டும்.

ஆறடிதூரம் ருதுக்களின் பொருட்டு விஷ்ணு உன்னைப் பின்பற்றி வரட்டும்.

ஏழடிதூரம் ஹோதாக்களுக்காக விஷ்ணு உன்னைப் பின்பற்றி வரட்டும்.

(கன்னிகை ஏழாம் அடி வைக்கயில் வரன் கூறவேண்டிய மந்திரம்.)

ஏழு அடிகளைத் தாண்டும் நீ என் தோழியாக வேண்டும். நாம் நண்பர்களாக வேண்டும். உன் நட்பை நாடி அடைகிறேன். உன் நட்பிலிருந்துப் பிரியமாட்டேன். என் நட்பிலிருந்து நீ பிரியவேண்டாம். சேர்ந்தவர்களாகுவோம். சேர்ந்தே செயல்களில் முடிவெடுப்போம். காதலோடிருப்போம். ஒளிமயமாகுவோம்..

நன்மனது கொள்வோம். உணவையும் பலத்தையும் பெறுவோம். நம் மனதுகள் சேரட்டும். கொள்கையில் ஒன்றாவோம். நமது விருப்பங்கள் ஒன்றாயிருக்கட்டும். நீ ரிக்காயிரு. நான் ஸாமமாயிருப்பேன். நான் ரிக்காயுள்ளேன். நீ ஸாமமாயிரு. நான் ரேதஸாய் இருக்கிறேன். நீ ரேதஸை தரிப்பவளாய் இரு. நான் மனதாய் இருக்கிறேன். நீ வாக்காக இரு. வீரனான பிள்ளையை அடைய மங்களத்தின் பொருட்டும் பிள்ளையின் பொருட்டும் மதுரமாய் பேசுபவளே! வருவாயாக.

(விளக்கம்: ஏழு அடிகள் உடல் என்கிற பூலோகத்தையும் ப்ராணன் என்கிற புவர்லோகத்தையும் மனம் என்கிற ஸுவர்லோகத்தையும் விவேகம் அறிவு என்கிற மஹர்லோகத்தையும் இவைகளால் அடையப்படும் பரமாத்மனான விஷ்ணுவின் மூன்று ஸ்வபாவங்களான ஸ்தானங்களான ஆனந்தம் என்கிற ஜனலோகத்தையும் சித் என்கிற தபோலோகத்தையும் ஸத் என்கிற ஸத்யலோகத்தையும் குறிக்கும். இவ்விதம் வாழ்வாகியப் பாதையிலே லக்ஷியமான விஷ்ணுவைக் குறித்து அடிவைப்புகள் எடுத்துவைக் கப்படுகின்றன. பரமாத்மனான விஷ்ணுவையே இவன் ப்ரார்த்திக்கிறான். ஸாதனையில் விஷ்ணு ஸாதகனை அனுக்ரஹம் செய்துகொண்டும் ஆசீர்வதித்துக்கொண்டும் பின்தொடர்ந்தே வருகிறார். அவனோடேயே நடக்கிறார்.)

(ஸப்தபதி முடிந்தது. அக்னியை வலமாக வந்து ஏற்கனவே சொன்னதுபோல் அக்னிக்கு மேற்கில் வரனும் மணமகளும் அமர்ந்து பத்னி அவனைத் ஸ்பர்சிக்க கீழே வரும் மந்திரங்களைச் சொல்லி வரன் ஒவ்வொரு மந்திரத்தின் முடிவிலும் அக்னியில் நெய்யினால் ஹோமம் செய்ய வேண்டும்.)

கன்னிகையை அடைந்த ஸோமனுக்கு ஹோமம் செய்கிறேன். கன்னிகையை அடைந்த கந்தர்வனுக்கு ஹோமம் செய்கிறேன். கன்னிகையை அடைந்த அக்னிக்கு ஹோமம் செய்கிறேன்.

கன்னிகை தந்தையிடமிருந்து கணவனின் இடத்தை அடைகிறவளாகி தந்தையோடிருக்கும் தீக்ஷையை விட்டு விட்டாள்.

வர்ஷிக்கிற இந்திரனே! இங்கிருந்து வெளிப்பட்டேன். அங்கிருந்து விட்டு வரக்கூடாது. அங்கு நன்கு ஈடுபட்டவளாய்

நன்மக்களோடு பாக்கியவதியாய் ஆகவேண்டும்.

வர்ஷிக்கும் இந்திரனே! நீர் இப்பெண்ணை மக்களுடன் பாக்கியவதியாய் செய்வீர். பிள்ளைகளைப் பெற்றெடுக்கும்படி இவளைச் செய்து கணவனையும் இவளுக்குப் பிள்ளையாகச் செய்வீர். தேவர்களுள் முதல்வரான அக்னி வரவேண்டும். இவளின் மக்களை மரணபாசத்திலிருந்து விடுவிக்கட்டும். வருணராஜன் இவளை புத்திரசோகமற்று செய்யட்டும்.

இவளை க்ருஹபதியான அக்னி காக்கட்டும். இவளின் ஸந்ததியை நீண்ட ஆயுள் பெறச் செய்யட்டும். சூன்யமான பகமில்லாமல் வாழுகின்ற புத்திரர்களின் அன்னையாகி புத்திரஸம்பந்த ஆனந்தத்தை குறித்து விழித்துக் கொள்ளட்டும்.

உன் வீட்டில் இரவில் பயங்கரசப்தம் கூடாது. அழுகிற தீய சக்திகள் உன்னை விட்டு வேறெங்கோ செல்லட்டும். நீ அழாமலிருப்பாய். வாழுகிறவளாக கணவனின் உலகில் நன்மனதோடு மக்களைக் கண்டுகொண்டு விளங்குவாய்.

ஸுவர்லோகம் உனது பின்புறத்தையும் வாயு துடைகளையும் அச்வினிகள் உன் ஸ்தனத்தையும் பால்குடிக்கும் உன் பிள்ளையை தேவஸவிதாவும் வஸ்த்ரம் தரிப்பது வரை ப்ருஹஸ்பதியும் பிறகு விச்வேதேவர்களும் காக்கட்டும்.

பிள்ளைகள் இல்லாத் தன்மையும் மக்களின் மரணத்தையும் துக்கத்தையும் தலையிலிருந்து பூமாலைபோல் உன்னிடமிருந்து எடுத்து துஷ்டர்களான உனது சத்ருக்களிடம் கட்டுகிறேன்.

வருணக்கடவுளே! நாங்கள் அழைப்பதைக் கேட்டருள்வீர். மந்திரத்தால் வணங்குபவர்களாய் உம்மிடம் யஜமானன் ஹவிசுகளை தரித்து வருகிறான். எங்கள் ஆயுளைக் குறைக்க வேண்டாம். உமக்கு நாங்கள் ப்ரியமானவர்களாய் உங்கள் நீதிக்குக் கட்டுப்பட்டு உள்ளோம். நீதியை மீறி நாங்கள் செய்த பாபங்களை நசியுங்கள்.

(கன்னிகையின் உறுதியின் பொருட்டு நிகழ்த்தப்படும் சடங்கு. அக்னிக்கு வடக்கில் கன்னிகையின் வலக்கால் அடியால் கல்லின் மீது எடுத்து வைக்கச் செய்ய வேண்டும். வரன் கன்னிகையின் வலக்கால் கட்டைவிரலை பிடித்து கல்லின் மீது அதை ஏற்றி வைக்கையில் கூற வேண்டிய மந்திரம்.)

இக்கல்லின் மேல் ஏறி நில். கல்லைப் போல் உறுதியாயிரு. எதிர்ப்பவர்களை எதிர்த்து நில். தாக்குதலைத் தாங்குவாய்.

(பிறகு அக்னியின் மேல்பாகத்தில் தம்பதி அவரவர் இடத்தில் அமர்ந்து கன்னிகையின் இரண்டு கைகளையும் ஒன்று சேர்த்து அதில் க்ருதத்தைத் தடவி இரண்டு தடவை நெல் பொறியை அதில் வைத்து அதன் மேல் நெய்யை விட்டு கீழேயுள்ள மந்திரத்தைக் கூறி ஹோமம் செய்க.)

பொறிகளை அக்னியில் ஹோமம் செய்யும் இந்தப் பெண் "என் கணவன் தீர்கமான ஆயுள் கொண்டு இருக்கட்டும். நூறு ஆண்டுகள் வாழட்டும்' என்கிறாள்.

(பின்பு கீழேயுள்ள மூன்று மந்திரங்கள் கூறி அக்னியை மூன்று முறை வலம் வந்து அம்மிக்கல் மீது முன்போல் ஏற்றி வைக்க வேண்டும்.)

அக்னிதேவனே! உங்களுக்கு ஸூர்யதேவனின் பெண்ணைக் கொடுத்தனர். இப்போது எனக்கு ஸந்ததியுடன் பெண்ணைத் தருவீர்.

(அக்னியை வலம் வருகையில் கூறவேண்டிய இரு மந்திரங்கள்.)

ஆயுளுடனும் பொலிவுடனும் பெண்ணை அக்னி தந்தார். தீர்க ஆயுளை இவளின் கணவனுக்கும் அளிக்கட்டும். எல்லாவித தீயசக்திகளையும் ஜலதாரை அழுக்கை நீக்குவதைப் போல் நீக்க வேண்டும்.

(இதைக் கூறி கன்னிகையை அம்மிமீது மறுபடியும் ஏறச் செய்யவேண்டும்.)

கன்னிகைகள் உபாஸகர்களால் அடையக்கூடியவரான அக்னிதேவனைப் பூஜித்தனர். வழிநடத்திச் செல்லும் அவர் இவளை இங்கிருந்து (ஔபாஸனாக்னி இல்லாத்தன்மையிலிருந்து) விடுவிக்கட்டும். அங்கிருந்து (ஔபாஸனாக்னியிலிருந்து) விடுவிக்கவேண்டாம். இவ்விடத்தில் நன்றாகச் சேர்க்கப்பட்டவளாகச் செய்யவேண்டும்.

நற்பிரக்ஞையை உடைய தேவஸவிதா உன்னை எதனால் கட்டினாரோ அந்த வருணபாசத்திலிருந்து விடிவிக்கிறேன். நற்செயல் செய்தவர்களின் லோகமான ப்ரும்ஹலோகத்தில் நீ

கணவனுடன் ஸுகமாய் வாழும்படிச் செய்கிறேன்.

(பெண்ணின் இடுப்பில் விவாஹ ஆரம்பத்தில் கட்டிய தர்பைக் கயிற்றை அவிழ்த்து விட வேண்டும். இங்கு இப்பாசம் தெய்வீகத்தை அடையச் சாதனமான மானுடவாழ்வைக் குறிக்கிறது. அதிலிருந்து விடபட்டு இப்போது தெய்வீகவாழ்வைக் குறிக்கும் ப்ரும்மலோகத்தை பெறுவதையே இச்சடங்கு குறிக்கும்.)

அக்னியே! அண்டியவனுடையவர் நீர். தோஷமற்றவர். ஸத்தியர். ஸாதகர்களால் அடையப்படக்கூடியவர். தங்களை வந்தடைந்த மனதால் தரிக்கப்பட்டவராய் மனதாலேயே ஹவிசைக் கொண்டு சேர்ப்பீர். ஸாதகர்களால் அடையப்படும் தாங்கள் எங்களுக்கு மருந்தை அளிக்கவும்.

(மணமானபின்பு ஊருக்கு வண்டியில் செல்லுதல் ஓடத்தில் நதியைக் கடத்தல் ஊரை அடைதல் இது யாவுமே சடங்குகளாக இருந்திருக்கிறது. ஆதலால் இவ்வெல்லாவற்றிலும் மந்திரங்கள் ஓதப்படுகின்றன. இச்சடங்குகள் யாவைக்கும் உள்ளர்த்தம் உள்ளது. வாழ்வு என்கிற தெய்விகஸாதனை ஒரு பெரியயாத்திரை. பாதை மிகவும் பெரியது. யாத்திரையும் மிகரஸமானது. இலக்கும் மிகரஸமானது. ரதத்தில் ஏறி இதில் யாத்திரை செய்யவேண்டும். இந்த ரதம் மிக த்ருடமாயிருத்தல் வேண்டும். ரதம் பெரும்பாலும் வாழ்வாகிய ஸாதனையில் உள்ள இயக்கத்தையே குறிக்கிறது. தம்பதிகள் ஊருக்குச் செல்லுகையில் ரதத்தைப் பூட்டுகையில் கூற வேண்டிய மந்திரம்.)

புவி ஸத்தியத்தினாலும் த்யுலோகம் ஸூர்யனாலும் ஆதித்யர்கள் அறத்தாலும் தாங்கப்படுகின்றனர். தேவலோகத்தை ஆச்ரயித்து ஸோமன் நிற்கிறார்.

(அடுத்து வரும் மந்திரங்களால் குதிரையை வண்டியில் வலப்பக்கத்தில் முதலில் பூட்ட வேண்டும். குதிரை ப்ராணனைக் குறிக்கிறது. இப்ப்ராணனை வசப்படுத்தியாள்வதால் ரதம் உற்சாகமாய் செல்லும். வாழ்வாகிய யாத்திரை நல்லபடி அமையும். ப்ராணசக்தியானக் குதிரையை வசப்படுத்த மனோவலிமையான இந்திரனும் யோகத்தில் அழைக்கப்படுகிறார்.)

நன்றாக ஓடக்கூடிய தாவரங்களைக் கடந்து சஞ்சரிக்கிற பெரிய குதிரை தேவலோகத்தில் எதுவரை விளங்குமோ அது வரை

வண்டியில் கட்டவும்.

தோழர்களான நாங்கள் வேகமான கதியைக் கொண்ட இந்திரனை யோகஸாதனையின் ஒவ்வொரு வேளையிலும் வளர்ச்சிக்காக அழைக்கின்றோம்.

(ரதத்தில் ஏறுகிற மணமகளிடம் வரன் கூறவேண்டிய மந்திரம்.)

தங்க வர்ணத்தில் ஜ்வலிக்கும் சால்மலி அல்லது கிம்சுகத்தால் ஆன விச்வரூபமான நன்றாய் ஓடுகிற நல்ல சக்கரம் கொண்ட ரதத்தில் ஏறுவாய். அது உன்னை அம்ருதமயமான உலகான செல்வத்தை அடையச்செய்யட்டும்..

உயர்ந்த ரதத்தில் ஏறுகிற நீ சத்ருக்களைப் பிளந்து உதறித்தள்ளி கணவனின் தலையில் ஏறுகிறாய். குழந்தைகளுடன் அரசியாவாய்.

மாமனார் மாமியார் நாத்தனார் மச்சினர்கள் இவர்கள் யாவருக்கும் அரசியாவாய். மருமகள்கள் குழந்தைகள் செல்வங்கள் கணவன் யாவருக்கும் அரசியாவாய்.

(நீலநிறக் கயிற்றை வலதுசக்கரப் பாதையிலும் சிவப்பை இடதுசக்கரப்பாதையிலும் பாதையிலும் பரப்பி கூறவேண்டிய மந்திரம்.)

நீலமும் சிவப்புமான இரு நூல்கள் உள்ளன. க்ருத்யையை விலக்குதல் ஏற்படும். இவளின் பந்துக்கள் வளருவர். கணவன் இவளிடம் ஸ்நேகத்தால் கட்டப் படுகிறான்.

(அவ்விரு கயிறுகள் மீது அடுத்துவரும் மந்திரங்களைச் சொல்லி வண்டியைச் செலுத்துக.)

மணப்பெண்ணின் ஸோமமயமான செல்வத்தை நோக்கி எந்தத் திருடர்கள் வருவரோ அவர்களை யக்ஞசக்திகளான தேவர்கள் துரத்தட்டும்.

இந்த தம்பதியை தீயோர்கள் வந்தடையவேண்டாம். சிரமத்துடன் கடக்க வேண்டிய பாதையை ஸுகமாய் செல்லக்கூடிய வழிகளால் கடக்க வேண்டும். தீயோர்கள் ஓடவேண்டும்.

எந்த வழியில் வீரன் அன்னியர்களால் அழிவதில்லையோ செல்வத்தையும் அடைகிறானோ அப்படிப்பட்ட ஸுகமாய் செல்லமுடிவதும் தீங்கற்றதும் வாஹனங்களுக்கு நன்மையை

அளிப்பதுமான வழியை அடைந்திருக்கிறேன்.

(வாழ்வுச்சாதனையில் செல்லுகையில் மனதில் எழும் தீயசக்திகளான காமவெறி க்ரோதவெறி லோபவெறி முதலிய அஸுரர்கள் நீங்குவதாய் ஓதப்படும் மந்திரங்கள். செல்லுகிற வழியில் தீர்த்தங்களைக் கடக்க நேரிடுகையில் ஜபிக்க வேண்டிய மந்திரம்.)

மனுஷனின் வீட்டில் துதிக்கப்படும் அச்விகள் ஸ்தோத்திரம் பண்ணுபவனுக்குப் பலவீரர்கள் கொண்ட செல்வத்தைத் தரட்டும். மங்களத்தின் தலைவர்களான அச்விகள் ஜலத்தை நன்றாய் குடிக்கும்படிச் செய்யட்டும். வழியிலுள்ள கெட்ட புத்திசக்தியை நாசம் செய்க.

(ஓடத்தின் மூலம் நதியைக் கடக்கையில் ஜபிக்க வேண்டிய மந்திரம். நதி ஜீவநதியை ஸாதனையை வாழ்வைக் குறிக்கிறது. ரதத்தை எது குறித்ததோ அதுவே ஓடத்தையும் குறிக்கிறது. மஹீ என்பது இங்கு மஹத்தான ஜீவநதியேயாம்.)

இவ்வோடம் எங்களை மஹீயின் கரையை அடையும்படி க்ஷேமமாய் கடக்கும்படி செய்விக்கவும். ஓடமே! எங்களை ஸுகமாய் தாண்டச் செய்வதாயும் தீர்கமான ஆயுளின் பொருட்டும் தேஜஸின் பொருட்டும் ஆவாய்.

அக்னியே! ஹோமம் செய்கிற எனக்கு அன்னத்தையும் பசுவின் தானத்தையும் நிலைத்திருக்கும்படி ஏற்படுத்துக. எங்களுக்கு நற்சக்தியுள்ள பிள்ளையிருக்க வேண்டும். அக்னியே! உம்முடைய நன்மனம் எங்களிடம் இருக்கட்டும்.

தெய்வீகஸாதனையாகிய தெய்வீகவாழ்வினால் பெரும்வீட்டை பெரும்தெய்வத்தை இலக்கை ஆன்மச்செல்வத்தை அடைந்தாகிவிட்டது.)

(வீட்டிற்கு வந்து சேருகையில் வீட்டைக்காட்டி வரன் மணமகளிடம் கூறவேண்டிய மந்திரம். )

செல்வத்தை வீட்டோடும் ப்ரும்ஹத்தோடும் கூடி க்ரூரத்தனமற்ற நட்புப் பார்வையுடன் காண்கிறேன். எங்குமுள்ள விச்வரூபமான இச்செல்வத்தை ஸூர்யன் கணவனுக்கும் ஸுகம் தரும்படியாக செய்யவேண்டும்.

(ரதத்தை அழைத்து வந்த குதிரைகளை அவிழ்த்து

விடுகையில் கூற வேண்டிய மந்திரம்.)

ஸம்ருத்தியான செல்வம் நிறைந்த அச்விகளே! தங்கள் நல்லெண்ணம் எங்களை வந்தடைந்தது. நீங்கள் ரக்ஷகர்களாய் இருக்கையில் இதயவிருப்பங்கள் நிறைவேறுகின்றன. மங்களத்தின் தலைவர்களே! அர்யமாவின் ப்ரியர்களாகி வீட்டுள் ப்ரவேசிப்போம்

(அவிழ்த்துவிட்ட பிறகு கூறவேண்டிய மந்திரம்.)

எங்களின் விருப்பத்தில் வந்த உன்னை க்ஷேமத்திற்காக மக்களுடன் மகிழ்விக்கும் இந்த ஸூர்யன் ப்ருஹஸ்பதி அக்னி இந்திரன் மித்திரன் வருணன் விஷ்ணு முதலியோர் விருப்பத்திற்காக விடட்டும்.

(வீட்டிற்குள் நுழைகையில் கூறவேண்டிய மந்திரம்.)

வீரனை ஹிம்ஸிக்காத நன்மனம் கொண்ட க்ஷேமமான வீரர்களைக் கொண்ட ஒளியைப் பெருகவைக்கும் வீட்டை அடைகிறேன். நல்ல மனதுடன் நுழைகிறேன்.

(வீட்டில் ப்ரவேசித்தவுடன் வேதிகையின் வடகிழக்குப்பிரதேசத்தில் அக்னியை உண்டாக்கி ஆஜ்யபாகம் என்கிற கர்மத்தைச் செய்து மனைவி கணவனை தொட்டுக் கொண்டு கீழேயுள்ள மந்திரங்களை ஜபித்துப் பதிமூன்று ஆஹுதிகளைச் செய்துப் பிறகு ஜயாதிஹோமத்தினைச் செய்க.)

குதிரைகளாலும் பசுக்களாலும் வீட்டிற்கு வந்துள்ள என் மனைவி ஸுவர்லோகத்தை அறிந்த நற்சக்தியைப் பெருபவளாம். நல்ல தனங்களை உடையவளாய் இந்த அக்னிக்குப் பலகாலம் பணி செய்யட்டும்.

பகதேவருடைய எங்களுக்குச் செல்வம் புஷ்டி மக்கள் எல்லாம் அக்னிதேவன் தரட்டும். க்ருஹபதியான இவ்வக்னி நல்லிருப்பிடத்தைக் கொண்டவர். புஷ்டியை வளர்ப்பவர்.

ப்ரஜாபதியே! இந்திரனே! அக்னியே! இவர்களின் மக்களுக்கு இவர்கள் உள்ள நாட்களிலே அழியாத்தன்மையைத் தரவும்.

அக்னிக்கு நான் தந்த ஹவிசால் நான் மேலும் வளர்ச்சி பெற வேண்டும். என் மனைவி ரஸமாய் வளரட்டும்.

ராஷ்டிரத்தாலும் புஷ்டி செய்யும் பல சக்திகளாலும் செல்வத்தாலும் இவர்கள் வெளியிலிருந்து எதையும் எதிர்பாராமல்

இருக்கட்டும்.

இங்கேயே இருக்கவும். பிரியவேண்டாம். பரந்த ஆயுளை அடையவும். மங்களமான மஹீதேவிக்காக இந்திரன் இருக்கவேண்டும்.

புஷ்டியாக்கத்தக்க என்னிடம் நிலைபெற்றிரு. ப்ருஹஸ்பதி உன்னை எனக்களித்தார். மக்களைக் கொண்டு பல்லாண்டு வாழ்க. த்வஷ்டா மனைவியைப் படைத்தார். த்வஷ்டா அவளுக்காக கணவனான உன்னைப் படைத்தார். அவரே வெகு தனங்ளையும் தீர்கமான ஆயுளையும் உங்களுக்குத் தரட்டும்.

(கீழேயுள்ள மந்திரத்தைச் சொல்லி வரனின் இடதுபாகத்தில் மணப்பெண் அமரவேண்டியது.)

இங்கு பசுக்களே! பிறக்கவும். குதிரைகளே! வீரர்களே! இங்கு பிறக்கவும். பலநேர்மைகள் கொண்ட செல்வபுஷ்டி நிலைக்கட்டும்.

(ஒரு சிறுவனை பெண்ணின் மடியில் அமர்த்தி பிறகு இம்மந்திரத்தைக் கூறுக.)

தேவர்கள் ஸோமனால் பலமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். பூமியும் ஸோமனால் த்ருடமாக உள்ளாள். நக்ஷத்திரங்களின் மத்தியில் ஸோமன் ஸ்தாபிக்கப் படுகிறார்.

(பிறகு அச்சிறுவனை இறக்கிவிட்டு அவனுக்குப் பழமளித்துக் கூறவேண்டிய மந்திரம்.)

வளர்ச்சி தருபவர்கள் நீங்கள். இக்கன்னிகை உலகில் ஸந்ததியுடன் ப்ரஸவிக்கவேண்டும்.

(பிறகு இம்மந்திரங்களை ஜபிக்கவும்.)

நம் வீட்டில் உனக்கு ஸந்ததியால் ப்ரியம் பெறுகட்டும். இந்த வீட்டில் அக்னிதேவனுக்காக விழித்திரு. கணவனுடன் தேஹஸம்போகம் பண்ணுவாயாக. நல்ல காரியங்களைப்பற்றி உபதேசிக்க வேண்டியவைகளை அறிவிப்பாயாக.

இந்தப் பெண் மங்களம் பொருந்தியவள். இவளை வந்து பாருங்கள். ஸௌபாக்கியத்தை இவளுக்குத் தந்து பிறகு உங்கள் வீட்டிற்குச் செல்லவும்.

(உறுதியாக இருப்பதைக் குறிக்க நிலைத்துள்ள த்ருவநக்ஷத்திரத்தை வரன் பெண்ணிற்குக் காட்டுகிற மந்திரம்.)

நீர் நிலைத்துள்ள ஸ்தானம் கொண்டும் நிலையான உற்பத்திக்

கொண்டும் மற்ற நக்ஷத்திரங்கள் நிலையாய் இருக்கக் காரணமாகி நிற்பதால் த்ருவம் என்றப் பெயர் உள்ளவராக உள்ளீர். நக்ஷத்திதரங்களுக்கு கட்டுத்தரியாக உள்ளீர். நீர் எதிரிகளிடமிருந்து காக்கவும்.

(கற்புக்கரசியாக விளங்க அருந்ததியைக் காட்டுகிற மந்திரம்)

ஏழு ரிஷிகள் க்ருத்திகைகளுள் முதல்வளான அருந்ததியை நிலைத்திருக்கும் தன்மையை அடைவித்தனர். மற்ற ஆறு க்ருத்திகைகள் முக்கியமான ஏழாம் நக்ஷத்திரத்தோடு சேர்க்கையை விரும்புகின்றனர். என் மனைவி எட்டாவதாக வளர்ச்சிபெறட்டும்.

(இவ்வாறு ஸோமனின் ஸூக்ஷ்மசக்திகளான நக்ஷத்திரகணத்தின் சக்தியைப் பெற்றுப் பிறகு ஒருவருக்கொருவர் தம்பதி பார்த்துக்கொண்டு கூறவேண்டும். நெய்யினால் தம்பதி இருவருடைய இதயங்களையும் தொடவேண்டும்.)

என் கருத்துக்களை அறிந்த தவத்தால் உண்டான தவத்தால் மஹிமையைப் பெற்ற உங்களை இதயத்தால் காண்கிறேன். ஸந்ததியை விரும்புகிறவரே! என்னிடம் இங்கு ஸந்ததியையும் செல்வத்தையும் தந்துகொண்டு மக்களாய் பிறப்பீர்களாக.

ப்ரகாசிக்கிற தன் சரீரத்தில் பருவகாலத்தில் விரும்புகிற உன்னை இதயத்தால் காண்கிறேன். இளைஞியான நீ மேலான என்னை அனுபவிப்பாயாக. ஸந்ததியை விரும்புபவளே! ஸந்ததியால் பிறப்பாய்.

எங்கள் இதயங்களை விச்வேதேவர்களும் ஜலங்களும் வாயுவும் ப்ரும்ஹாவும் ப்ரேமையுள்ளவையாய் செய்யட்டும். ஸரஸ்வதி எங்களை ஸம்பாஷனை செய்யத் தூண்டட்டும்.

ப்ரஜாபதியே! என்னை அடையவும். ஸமர்த்தனான த்வஷ்டாவே! இந்திரனே! தோழர்களான மற்ற தேவர்களுடன் விருப்பங்களை நிறைவேற்றிக்கொண்டு இருக்கவேண்டும். நாங்களும் பல விருப்பங்களை நிறைவேற்றிக் கொண்டு வீரர்களின் பெற்றோர்களாய் ஆகவேண்டும்.

(ஹோமம் ஆனபிறகு சொல்ல வேண்டிய மூன்று மந்திரங்கள்.)

ப்ரஜாபதி எங்களுக்கு மக்களைத் தரட்டும். அர்யமா நாங்கள் கிழவர்களாகும்வரை எங்களைச் சேர்த்துவைக்கட்டும்.

அமங்களமற்று கணவனின் உலகில் வஸித்து நம் மனுஷருக்கும் மற்றப் ப்ராணிகளுக்கும் ஸுகம் செய்வாய்.

பூஷாவே! எவ்ளிடத்தில் நான் விதையை விதைக்கிறேனோ அப்பெண்ணை எனக்கும் மங்களகரமாக உள்ளவளாக தூண்ட வேண்டும். எந்தப் பெண் விருப்பத்தோடு எனக்கு ஊருக்களை விறித்துக்கொள்வாளோ எவளிடத்தில் விரும்பி எனது பீஜத்தைப் பயன் படுத்துவேனோ அவளைத் தூண்டவும்.

(இம்மந்திரங்கள் தாம்பத்தியவாழ்வின் பவித்திரமான தெய்வீக தார்மிகக் கூடுதலை வலியுறுத்துபவை. இவ்வாழ்வை வெறுத்து வேறேதோ தனியே அன்னியமாய் உள்ள தெய்வத்தைத் தேடுவது வேதத்தில் கூறவேபடவில்லை. வேதம் முழுவதிலும் இந்த வாழ்வையே தன் மனத்தாலும் ஆற்றலாலும் தெய்வீகமாக்கி பெரும் தெய்வத்திடம் ஒப்புவித்தலே உள்ளது. அதனாலேயே பெரும்தெய்வத்தைக் கண்டு அத்துடன் வாழும் படி ஆவோம். இதுவே வேதத்தின் போக்காய் இருப்பதால் வாழ்வையும் இல்லறத்தையும் வலியுறுத்துகிறது. இத்துடன் விவாஹச்சடங்கு முற்றிற்று.

மிகவும் ரஸமான வேதமந்திரங்களைக் கொண்டுப் பண்டையகாலத்தில் அன்றாடம் மிகவும் எளியச் சடங்குகளைச் செய்து வந்தனர். இச்சடங்குகள் மிகவும் எளிதானவை. இவையாவும் இதயத்தைத் தொடுபவை. எளிமை இதயத்தைத் தொடுமல்லவா? எளிமையில் மகிமையுள்ளது. எளிமை என்பது சடங்கு. மகிமை என்பது அதன் கருத்து.

இதயத்தைத் தொடும் இச்சடங்குகள் உணர்த்தும் கருத்துக்களையே நம் பூர்வீகர்களான முனிவர்கள் வாழ்ந்தனர். இச்சடங்குகள் தினந்தோறுமான வழிபாடாகிய ஔபாஸனம் ஸந்த்யாவந்தனம் இவைகளையும் வாழ்வின் முக்கியநிகழ்ச்சிகளான கல்யாணம் முதலியவைகளையும் உள்ளடக்கியது. இவைகளைத் தவிற தனிப்பட்ட முறையில் யக்ஞங்கள் என்றச் சடங்குகள் செய்வதும் உண்டு. இவை மிகமுக்கியமானவை. இவையாவுமே நாளடைவில் பல்கிப்பெருகிவிட்டன. மனிதன் ஆடம்பர மோகத்திற்கு பலியான பிற்காலங்களில் கல்யாணம் முதலிய எளிய சடங்குகளையும் மிகவும் ஆடம்பரமாகச் செலவழித்து

அனாவசியமாக கெடுத்துவிட்டான். இன்று பெரும்பாலும் சடங்குகளில் டாம்பீகமும் ஆடம்பரமுமே உள்ளது. பண்டையகாலத்தில் மிக மிக எளிதாயும் ரஸமாயும் கல்யாணம் முதலிய சடங்குகள் நடந்ததைக் காண்கிறோம். செலவே இல்லாமல் கல்யாணம் முதலிய நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. இவ்விதமாய் அன்றாடம் அக்னியோடு வாழ்ந்து அக்னிக்கே அடிபணிந்து சிந்தைகளையும் செயல்களையும் அதற்கே ஒப்புவித்து இவ்வித தெய்விகஸாதனையை வேதமனிதன் கடைபிடிக்கிறான். இதையே சடங்குகளும் காட்டுகின்றன. இறுதிச் சடங்காகக் கருதப்படும் ஈமச்சடங்கான தஹனகர்மா வேதமனிதன் தன்னையே தான் உபாஸிக்கும் அக்னிக்கு ஸமர்பிப்பதை வலியுறுத்துகிறது. அந்த வேதமனிதனை சிதையில் ஏற்றப்படும் சடங்கு இது. பிறகு அவ்வேதமனிதனான ரிஷியைக் குறித்து அவனின் ஸ்மரண த்திற்காக ஸ்ராத்தம் முதலியவையும் செய்யப்படுகின்றன.)

இருபத்தெட்டு: ஈசோபனிடதம்

**வேதத்தின் இறுதியான உறுதி மொழிகள்:**

மந்திரம்: இவ்வையகம் யாவும் ஈசனால் வ்யாபகமானதே. அந்தத் த்யாகபுத்தியோடு வாழ்வை அனுபவிப்பாய். யாருடையவும் சொத்தில் ஆசைப்படாதே.

விளக்கம்: பொதுவாக தன்னலத்தின் பொருட்டே வாழ்வது மிருக வாழ்வு. அவ்வனுபவமும் மிருக அனுபவம். தன்னலத்தை மட்டிலுமே குறிக்கோளாய் கொள்ளாமல் ஒரே ஆத்மாவே ஒரே ஈசனே எங்கும் இருப்பதை உணர்ந்த பெரிய இதயம்கொண்டு வாழ்வை அனுபவிக்கையில் யாவருக்கும் உதவிசெய்துகொண்டு ஹிதமாய் வாழலாம். எங்கும் அந்தர்யாமியைக்காண்பவன் விலங்குகள் செடிகொடிகளுக்குக் கூட நன்மையை நினைத்து செய்து அதனால் அகந்தையை ஒடுக்கும் த்யாகபுத்தி கொண்டு வாழலாம். அப்படிப்பட்ட நல்லவாழ்வையும் அனுபவிக்கலாம். அதனால் கேடேதுமில்லை. தன்னலமே கருதி த்யாகஎண்ணம் கொள்ளாமலேயே வாழ்வை அனுபவிக்க எண்ணுவதே தீயகுணம்.

அதனால் நமது செல்வங்களில் மட்டிலும் இல்லாமல் அனாவசியமாக மற்றோருக்கான செல்வங்களிலும் ஆசை வரும். அதனால் அவைகளைப் பிடுங்கத் தோன்றும். அவ்வித க்ரூர எண்ணத்தை த்யாகம் செய்து சாந்தியான வாழ்வை எல்லோருக்கும் ஸேவை செய்து அனுபவித்து வாழ்வோமாக.

மந்திரம்: செயல்களைச் செய்துகொண்டே நூறுவருடங்கள் வாழ விரும்பவேண்டும். இவ்வாறு இருக்கையில் உய்வதற்கு வேறேதும் வழியே கிடையாது. இவ்வித வாழ்வால் அவனை செயல்கள் பந்தப்படுத்தப் போவதில்லை.

விளக்கம்: உய்வதற்கு வழி அறநெறிகளேயாம். சமூகநலம் கருதிய பணிகளேயாம். இவையாவும் கர்மாக்களல்லவோ? இவை ஸம்ஸாரத்திலேயே பந்தப்படுத்திவிடுமே! என்று எண்ணாதே. கட்டாயம் பந்தப்படுத்தாது. தன்னலத்திற்கு முக்கியத்துவம் தந்து செய்யும் எச்செயலும் பந்தத்திற்கு காரணமாய் அமையலாம். இவையோ பொதுநலத்திற்கு நல்லோர்களின் நலத்திற்கு முக்கியத்துவம் தந்து செய்யும் பணிகளாய் உள்ளதால் பந்தப்படுத்தாமல் மனிதனை தெய்வீகத்தைப் பெற பண்படுத்தும்.

மந்திரங்கள்: எவர்கள் இவ்வழியை ஏற்கவில்லையோ அவர்கள் தங்களையே கெடுத்துக் கொண்டு காரிருளில் மாய்வார்கள். ஆத்மா அசையாதது. ஒன்றானது. மனதைவிட வேகமானது. புலன்கள் இதை அடைவதில்லை. அது மற்றவைகளைக் கடந்து நிற்கிறது. அதிலேயே ப்ராணபலமான வாயு ஜீவஜலங்களை தரித்துள்ளார்.

அது அசைந்தும் அசையாமலும் அருகேயும் தூரத்திலும் கடந்தும் உள்ளேயுமாய் உள்ள கடவுள்.

எவன் இவ்வெல்லாவற்றையுமே ஆத்மாவிலேயே காண்கிறானோ ஆத்மாவையும் எல்லாவற்றிலும் காண்கிறானோ அவன் அருவருப்படைவதில்லை.

எவனுக்கு இவையாவும் ஆத்மாவேயோ அந்த ஞானிக்கு ஏது மோஹம்? ஏது சோகம்? அவன்தான் ஒன்றையே காண்கிறானே! ஆத்மா எல்லாம் கடந்தது. ஜோதியானது. உருவற்றது. பரிசுத்தமானது. அதில் பாபமில்லை. அது கவி. நிறைந்தது. ஸனாதனமாக அறநெறிகளை அருளியது.

விளக்கம்: முதலில் ஆத்மாவின் நிலையைக் கூறிய வேதம் பிறகு அது அறநெறிகளை அருளியபாங்கை கூறுகிறது. இதன்பிறகு கீழே காணப்போகும் மந்திரங்களில் ஆத்மாவின் நிலையாகிய ஞானத்தையும் ஆத்மா அருளிய அறநெறிகளாகிய கர்மத்தையும் சேர்த்தே உபாஸித்தால்தான் உய்வதற்கு வழியுண்டு என்பதை வலியுருத்துகிறது.

மந்திரங்கள்: காரிருளில் அவித்யையை மட்டும் உபாஸிப்பவர்கள் நுழைவர். அதைவிட காரிருளில் வித்யையை மட்டிலுமே உபாஸிப்பவர்கள் நுழைவர்.

வித்யையினால் வேறு, அவித்யையினால் வேறு என்று எங்களுக்கு உபதேசித்து அருளிய தீரர்களிடமிருந்து நாங்கள் கேட்டுள்ளோம்.

வித்யையையும் அவித்யையையும் சேர்த்தே உபாஸிப்பவனுக்கு அவித்யையால் மரணத்தைக் கடத்தலும் வித்யையால் அம்ருதத்தைப் பருகுவதும் உண்டு.

விளக்கம்: வித்யை என்பது ஈசனின் ஞானம். அவித்யை என்பது அவன் அருளிய அறநெறிகள். மரணம் என்பது ஸம்ஸாரம். மோக்ஷமே அம்ருதத்தைப் பருகுதலாம். எங்கும் ஆத்மாவைக் கண்டு செயல்கள் புரிவதை இந்த பாகத்தின் ஆதியிலேயே கண்டோம். அதுவே இங்கு வலியுறுத்தப்படுகிறது.

மந்திரங்கள்: எவர்கள் வினாசத்தை மட்டிலும் உபாஸிக்கிறார்களோ அவர்கள் காரிருளில் நுழைவர். எவர்கள் ஸம்பூதியை மட்டிலும் உபாஸிக்கிறார்களோ அவர்கள் அதைவிடக் காரிருளில் நுழைவர். ஸம்பூதியால் வேறு, வினாசத்தால் வேறு என எங்களுக்கு உபதேசித்த தீரர்களிடமிருந்து நாங்கள் கேட்டுள்ளோம். எவன் ஸம்பூதியையும் வினாசத்தையும் சேர்த்து உபாஸிக்கிறானோ அவன் வினாசத்தால் மரணத்தைக் கடந்து ஸம்பூதியால் அம்ருதத்தைப் பருகுகிறான்..

விளக்கம்: வினாசம் என்பது ஈசன் அருளிய அறநெறிகளேயாம். அது மரணம் என்கிற கர்மபந்தத்தை தொலைத்துக் கட்டுவதால் அதற்கு விநாசம் என்றுபெயர். ஸம்பூதி என்பது ஆத்மஞானமேயாம். அது அம்ருதம் என்ற மோக்ஷத்தை பயக்குவதால் அதற்கு ஸம்பூதி எனப்பெயர். வெறும் அவித்யையை

உபாஸிப்பவனாவது ஸம்ஸாரத்திலேயே உள்ள நற்பயன்களையாவது அடைகிறான். இதையே காரிருள் என்கிறது வேதம். வித்யையை மட்டிலும் உபாஸிப்பவனோ அந்தப்பலனையும் அடையாமல் போகிறான்.

அதையே மிகவும் காரிருள் என்கிறது. இவ்விரண்டைவிட சிறந்ததான வித்யை அவித்யை என்பதின் சேர்க்கையான உபாஸனை மிக உயர்ந்தது. இச்சேர்க்கையான உபாஸனை அறநெறிகளை இடைவிடாமல் கடைபிடிப்பது என்கிற அவித்தையாலேயே ஸித்திக்கிறது. சேர்க்கையுபாஸனையே ஒளிமயப் பாதையில் கொண்டு செல்லுகிறது. அதாவது கர்மபந்தத்தையும் அறுத்து ஈசனையும் அடையச்செய்கிறது. இவ்வொளிமார்கத்தைப் பற்றி கூறும் யஜுர்வேதத்தின் இறுதியான உறுதி மந்திரங்கள்:

ஸூர்யனே! பரமாத்மனே! தங்கமய மூடியால் ஸத்யத்தின் முகம் மூடியுள்ளது. அதை நீங்கள் ஸத்யம் என்றப் பெயர் கொண்ட ஆத்ம உபாஸனையையும் தருமம் என்றப் பெயர்கொண்ட அறநெறிகளையும் த்ருஷ்டியாகக் கொண்ட எனக்காக நீக்கியருளுங்கள்.

புஷ்டி செய்பவரே! ஸூர்யனே! ஒளிமயகிரணங்களை வ்யூஹம் செய்யுங்கள். உங்களின் எந்த மங்களமான திருவுருவம் உள்ளதோ அதைக் காண்கிறேன். எந்த அந்த அந்த புருஷன் உள்ளாரோ அந்த அதே புருஷனே நானாக இருக்கிறேன்.

விளக்கம்: இதுவே ஸாக்ஷாத்காரம். மோக்ஷம். எங்கும் வ்யாபித்த ஆத்மாவாகிய ஈசனாகிய விஷ்ணுவே ஸூர்யனாகும். இவ்வாறு வித்யையாகிய ஸம்பூதியாகிய ஞானத்தால் முக்தியைப் பெறுவதைக் கூறும் வேதம் இறுதியில் உறுதியாக வினாசமாகிய அவித்யையாகிய அறநெறிகளால் கர்மபந்தங்களை நீககுவதை கூறுகிறது.

மந்திரங்கள்: பிண்டப்ராணன் அண்டப்ராணனில் ஒடுங்குகையில் சரீரம் சாம்பலில் சாயும். க்ரதுவே! ஸ்மரிக்கவும். செயலை ஸ்மரிக்கவும். க்ரதுவே! ஸ்மரிக்கவும். செயலை ஸ்மரிக்கவும்.

ஸர்வக்ஞனான அக்னியே! எங்களை நற்பாதையில் அழைத்துச் செல்லுவீர். எங்களிடம் உள்ள தீயசக்திகளைப் போராடிப் பொசுக்கவும். மேலும் மேலும் உங்களுக்கு ஸ்தோத்திரங்கள்.

விளக்கம்: உபாஸகன் ஈசஞானத்தால் முக்தியைப் பெறுகிறான். ஆத்மாவாகிய ஸூர்யனின் ஸாக்ஷாத்கார ஸ்தோத்திரங்கள் விளக்கப்பட்டன. முடிவாக கவிக்ரதுவான அதாவது ஸூக்ஷ்மதரிசிகளின் ஸங்கல்பமான ஈசனான விஷ்ணுவின் மூலஸங்கல்பமாகிய விவேகவொளியைப் பற்றிய ஸ்தோத்திரங்கள். இவை கர்மபந்தங்களைப் போக்குவதற்கான ஸ்தோத்திரங்கள்.

உயிருடையன வெல்லாம் காற்றின் மக்களே என்பது வேதம்.
உயிர்தான் காற்று.
காற்றே உயிர். எனவே உயிர்கள் அழிவதில்லை.
சிற்றுயிர் பேருயிரோடு சேர்கிறது.
மரணமில்லை.

- பாரதி

வேதத்தின் கடைசீபாகம் வேதம் முழுவதும் கூறப்பட்ட வழியை மிகத்தெளிவாக சுருக்கிக் கூறிவிட்டது. இது ஈசனை அடைய வழியாம்.

1. தீவினைகளைச் செய்பவன் துக்கம் பெருகிறான். இவன் தீயவன்.

2. தன்னலத்தையே முதன்மையாய் கருதியே நல்வினைச் செய்பவன் ஸுகங்களைப் பெறுகிறான். இவன் ஸாமானியன்.

3. தன்னலத்தை முதன்மையாய் கருதாமல் பொதுவான க்ஷேமத்தின்பொருட்டு நல்வினைகளைச் செய்பவன் அதனால் சித்தசுத்தியைப்பெற்றுப் பேரான்ம உபாஸனையைப் பெறுகிறான். இவன் நல்லவன்.

4.பேரான்ம உபாஸனையையும் நல்வினைகளையும் ஒருங்கே கொண்டிருப்பவன் கடவுளை அடைகிறான். இவன் ஞானி.

5. தீயவனுக்கு அவன் செய்யும் தீவினைகள் வளரும்பொருட்டு நன்மை செய்வதும் நல்லவனுக்கும் ஸாமானியனுக்கும் தீயது செய்வதுமே தீவினைகளாம்.

6.நல்லவனுக்கும் ஸாமானியனுக்கும் நன்மை பயக்குவதும் தீயோன் திருந்தும் பொருட்டு அவனுக்கு நன்மை பயக்குவதும் அவன் திருந்தாவிடில் அவனை நல்லோனுடையவும் ஸாமானியனுடையவும் நன்மையின் பொருட்டு அடக்குவதும் நல்வினைகளாம்.

7.தீயவன் துக்கம் பெறுவதும் ஸாமானியன் ஸுகம்

பெறுவதும் நல்லவன் சாந்தியைப் பெறுவதும் ஈசநியதியாம்.

# மறையின் மறைபொருள்

## முடிவுரை



# மறையின் மறைபொருள்

## முடிவுரை

வேதம் முழுவதும் ஒரு மனிதனைப் பற்றியே பேசுகிறது. பலபேசுவது போல் தோன்றினும் அது ஒரே மனிதனையே தான் பேசுகிறது. வேதம் அக்னியைப் பாடலாம். வருணனைப் பாடலாம். இந்திரன் மித்திரன் யாவரையும் பாடலாம். யாரைப் பாடினாலும் அந்த ஒரே மனிதனையே பாடுகிறது. ஏனெனில் இவ்வெல்லா தேவர்களும் அம்மனிதனுடையவே பலபாகங்களாய் உள்ளனர். உட்சக்திகளாய் உள்ளனர். உள்ளுணர்வுகளாய் உள்ளனர். தேவதத்துவங்கள் யாவும் தேவசக்திகள் யாவும் சேர்ந்து ஒருங்கிணைந்து செயல்படுகையிலே அந்த ஒருங்கிணைப்பு என்ற யோகத்தால் அபாரமான ஒரு தெய்வீக மனிதன் உதிக்கிறான். அவனே வேதலக்ஷியம். அவனே வேதம் முழுவதும் போற்றப்படுகிறான். அக்னியோ வருணனோ மித்திரனோ ஸோமனோ யாவும் அம்மனிதனே. நீ உன் இதயத்தில் உறையும் வேததத்தில் உள்ள தேவதத்துவங்களையும் ஒருங்கிணைத்து வாழ்ந்தால் அதன் பலனாக தெய்வீக ஒளி பெருவாய். இந்த தேவதத்துவங்கள் யாவும் ஒருங்கிணைந்து நீ இருப்பதால் உன்னைத்தான் வேதம் எங்கும் போற்றுகிறது. நீ அத்தத்துவங்களை ஒருங்கிணைத்துப் பயன்படுத்தாவிடில் உன்னையே வேதம் இகழ்கிறது.

வேதலக்ஷியமான மனிதன் ராமன். ராமனே வேதம் முழுவதும் போற்றப்படுகிறார். ராமனின் வாழ்வே வேதம். ராமனே வேதம். ராமனே வேதம் முழுவதும் போற்றப்படும் அம்மனிதன். அவரே அக்னி, வருணன், வாயு, இந்திரன், மித்திரன், ஸோமன் எல்லாம். வேதத்தை அன்றாட வாழ்வில் அணுஅணுவாக வாழ்ந்தவர் ராமன்.

தன் வாழ்வு முழுவதும் விவேகவொளியான அறவுந்துதலான அக்னிக்கு ஸமர்ப்பித்தவர் ராமன். அவரின் மனதிலுள்ள

ஒவ்வொரு சைதன்ய அணுவும் அக்னியால் பற்றியெறியப்படுகிறது. அவர் செய்யும் யக்ஞம் அது. அதற்குத் தடையாக ஸாம்ராஜ்ஜியம் இருந்ததால் அதையும் அவர் த்யாகம் செய்ய நேர்ந்தது. உள்முகவுலகில் உள்ள தனதகந்தையை சிம்மாஸனத்திலிருந்து இறக்கி உட்சாம்ராஜ்ஜியத்தில் அக்னிக்கு பட்டாபிஷேகம் செய்தார். அல்ல. அவ்வாறு கூறுவது தவறு. அவரே தானே அக்னியாக இருக்கிறார். அக்னிவேறு அவர் வேறு என்றில்லாமல் அவரே தாமே வேதவொளியாக தர்மவொளியாக விவேகவொளியாக விளங்குகிறார்.

தருமம் அவருக்கு உயிர்மூச்சிற்கு மேற்பட்டது. அவருக்கு ராஜ்ஜியநாசம் வனவாஸம் சீதாவியோகம் முதலிய பற்பல மிகப்பெரிய கஷ்டங்கள் தோன்றின. இவ்வாறு மேலும் மேலும் கஷ்டங்கள் இருந்தபோதிலும் அவர் அக்னியை விடாமல் பிடித்திருந்தார்.

பலர் அவரை தருமத்தை விடச்சொன்னார்கள். ஆட்சியை ஏற்கச்சொன்னார்கள். தசரதன் கௌஸல்யை பரதன் லக்ஷ்மணன் அவரின் குரு வசிஷ்டர் மக்கள் ஜாபாலி யாவரும் அவரை ஆட்சியை ஏற்கச் சொன்னார்கள். ஆட்சியா? தருமமா? எனில் இத்தனை பேர்களாலும் அவர் மனம் மாறாமல் தருமத்திலேயே ஹிமயமலையைப்போல் உறுதியாய் நின்றார். தருமத்தையே ராமன் பொருட்டு விட எண்ணிய மற்றோர் யாவரையும் அதிலேயே நிறுத்தி வைத்தார். ராமன் பொருட்டு தருமத்தை விடமுடியாது. ராமன் பொருட்டு தருமத்தைக் கொள்ளத்தான் முடியும் என்றே அவர்கள் பிறகு உணர்ந்தனர்.

அவரிடம் இருந்த இந்திரன் அபாரமானவர். அகத்திலும் புறத்திலும் ராமன் இந்திரனால் சூழப்பட்டவர். திருடமான இடியைப் போன்ற மனோபலத்தாலும் இரும்பு போன்ற உடல்பலத்தாலும் ப்ராணசக்தியான வாயுதேவனாலும் அவர் உள் வெளித் தீயசக்திகளை ஒழிக்கிறார். உட்தீய சக்திகளான வ்ருத்திரர்களை ஒழிப்பதற்கு ஒருதாரணம். அவர் சீதையைவிட்டுப் பிரிந்திருக்கையில் உள்ளே தைன்யம் என்னும் தன்மை மிக அபரிமிதமாய் எழுந்து தன் வாழ்விலேயே ஒருகணம் நம்பிக்கையை இழந்தார். இவ்வித அபரிமித தைன்யம் என்கிற தீயது தன்னம்

பிக்கையையே ஒழிக்கவருகையில் அதை தன் மனோபலத்தால் அடித்து ஒழிக்கிறார். உயிரை வாங்கும் அபரிமிதமான தைன்யநிலையிலிருந்தும் அபரிமிதமான மனோபலத்தால் வெளியேறுகிறார்.

வெளித்தீய சக்திகளையும் நாசம் பண்ணுகிறார். ராவணன் கரன் வாலி முதலிய தீயோர்களை வதைத்து எங்கும் தெய்வீகமான தர்மராஜ்ஜியத்தை ஸ்தாபிக்கிறார். ஒளிமயமான ராமராஜ்ஜியத்தை அகமும் புறமுமாக ஸ்தாபிக்கிறார். அவரின் வீரம் போர் யாவும் தருமத்தின் பொருட்டு அமைகிறது. ஆதலால்தான் ராமாயணம் அவரின் கோபத்தையே அக்னி என்று கூறிவிட்டது. இவ்வாறு அவர்தான் போர்தெய்வமான வீரத்தெய்வமான வலிமையின் தேவனான இந்திரன்.

ஸோமம் அவரிடம் என்றும் ப்ரவஹிக்கிறது. இதயம் அவருக்கு என்றும் ரஸமயமானது. இதனால் அவர் சிறந்த கவி. ரஸிகர். மதுரமானவர். மழை கார்காலம் வஸந்தம் வாழ்வு சீதை இவர்கள் யாவரையும் இவர் ரஸிப்பது மிக அலாதியானது. மான்களையும் மயில்களையும் அருவிகளையும் ரஸிப்பவர். தன் வாழ்வை என்றும் தேன்மயமாகக் கொண்டிருந்தார். அயோத்யையில் இருக்கையில் நகரவாழ்வை ரஸித்தார். கானகம் வந்தபின் வனவாழ்வை ரஸித்தார். போர்களத்தில் வீரத்தை ரஸிக்கிறார். ஆச்ரமங்களிலே சாந்தியை ரஸிக்கிறார். அவரே கந்தர்வன். அவரே ஸோமன். அவரே அச்விகள். அவரே ஸரஸ்வதி. அவர் மதுரம். அவரின் வாழ்வும் மதுரம். அவரிடம் யாவும் மதுர.மதுரமே.

அவரின் இதயத்திலே ப்ரேமதாரை ப்ரவஹிக்கிறது. அது வறண்ட இதயமன்று. அது ஈரமான இதயம். பெருக்கெடுத்து ஓடும் இதயம். அந்த தாரையில் முழுகியவர்கள் பரதன் லக்ஷ்மணன் ஸுக்ரீவன் விபீஷணன் கௌஸல்யை தசரதர் முதலியோர்கள். அவரின் இதயதாரையில் ப்ரேமதாரையில் ஐக்கியமானவள் சீதை. அந்த தாரை கோஸலமக்களை நோக்கியும் உலகம்முழுவதும் உள்ள மக்களை நோக்கியும் அனைத்து ஜீவன்களிடமும் கரைபுறண்டு ஓடி பிரவஹிக்கிறது. இவ்வாறு அவர் பவித்திர விவேகம் கொண்ட பூதக்ஷனான மித்திரதேவன்.

ராமனை ஆங்காங்கே பலதேவர்களோடு உவமை

காட்டுகிறது ராமாயணம். ராமன் அறிவால் மஹர்லோக தேவதையான ப்ருஹஸ்பதிக்கு ஈடானவர். ஆற்றலால் இந்திரனுக்கீடானவர். ஆழத்தால் வருணனுக்கு ஈடானவர். ஸோமனைப்போல் ப்ரியதர்சனர். கந்தர்வனைப்போல் அழகியவர். இவ்வாறு ராமாயணம் உவமைகாட்டிப் பேசுகிறது. அவரே இந்திரன். அவரே வருணன். அவரே மித்திரன். அவரே ஸோமன். அவரே வாயு. அவரே எல்லாதேவர்களும். அவரே வேதம் முழுவதும் போற்றப்படும் மனிதன். தேவதத்துவங்கள் யாவும் ஒன்றுபடுத்தப்பட்டு எழும் மனிதன் ராமனே. இவரல்லவோ வேதத்தின் இலக்கு. இவரையே வேதம் கதறுகிறது. சரித்திரபுருஷன்- மஹாபுருஷன்- லக்ஷ்யபுருஷன்- அவதாரபுருஷன். அன்றாடவாழ்வை வேத முறையில் வாழ வழிகாட்டுவதற்கு ராமகதைபோல் பொருந்திய வேறொருகதையை கண்டிலேன். எளிதானது. மஹத்தானது. தூயது. மனிதர்களே! வேதத்தை வாழ எளிய உபாயத்தைக் கேளுங்கள். அது ராமனை வாழ்வதேயாகும். அதற்காக ராமகதையைக் கேளுங்கள். படியுங்கள். கலந்துரையாடுங்கள். சிந்தியுங்கள். சற்றும் அதை சுயப்போக்கில் ஒருக்காலும் மாற்றாமல் வால்மீகி கூறியபடி அப்படியே உள்ளது உள்ளபடி அறியுங்கள். அதை பின்பற்றுங்கள். இதுவே வேதவாழ்வு. இவ்வெளிய ஒளிமய உபாயத்தால் ஒளியை அடையமுடியும். ஒளியால்தான் ஒளியை அடையமுடியும்; இருளால் அன்று.

ராமனை உன் வாழ்வில் ஏற்றுக்கொள். அவரிடம் புகலிடம் பெறுவாய். அவர் நமக்கு ஒளியை தன் வாழ்வு மூலம் விளக்கப் பிறந்தவர். அவர் உந்தன் ப்ரபுவாயிருக்கட்டும். தூய்மையாயிரு. ஏனெனில் உன் ப்ரபு தூய்மையாய் உள்ளார். அவர் தூய்மையை விரும்புகிறார். அறம் செய்ய விரும்பு. ஏனெனில் அவர் அறவுருவாய் உள்ளார். அவர் அறத்தை விரும்புகிறார். அன்பனாய் இரு. ஏனெனில் அவர் அன்பனாய் இருக்கிறார். அவர் அன்பை விரும்புகிறார். வீரனாயிரு. ஏனெனில் அவர் வீரனாயிருக்கிறார். அவர் வீரத்தை விரும்புகிறார். உழைப்பாளியாயிரு. ஏனெனில் அவர் உழைப்பின் உருவாயுள்ளார். அவர் உழைப்பை விரும்புகிறார். ஆற்றலோடிரு. ஏனெனில் அவர் ஆற்றலோடிருக்கிறார். அவர் ஆற்றலை விரும்புகிறார். சாந்தமாயிரு. ஏனெனில்

அவர் சாந்தமாயிருக்கிறார். சாந்தத்தை விரும்புகிறார்.

உங்கள் ஒவ்வொருவரிடமிருந்தே ராமன் எழவேண்டும். நீங்கள் ஆத்மாராமர்களாயிருக்கவேண்டும். ரிஷியைப் பற்றிப்பேசினால் மட்டிலும் போதாது. ரிஷியாகவே ஆகவேண்டும்.

## WEBOLIM

### எனப்படும் நமது ராமகுடும்பத்தைப்பற்றி ஓரறிமுகம்:

இலக்கு: மாந்தர்களுக்கு அறநெறிகளை விளக்கி, உணர்ச்சிகளை பண்படுத்தி, அறிவுபூர்வமாக சிந்திக்கச்செய்து, பால், இனம், சாதி, சமயம் மற்றும் செல்வநிலைபோன்ற வேறுபாடுகள் உயர்வுதாழ்வுகளைப் பற்றிய குழப்பங்களை தெளிவாக அறிவுபூர்வமாகக் களைந்து மனித ஒற்றுமையை நிலைநாட்டி குடும்ப, சமுதாய, நாடு மற்றும் அகிலவுலகின் நன்மக்களின் நன்மையை நிலைநாட்ட முயல்வதாகும்.

இத்தன்மையில் யாவரையும் அறவழியில் சுயமாக சிந்தித்து விரும்பி வாழச்செய்து அதன்பயனாக யாவரின் உள் உறை ஏகவஸ்துவான பரமாத்மதரிசனத்தை அடைவித்தல்.

செயல்முறைகள்: இப்பணியின் ஆதாரசாஸ்திரமான வேதத்தினுடையவும் வேதத்தின்படி வாழ்ந்த நிறைமனிதனான ராமனின் வரலாற்றை விவரிக்கும் வால்மீகியின் ராமாயணத்தினுடையவும் உண்மைப்பொருளை உள்ளது உள்ளபடி கொணர்ந்து விளக்குதல். மற்ற நூல்களிலுமுள்ள அறநெறிக்கருத்துகளையும் விளக்குதல்.

இதன் பொருட்டு

அ. பல்வேறு மொழிகளில் நூல்களையும் மாத இதழ்களையும் வெளியிடுதல்.

ஆ. ஆடியோ வீடியோ கேஸெட்டுக்கள்மூலம் அறநெறிக் கொள்கைகளை ப்ரசுரித்தல்.

இ. Website \ Internet மூலம் அறநெறிக் கருத்துக்களை மனிதஇனமே அடையப்பெற வழிவகுத்தல்.

ஈ. வேத / ராமாயண மற்றும் கலை / விஞ்ஞானரீதியான வகுப்புகளை நடத்துதல்.

உ. ராமகுடும்பஜயந்தி (இயக்கத்தின் ஆண்டுவிழா), ராமஜயந்தி, ஹனுமஜ்ஜயந்தி முதலிய விழாக்களைக் கொண்டாடுதல்.

ஊ. ஊர் ஊராக, க்ராமம் க்ராமமாக, நகரம் நகரமாக, பட்டிதொட்டிகளிலும்கூட வேதம் ராமாயணம் இவைகளைச்சார்ந்த அறநெறிச்சொற்பொழிவுகளையும் பாராயணங்களையும் மற்றபல நிகழ்ச்சிகளையும் நிகழ்த்துதல்.

இவ்வாறு அறநெறிகளை ப்ரசாரம் செய்து விளக்குவதோடு மட்டுமல்லாமல் அவைகளை கடைபிடிப்பதும் அவசியமாகிறது. வேதத்தின் ஸித்தாந்தப்படி கடவுள் அறநெறிகளாலேயே ப்ரீதியடைகிறார். கடவுள் சுயநலமற்றவர். மிகவும் தூய்மையானவர். அவரை அடைவதற்கு இதயத்தூய்மையே வேண்டும். இவ்விதயத்தூய்மையோ அறநெறிகளாலேயே வருகிறது. அறநெறிகள் கடவுளைப்பெற வழியாகும். அவைகளை தன் சுபாவமாகக்கொண்ட கடவுள் அவைகளை எளிய முறையில் உலகுக்கே விளக்க உலகுக்கு கருணைகாட்டி ராமனாய் அவதரித்தார். இவ்விதம் அறநெறிகளை தன் ப்ராணனாய் கொண்ட கடவுள் அவைகளை கடைபிடித்து இதயத்தூய்மையை பூர்ணமாய் பெற்றவனுக்கு தன்னையே தருகிறார். கடவுளை அடைய அறநெறிகளே வழியாம். அவைகளை கடைபிடிக்கும்பொருட்டு -

அ. துயருறும் ஏழைமக்கட்கு உதவி, அவர்களுக்கு சுயமாக முன்னேற உதவி, அறவழியில் நடக்கும் நல்லோராக்குதல்.

ஆ. பசி பிணி முதலியவைகளால் கஷ்டப்படும் அப்பாவி நடுநிலை நன்மக்களுக்கு உதவுதல்.

இ. கலைரீதியாகவும், விஞ்ஞானரீதியாகவும் மறையின் அறத்தை வளர்க்க நூலகம், மைதானம், விஞ்ஞான ஆய்வுக்கூடம், மருத்துவக்கூடம், மூலிகைத்தோட்டம், போன்றவற்றை நிலவுதல். தொழில்முன்னேற்றத்திற்கு பலவழிகளில் உதவுதல்.

ஈ. வீடுகள் வீதிகள் கிராமங்கள் தோரும் சமூகத்தின் பொதுமக்களுக்கு நேரடியாக சென்று நல்வாழ்வுக்கான Health camp போன்றவற்றை நடத்தி அவர்களின் வாழ்வை மேம்படுத்த முயலுதல்.

உடல் உணர்வு அறிவு பொருளாதார சமுதாயரீதிகளில் அவர்களை மேம்படுத்த முயலுதல்.

உ. அகிலவுலகின் நன்மையின் பொருட்டு கடவுளை ப்ரார்த்தித்து வழிபடுதல்.

இவ்விதச்செயல்பாடுகளில் சிலவற்றை இன்று நடத்தி வரும் நமதியக்கம் மற்றும் பலவற்றை நடத்த இருக்கிறது. இவ்வியக்கத்தின் இலக்கையும், இயக்கம் நடத்திவரும் சில செயல்களையும், நடத்த இருக்கும் பல செயல்களையும் விரும்புபவர்கள் இதற்கு உதவிபுரிந்து பயன்பெறுமாறும் கடவுளின் அன்பிற்கும் அருளுக்கும் பாத்திரமாகும்படியும் கேட்டுக்கொள்கிறோம்.

இயக்கத்தைப்பற்றி மேலும் தெரிந்துகொள்ள விரும்பினால் தொடர்புகொள்ளவேண்டிய விலாசம் -

WEBOLIM
NO. 3 SRIMATHY ENCLAVE
RAGHAVENDRA PURAM
SRIRANGAM
TRICHY
TAMILNADU
S.INDIA
E MAIL விலாசம் - valmiki77@ yahoo.com




எமது வெளியீடுகள்:

| | |
|---|---|
| ராமத்துவத்தின் ஆரம்பம் | R S. 5 |
| உண்மை வழி | R S. 3 |
| DARSHAN | R S. 50 |
| மறையின் மறைப்பொருள் | R S. 5 |

இவைகளைத்தவிர ராமாயணம் முழுவதும் ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ்வசனமும் ஸங்கீதத்துடன் ஆடியோ கேஸெட்டுகளாக வெளியாகியுள்ளது. R S. 2700